பெரியபுராணத்தில்

# திருக்குறளின் தாக்கம்



இ. ரீட்டாமேரி

காருண்யா

இந்த நூல் அச்சிட்டு
வெளியிடுவதற்கு நிதிஉதவி நல்கிய
திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு
நன்றி!

பெரியபுராணத்தில்

# திருக்குறளின் தாக்கம்

இ. ரீட்டாமேரி
விரிவுரையாளர்

காருண்யா பதிப்பகம்
அன்னை இல்லம்
சிவபுராணி, திருலோகி - அஞ்சல்
தஞ்சாவூர் - 609 804

நூலின் பெயா பெரிய புராணத்தில் திருக்குறளின் தாக்கம்

முதற் பதிப்பு . 2007

படிகள் 1000

உரிமை : ஆசிரியருக்கு

வெளியீடு : காருண்யா பதிப்பகம்
அன்னை இல்லம்
சிவபுராணி, திருலோகி - அஞ்சல்
தஞ்சாவூர் மாவட்டம் - 609 804

பக்கங்கள் : 172

விலை : ரூ. 90/-



---

அச்சாக்கம் : ஸ்ரீநிதி ஆப்செட் பிரிண்டர்ஸ்,
40, அல்லிமால் தெரு,
திருச்சிராப்பள்ளி - 8.
செல் : 94431 - 83394

முனைவர் **ஒய். டென்னிசன்**
தமிழாய்வுத்துறைத் தலைவர்
(மற்றும்) துணை முதல்வர் (ஓய்வு)
பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி A+)
திருச்சிராப்பள்ளி - 17.

# அணிந்துரை

திருமதி இ.ரீட்டாமேரி அவர்கள் 14 ஆண்டுகள் கல்லூரியில் பணியாற்றிய அனுபவம் கொண்டவர்கள். என்னுடைய நெறி காட்டுதலில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொண்டுவரும் இ.ரீட்டாமேரி தன்னுடைய எம்ஃபில். பட்ட ஆய்வினை 'பெரிய புராணத்தில் திருக்குறள் தாக்கம்' என்ற தலைப்பில் நூலாக வெளியிடுவது அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இது ஒரு எம்ஃபில் பட்ட ஆய்வாக இருந்தாலும் முனைவர் பட்ட ஆய்வுக்கு இணையாகச் செய்யப்பட்டுள்ளது என்பது பாராட்டுதலுக்குரியது. இந்த நூல், பெரியபுராணப் பகுப்பாய்வு, திருக்குறள் பகுப்பாய்வு, பெரிய புராணத்தில் திருக்குறள் அறத்துப்பாலின் தாக்கம், பெரியபுராணத்தில் திருக்குறள் பொருட்பாலின் தாக்கம், பெரியபுராணத்தில் திருக்குறள் காமத்துப் பாலின் தாக்கம், பெரியபுராணத்தில் திருக்குறள் கருத்து வளர்ச்சி என ஆறு இயல் களில் எழுதப் பெற்றுள்ளது. தாக்கம் என்பதை மேலோட்டமாகப் பார்க்காமல் ஆழமாகவே ஆசிரியர் செய்திருக்கிறார்.

பெரியபுராணத்தில் திருக்குறளின் தாக்கம் பற்றிப் பேசும் ஆசிரியர் பெரியபுராணத்தின் சிறப்பியல்புகளையும், பெரிய புராணத்தின் முக்கியக் கூறுகளையும் வெளிப்படுத்தியிருப்பது பாராட்டுதலுக்குரியது. சேக்கிழாரின் காலத்தை ஆசிரியர்

வரையறை செயகிறார். வறையறை பழைய செய்தியாக இருநதாலும், அதற்குத் துணை செயகின்ற வகையில் ஏராளமான நூற்களிலிருநது மேற்கோள்களை ஆசிரியர் காட்டியிருப்பது மிகவும் பயனுடையது. ஆசிரியருக்கு நிறைய வாசிக்கும் பழக்கம் உணடு இநதிரா காந்தி மகளிர் கல்லூரியில் பணியாற்றிய காலததில நூலகத்தாரால் Best Reader Award இருமுறை வழஙகபபடடிருககிறது என்பதும் இங்கே குறிப்பிட வேண்டிய செயதியாகும.

பெரியபுராணத்திற்கு இதுவரை வெளிவந்துள்ள அனைத்து ஆயவுகளையும் ஆசிரியர் சொல்லியிருப்பதோடு பெரியபுராணத் திற்கு வந்துள்ள எல்லா பதிப்புகளையும் கூறியிருப்பது ஆய்வாளர் களுககு மிகவும் பயனுள்ள செய்திகளாகும்.

இககாலத்தில் மகளிருக்கு இருக்கும் சுதந்திரததை விட சேக்கிழாா வழங்கிய சுதந்திரம் பலவகையிலும் மேம்பாடு உடையது என்பதை ஆசிரியர் நன்குவிளக்கிச செல்கிறார். ஆதிசைவ மரபில் தோனறி அரசரிடத்தில் வளர்ந்த சுந்தரர் கணிகையர் குலத்துப் பரவையாரையும், வேளாண்குடி மரபுச் சங்கிலியாரையும் மணந்த தாகக் காடடிய சேக்கிழார் சாதி வேற்றுமையை அகற்றும் பணியைச் செய்திருபபதாக நூலாசிரியர் சிறப்பாகக் காட்டியிருக்கிறார்.

பெரியபுரண மகளிர் சமயத் துறையில் தன்னிச்சையாக முதன முதலில் செயல்பட்ட திறன்களும், அவர்தம் தீரமிக்க செயலகளும், உயர்ந்த குறிக்கோள்களும், அவர்தம் சுதந்திரமும் அழகுறக் காட்டப் பெற்றுள்ளன.

சங்க காலத்தில உள்ள ஊடல் முறைவேறு. திருக்குறளில் உள்ள ஊடல் முறைவேறு என்பது வேறு படுத்திக் காட்டப்பட்டிருக்

கிறது. திருக்குறள் மூலப்பதிப்புக்கள்,திருக்குறள் பரிமேலழகா உரைப்பதிப்புக்கள், திருக்குறள் மொழிபெயர்ப்புகள் ஆகிய வற்றைக் கொடுத்திருப்பது மிகவும் பயனுள்ளது.

பெரியபுராணத்தில் திருக்குறளின் தாக்கம் பற்றி ஆசிரியர் கூறும்போது செய்திகளைச் சுவைப்படக் கொடுத்திருக்கிறார். ஒரு குறளுக்கு இலக் கணமாக வாழ்ந்த நாயன்மார்களின் வாழ்க்கை சித்தரிக்கப் பட்டிருக்கிறது. சேக்கிழாரின் பலபாடல்களுக்கு ஒரு குறல் கருவாக அமைந்திருக்கும் பாங்கு காட்டப்பட்டிருக்கிறது. திருவள்ளுவரின் சிந்தனை எப்படிச் சேக்கிழாரிடம் வளர்ச்சி பெற்றிருக்கிறது என்பதும் விளக்கப்பட்டிருக்கிறது. மேலும் திருக்குறளை எப்படி எப்படியெல்லாம் சேக்கிழார் தன்னுடைய கவிதைகளில் எடுத்தாண்டிருக்கிறார் என்பதும் இந்நூலில் அழகுறக் காட்டப்பட்டுள்ளன.

இந்த நூலின் நடை மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. நூலை எடுத்தால் படித்து முடித்துவிடவேண்டும் என ஆவலைத் தூண்டும் வகையில் செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. இ.ரீட்டாமேரி 'பெரியபுராணத்தில் திருக்குறள் தாக்கம்' என்ற பெயரில் எழுதியுள்ள இந்த நூல் உண்மையிலேயே பெரியபுராணத்திற்குப் பெருமை சேர்க்கின்ற ஒரு புதியவரவு. இந்நூல் தமிழ் இலக்கிய உலகிலும், தமிழ் ஆய்வுத் தளத்திலும் நல்ல வரவேற்பைப பெறும் என்பதில் ஐயமில்லை. ஆய்வாளர் இ.ரீட்டாமேரி இது போன்று இன்னும் பல நல்ல நூல்களைக் கொண்டுவர என்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

***- முனைவர் ஒய்.டென்னிசன்***

மேஜா. முனைவா **ச.சோமசுந்தரம்**
இணைப் பேராசிரியர் & ஆயவு நெறியாளா
பிஷப் ஹீபர் கல்லூரி (தனனாடசி A+)
திருச்சிராப்பள்ளி - 17.

# வாழ்த்துரை

ஈறாயிரம் ஆண்டுகாலத் தமிழிலக்கியப் பரப்பிற்கென்று பல்வேறு சிறப்பான தனித்தன்மைகளுண்டு. தமிழ்ச் சமூகத்தின் அரசியல் சமூகப் பொருளாதாரப் பின்னணியும், சமயங்கள் ஏற்படுத்திய தாக்கமும் இலக்கிய பரிணாமத்தில் முக்கிய விளைவு களாகியுள்ளன. அவ்வக்காலச் சமுதாயச் சூழலுக்கேற்ப, தேவைக் கேறற இலக்கியக் கருத்தாக்கங்களும், அக்கருத்தாக்கங்கள் அவற்றுக்கான வடிவங்களையும் அமைத்துக் கொள்கின்றன. சஙககால முதல இக்காலம வரையான இலக்கியக கருத்தாக்கங் களில், முந்தைய இலக்கியங்களின் கருததுக்கள பிறகால இலக்கியங களில் செல்வாக்கு செலுத்துவது இயல்பே. அந்த வகையில் பெரிய புராணத்தை பகுப்பாய்வு செய்துள்ள பேராசிரியர் இ.ரீட்டாமேரி பெரியபுராணத்தில் சங்க இலக்கியஙகள், திருக்குறள் ஏற்படுத்தி யுள்ள தாக்கத்தினைப் புலப்படுத்தும் முயற்சியாக இந்த ஆய்வு நூலைப் படைத்துள்ளார்.

பெரியபுராணத்தைப் பகுப்பாய்வு செய்து நூலை நன்கு அறிமுகப் படுத்தியுள்ளார். சேக்கிழாரது வரலாற்றைத் தெளிவுபட எடுத்துரைத்து, இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்துச் சமுதாய சமய நிலைமை விரிவுபட விளக்கியுள்ளாா. இரண்டு காண்டங் களையும், பதினமூனறு சருக்கங்களையும் கொண்ட பெரியபுராண நூலின் இயல்புகளையும், பொருட்பகுப்பு முறைகளையும், வடிவப்

பாங்கினையும், நூல் புலப்படுத்தும் பண்பாட்டு விழுமியங்களையும் நம் உள்ளம் கொள்ளும்வண்ணம் பதிய வைக்கிறார். உலகப் பொது மறையாக விளங்குகிற ஒப்பற்ற நீதி நூலான திருக்குறளைப் பகுப் பாய்வு செய்துள்ளதோடு திருக்குறள் பிற நூல்களில் செலுத்தியுள்ள செல்வாக்கினையும் சான்றுகளோடு பட்டியலிட்டுள்ளார்.

நுணுக்கமான பல்வேறு செய்திகளைக் கொண்டு காட்டும் போது வாசிப்போருக்கு சிந்தனை ஊற்றுக்கள் திறப்பது உண்மை. பெரியபுராணத்தில் திருக்குறளின் அறத்துப்பால் ஏற்படுத்தியுள்ள தாக்கமும், நாயன்மார்களின் வாழ்க்கையில் பொருட்பால் ஏற்படுத்தி யுள்ள தாக்கமும், இல்வாழ்க்கை பற்றிய செய்திகளில் காமத்துப்பால் ஏற்படுத்தியுள்ள தாக்கமும் நூலாசிரியரால் சிறப்பாக விளக்கி யுரைக்கப்பட்டுள்ளன.

தோண்டத் தோண்ட ஊறும் மணற்கேணி போல வள்ளுவத் தின் அருங் கருத்துக்கள் பிற்கால இலக்கியங்களில் வளர்ச்சி பெற்று, இலக்கிய ஆக்கம் பெற்றுக் கற்போர்க்கு நனிபயன் நல்கி வருகின்றன. பெரியபுராணத்திலும் திருக்குறளின் கருத்து நிலை வளர்ச்சியைச் சேக்கிழார் முன்னெடுத்துச் சென்றுள்ளார் என்பதை பேராசிரியர் இ.ரீட்டாமேரி நூல்வழி நிறுவுகிறார். பழந்தமிழ் இலக்கியங்களை செறிவாகக் கற்று, முறையாகப் புரிந்துகொண்டு, ஒப்ப வைத்து நோக்கும்போதுதான் இத்தகைய நூல்களை உருவாக்க இயலும். அத்தகைய முயற்சியில் ஈடுபட்டு நல்ல தமிழ் நூலைப் படைத்துள்ள இ.ரீட்டாமேரி அவர்கட்கு பாராட்டுக்கள். வாழ்த்துக்கள். மென்மேலும் நூலாக்கங்கள் செய்து இலக்கிய உலகுக்குக் கொடை நல்குவீராக.

*- மேஜர். முனைவர் ச.சோமசுந்தரம்*

# நன்றியுரை

இநநூல வெளிவரும் இந்நேரத்தில் எனக்கு உதவிய அன்பு நெஞ்சங்களை நன்றியுடன் நினைத்துப் பார்க்கின்றேன.

இந்நூலினை வெளியிடுவதற்கு நிதியுதவி வழங்கியருளிய திருமலை, திருப்பதி தேவஸ்தானத் திற்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எப்பொழுதும் அமைதியான வழியில் ஆலோ சனை நல்கி, நெறிகாட்டி, ஆதரவு அளித்து இநநூலுக்கு அணிநதுரை வழங்கிய என் பேராசிரியர் முனைவர் ஒய்.டெனனிசன் அவாகளுககு என நன்றியைத் தெரிவிததுக் கொள்கிறேன்.

என் கலவிப் பணியில் நலவழிக்காடடி, இநநூலுக்கு வாழததுரை வழங்கிப் பெருமைபடுத்திய பேராசிரியர் மேஜா. முனைவர் ச.சோமசுந்தரம் அவாகளுக்கு என நன்றி.

தாயினும் சாலப்பரிந்து எனக்கு எபபொழுதும் ஆக்கமும் ஊக்க மும் அளித்துவரும் என சிறிய தந்தை முனைவர் எஸ்.ஆரோக்கியசாமி மேனாள் சட்டமன்ற உறுப்பினர் அவர்களுக்கு என நன்றி.

என்னை கல்வி கற்க வைத்து அவையத்து முந்தி இருக்கச் செய்த என் தாய் தந்தையர்க்கு என் நன்றி

மலர்களைக் காணிககையாக்கு கின்றேன். எனக்கு ம்தன்முதலில கல்விக்கண திறநதிட்ட தந்தையும ஆசானுமாகிய திரு.ஞானசேகரன் அவர்களுககு என நன்றி

இந்நூல் வெளியிடுவதற்கு எலலா வகையிலும் உதவிசெய்த என் சகோதரர் விரிவுரையாளா இ.மார்ட்டின் ஆரோக்கியராஜுக்கும், தம் பணிகளுக் கிடையே இந்நூல் சிறப்புற அமைய பிழை திருத்தம் செய்து உதவிய சகோதரர்கள் விரிவுரையாளர் முனைவர் ப.கிருஷ்ணன், முனைவர். இரா.மகிழேந்தி ஆகியோருக்கும் என் நன்றி.

சிறப்பாக இந்த நூலினை அச்சாக்கம் செய்து வடிவமைத்துள்ள ஸ்ரீநிதி ஆப்செட் பிரிண்டர்ஸ உரிமையாளர் திரு.பொன்.செந்தாமரைக் கண்ணன் அவர்களுக்கு என நனறி.

மேலும் பலவேறு நிலைகளில துணைநின்ற அன்பு உள்ளங களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

– இ. ரீட்டாமேரி

# சுருக்க விளக்கக் குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | இலம் | – | இலம்பகம் |
| 2. | கா | – | காதை |
| 3. | காண் | – | காண்டம் |
| 4. | நூற் | – | நூற்பா |
| 5. | ப | – | பக்கம் |
| 6. | பக் | – | பக்கங்கள் |
| 7. | பா | – | பாடல் |
| 8. | பாசு.எ. | – | பாசுர எண் |
| 9. | பொருள் | – | பொருளதிகாரம் |
| 10. | வ | – | வரி |
| 11. | வரி | – | வரிகள் |

# பொருளடக்கம்

# நுழையுமுன்

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ கொணட தமிழநாடு

என்று பாரதியார் போறறுவாா. தெய்வப் புலவர் திருவள்ளுவர் உலக மக்கள் அனைவருக்கும் ஏற்ற வாழ்வியல் கருததுக்களைக் கூறும் நூலாகத் திருக்குறளைப் படைத்துள்ளார்.

'பக்திசுவை நனி சொடடச சொட்டப் பாடிய கவி வலவ' என்று சேக்கிழாரைப் பாராட்டுகிறார் தெ.பொ.மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள். சேக்கிழாரின் புலமையைக் கண்டு வியந்த சோழ வேந்தன் அவரை முதல அமைச்சராக்கி, உத்தம சோழப் பல்லவ ராயன் எனனும் பட்டம் அளித்துச் சிறப்பித்தான்.

அனபு. பணபு. பகுததுண்ணல், குறிக்கோளுடைமை போனற பணபுகள் மானுடததை உயர்த்தி இறையருளுக்கு உரியதாககும் நறகுணஙகளாகும இதனபடி வாழநது ெழிகாடடிய சான்றோாகள், கண்டநெறி, கொணட கொள்கை இசசமூகததிறகு வழிகாட்டுவனவாக அமைகின்றன. தமிழ் மண்ணிலே பிறந்து தமிழ் மண்ணிலேயே பக்திநெறி தழைக்கச் செய்த நாயன்மார்களின் வாழவினைப் படைததுக காடடும் இலக்கியமே சேக்கிழார் அருளிய பெரிய புராணமாகும்.

இறையருளுக்குச சாதி வேறுபாடில்லை. அவர்தம் தொழில் தடையாக நிற்பதில்லை. உண்மை உள்ளமும், தூய தொண்டுமே இறையருளைத் தருவன என்னும் உண்மையைப் பெரியபுராணம் நிலை நாட்டுகின்றது. சமய நூல்களும், அற நூல்களும் நெருங்கிய தொடர்புடையன. அத்தகைய முறையில் பெரியபுராணம் எனும் சமய நூலில் அறநூலாகிய திருக்குறளின் கருத்துக்கள் பொதிந்துள்ளது. அதனைக் கண்டு காட்டும் ஆர்வமே இந்நூலாக உருப்பெற்றுள்ளது.

# 1

# பெரியபுராணப் பகுப்பாய்வு

சேக்கிழார் அருளிய நூலினை, பெரியபுராணம் என்றும் திருத்தொண்டர் புராணம் என்றும் வழங்குவர். ஆசிரியர் இவ்விரண்டினில் தம் நூலுக்கு இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பதே. இதனை, நூற்பாயிரத்துள் அவரே,

**இங்கித னாமங் கூறி னிவ்வுல கத்து முன்னாட்**
**டங்கிரு ளிரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற**
**பொங்கிய விருளை யேனைப் புறவிருள் போக்கு கின்ற**
**செங்கதி ரவன்போ னீக்குந் திருத்தொண்டர் புராணமென்பாம்**[1]

எனக் கூறியவாற்றான் நன்கு உறுதிசெய்ய இயல்கின்றது.

மற்றொரு வழக்காகிய பெரியபுராணம் என்பது அளவால் அன்று, அதாவது, செய்யுள் தொகையால். இதனினும் பெரியனவாகக் கந்தபுராணம் முதலாகப் பல உள்ளன. ஆனால், இது பொருளால் பெரியது. பெரியது யாது என்று கேட்ட வேலனுக்கு அவ்வைப்பிராட்டி **பெரிது பெரிது புவனம் பெரிது** என்று தொடங்கி, நிறைவில் **இறைவனோ தொண்டர் உள்ளத் தடக்கம், தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே** என்று பாடினார் தொண்டருடைய தொண்டின் பெருமையைப் பாடுவதால் இந்நூல் பெரியபுராணம் எனப் பெயர் பெற்றது. சிவபெருமானே தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் என்று திருத்தொண்டத் தொகைக்கு அடியெடுத்துக் கொடுத்தமையால், இத்தனை அடிமைத்திறத்துக்கும் மூலமான தொண்டர் பெரியவராவார், அவர் வரலாறே பெரியபுராணம் என வழங்குவதாயிற்று என்கிறார் மு.அருணாசலம்.[2]

செயற்கரிய செய்வர் பெரியர் என்ற திருக்குறள் கருத்திற்கு இசைய, எளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்த பெருமக்களே திருத்தொண்டத்தொகையில் போற்றப்பெற்ற சிவனடியர்களாதலின், அவர்களது வரலாறுகளை விரித்துரைக்கும் திருத்தொண்டர்புராணமாகிய இந்நூல் பெரியபுராணம் எனப் பெயர் பெறுவதாயிற்று.

நூலின் பாயிரப்பகுதியில் எடுக்கும் மாக்கதை இன்றமிழ்ச செயயுளாய, நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திட[3] என்று சேக்கிழார் குறிப்பிட்டுள்ளதால் மாக்கதை என்பதைத்தான் (மாக் கதை-பெரியகதை) பெரியபுராணம் என்று வழங்கி வருவதாகக் கொள்ளலாம்.

கநதபுராணத்தினை அறுமுகம் உடையவோர் அமலன் மாக கதை[4] என்று கசசியப்பரும் சுட்டியுள்ளார். அன்றியும், பெருங் கதை என்னும் காபபியததைக் கொங்குவேள் மாக்கதை என்று கூறுதலும் ஈண்டு ஒப்பு நோக்கததக்கது.

மேறகூறியவாற்றான் பெரியபுராணம் என்பது சிறப்பு நோககியே வழஙகி வந்திருக்கிறது என்பதும் அதுவே, இன்று பெயராகி நிலைதது விட்டது என்பதும் தெளிவாகிறது.

**நூலாசிரியர்**

சேககிழா ரது வரலாற்றை விரித்துக்கூறும நூல் திருத் தொணடர் புராணா வரலாறு அல்லது சேககிழார் புராணம ஆகும். இதைப பதினானகாம் நூற்றாணடுத தொடககததில், சைவ சமயச சந்தான ஆசாரியருள் ஒருவராய விளஙகிய உமாபதி சிவாசசாரியா இயற்றியுள்ளார். இது நூற்று மூன்று செய்யுட்களால் இயன்றது. இதுவே, சேக்கிழார் வரலாற்றைக் கூறவந்த முதல் நூலாகும்.

சேக்கிழாா, தொண்டை நாட்டின் குன்றத்தூரில் சைவ வேளாளர் மரபில் தோன்றியவர். அருண்மொழித்தேவர் என்பது இயற்பெயர். சேககிழார் என்பது குடிப்பெயர். சேக்கிழார் சிறந்த அரசியல் அறிவு வாய்க்கப் பெற்றமையால் அநபாயச்சோழன் அவரைத் தனது முதலமைச்சராகக் கொண்டான். உத்தம சோழப்பல்லவாாயன் என்ற பட்டமும் கொடுத்தான்.

சேக்கிழாா சோழநாட்டுத் திருநாகேச்சரத்தில் எழுந்தருளி யுள்ள பெருமானிடம் ஈடுபாடு கொண்டார். தம் ஊராகிய குன்றத்தூரில் இபபெருமானுக்குத் திருக்கோயிலமைத்துத் திருநாகேச்சரம் என்று பெயரிட்டு மகிழ்ந்தார். நாள்தோறும் பூசைகள் நடைபெற நிவந்தங்கள் பல அளித்தார்.

சமணக் காப்பியமாகிய சீவகசிந்தாமணியில் சிந்தை செலுத்தினான் சோழன அநபாயன். அரசன் எவவழி குடிமககள அவவழி என்பது பழமொழி. மக்களும் சிந்தாமணியில் ஈடுபாடு கொணடு, அந்நூல் விரிககும் சமண சமயத்தைப் போற்றினா. அரசனை உண்மை நெறியில் திருததல் அமைச்சர் தம் கடமைகளுள் ஒன்று. ஆதலின் அரசனிடம் சேககிழார், சமணர் செய்த அப்பொய் நூலால் இமமைககும் மறுமைக்கும் பயனில்லை. சிவ கதை ஒன்றே இருமைக்கும் பயனளிக்க வல்லது என்றார். அது கேட்ட அரசன் அச்சிவகதை எது என வினவினான. சேக்கிழார், அடியார் வரலாறுகளைத் தொகை வகைகளைத துணையாகக் கொண்டு விளங்கவுரைததார். அதனைக்கேட்டு மகிழந்த மன்னன, இவவரலாறுகளைப் பெரியதோர் காவியமாகப் பாடப் பணித்தான.

சேக்கிழார், தில்லைச் சிற்றம்பலவனை வணங்கி வேண்ட, இறைவன் உலகெலாம என்று அடியெடுத்துக் கொடுத்தார். அதனையே தொடக்கமாகக் கொண்டு சேக்கிழார் புராணத்தைப் பாடி முடித்தார். தில்லை ஆயிரங்கால் மண்டபததில் மன்னன் முன்னிலையில் தம் நூலை அரங்கேற்றம் செயதாா. அநபாயன் தொண்டர் சீர்பரவுவார் என்ற சிறப்புப் பட்டததை நல்கிச் சிறபபித்தான். சேக்கிழார் புராணம் விரிததுரைக்கும் சேக்கிழார் வரலாற்றுச் சுருக்கம் இது.

இவ்வரலாறறுச் செய்திகள் பலவற்றை நிறுவக் கல்வெட்டு முதலாகிய அகச்சான்றுகள் கிடைக்கின்றன. எனவே, சேக்கிழார் புராணம் விரித்துரைககும் இவ்வரலாறு ஏறறுக் கொள்ளக கூடியதே என்கிறார் மு.அருணாசலம்.[5] நூலாசிரியர் வரலாறு குறித்து வேறு தெளிவான வரலாற்றுச் சான்று ஏதும் அறியப் படாமையின், மேற்குறித்த சேக்கிழார் புராண வரலாற்றை ஏற்க வேணடியுள்ளது.

காலம்

சேக்கிழாா வாழநத காலததைப பறறிப் பல்வேறு கருத்துக்கள் ஆராயசசி அறிஞர்களிடையே நிலவுகின்றன

ஆய்வாளர்கள் தத்தமக்குக் கிடைத்த சான்றுகளைக் கொண்டு வெவ்வேறு கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

1 முதல் இராசேந்திர சோழன் காலம் (கி.பி.1012-1044) என்று செந்தமிழ் - தொகுதி இரண்டில் கூறப்பட்டுள்ளது.[6] இதனை சோமசுந்தர தேசிகர் சைவசிகாமணிகள் இருவர் என்ற நூலில் கூறியுள்ளார்.[7]

2 முதல் குலோத்துங்க சோழன் காலம் (கி.பி.1070-1120) என்று அ. கோபிநாதராவ் சோழ வமிச் சரித்திரச் சுருக்கத்தில் குறிப்பிட்டுள்ளார்.[8] இக்கருத்தையே கா.சுப்பிரமணியபிள்ளையும் வழிமொழிந்துள்ளார்.[9]

3 இரண்டாம் குலோத்துங்க சோழன் காலம் (கி.பி.1113-1150) என்று மு.இராகவையங்கார் குறிப்பிட்டுள்ளார்.[10] இதனையே மா.இராசமாணிக்கனார்,[11] சி.கே.சுப்பிரமணிய முதலியார்,[12] மு.அருணாசலம்[13] முதலானோரும் உடன்பட்டுள்ளனர்.

4.மூன்றாம் குலோத்துங்க சோழன் காலம் (கி.பி.1176-1218) என்று ஔவை சதாசிவ பண்டாரத்தார்,[14] சு.வெள்ளைவாரணர்,[15] முதலியோர் கூறியுள்ளனர்.

1.கோயமுத்தூர் ஜில்லா முத்தூர்ச் சிவாலயத்தில் வீரராஜேந்திர சோழனின் நான்காம் ஆட்சியாண்டில் (இவன் ஆட்சிக் காலம் 1207-1252) பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்றில், உத்தம சோழப் பல்லவராயனுடைய மைந்தர் திருநந்தா விளக்கு வைத்த செய்தி குறிக்கப்பெற்றுள்ளது. இங்குக் குறிக்கப்பட்ட வீரராசேந்திரன் கங்கைகொண்ட சோழன் மகன் வீரராசேந்திர சோழனே என்றும், உத்தமசோழப் பல்லவராயர் என்பார் பெரிய புராண ஆசிரியராகிய சேக்கிழாரென்றும், ஆகவே சேக்கிழார் வீரராசேந்திர சோழன் காலத்திற்கு முன்னர் கங்கைகொண்ட சோழன் காலத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்றும் சிலர் எழுதினர்.[16]

மேற்கூறிய கருத்தை மு.இராகவையங்கார் மறுத்துள்ளார்.[17] முத்தூர்ச்சாசனத்தில் சொல்லப்படும் வீரராசேந்திரன் என்பான்

(கி.பி.1207-1252) கொங்கு நாட்டையாண்ட கொங்குச் சோழன என்பதும் இவன் தனக்கு முன் (கி.பி.1149-1163) கொங்கு நாட்டில் ஆட்சிபுரிந்த தன் முன்னோனாகிய குலோததுங்க சோழ தேவன் தன் பெயரால அமைதத கோயிலுககு நிவநதம் வழங்கி யுள்ளான் என்பதும் முததூர்ச் சாசனஙகளால் அறியப்படுதலின இவனை முதற குலோத்துங்க சோழனுக்கு முன சோழ நாடடை ஆண்ட வீரராசேந்திர சோழனாகக் கொளளுதல் பொருந்தாது. கொங்குச்சோழா கல்வெட்டில் காணப்படும் உத்தமசோழப பல்லவராயன் என்னும் பெயர் சேககிழாரைக் குறித்ததன்று என்றும் மறுத்துள்ளார்.

2.சாசன ஆராய்ச்சி வல்லவராய் விளங்கிய அ.கோபிநாத ராவ், சோழவமிச சரித்திரத்தில் அநபாயன் என்ற சொல லாட்சியை எடுத்துக் காட்டி இவன் (கி.பி.1079-1120) அரசாணட முதறகுலோத்துங்க சோழனே என்று குறிப்பிட்டுள்ளார் இக்குலோத்துங்கன், பேரம்பலம் பொன் வேய்ந்த செய்தியைத திருப்பராய்த்துறை, திருமாணிகுழிச் சாசனங்கள் கூறுகின்றன எனறும் குறித்துள்ளார்.[18] இவர் கூற்றைப பினபற்றி, கி.பி.1930 இல தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய கா.சுப்பிரமணிய பிள்ளையும் இவர் கூற்றுக்கு உடன்பட்டுள்ளார்.[19]

மேற்கூறிய கருததைக் க.வெள்ளைவாரணார் மறுத்துள ளார்.[20] சேக்கிழாா தம காலத்துச் சோழவேந்தனைத் தம் நூலுள அநபாயன் என்ற சிறப்புப் பெயரால் சிறப்பித்துப் போற்றியுள ளார். அநபாயன என்னும் இப்பெயர் இரண்டாம் குலோத்துஙக சோழனைக் குறித்தே முதல் முதல் வழங்கத தொடங்கியதென பதும் கல்வெடடுகளாலும், குலோத்துங்க சோழனுலாவாலும புலனாதலின், சேக்கிழார் முதற்குலோததுங்க சோழன் காலத்தவ ரல்லர் என்பது நன்கு தெளியப்படுகிறது என்று அவர் விளககு கின்றார்.

3.சேக்கிழார் சோழமன்னனைக் குறித்து வெளியிட்ட செய்திகளும், ஒட்டக்கூத்தர் தம்மை ஆதரித்த அநபாய மனன னாகிய இரண்டாம் குலோத்துங்கனைப் பாராட்டிக் கூறிய பகுதிகளும் ஒததுக் காணப்படுகின்றன.

இரண்டாம் குலோத்துங்கன் மகனாகிய திரிபுவன சக்கர வர்த்தி இரண்டாம் இராசராசசோழனது பதினேழாம் ஆட்சி யாண்டில், திருமழபாடித் திருக்கோயிலில் பொறிக்கப் பெற்ற கல்வெட்டொன்றில் ஜயங்கொண்ட சோழ மண்டலத்து . . . குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனான உத்தம சோழப் பல்லவராயன் என்பார் திருமழப்பாடித் திருக்கோயி லுக்குத் தொண்ணூறு பேராடுகள் உதவிய செய்தி குறிக்கப் பட்டுள்ளது.

சேக்கிழாா மாதேவடிகள் இராமதேவனென்பார், திரி புவனச் சக்கரவர்த்தி இரண்டாம் இராஜராஜ சோழனது பதினேழாம் ஆட்சியாண்டில் பின்னரும் வாழ்த்திருந்தவரென்பது பெறப்படுகிறது.

சேக்கிழார் காலத்துச் சோழமன்னன் அநபாயன் என்ற சிறப்பு பெயர் கொண்டவனென்பதும், குலோத்துங்கனென்னும் இயற்பெயருடையவனென்பதும் அவனது சிவ பத்திமான்பினைச் சிறப்பித்துப் போற்றும் பெரிய புராணச் செய்யுட்களால் நன்கு தெரியவருகின்றன.

எனவே, சேக்கிழாரைக் கொண்டு பெரியபுராணம் பாடு வித்த வேந்தன் இரணடாம் குலோத்துங்க சோழனென்பது நன்கு அறியப்படும். இச்செய்தி இரண்டாம் இராசராசனுக்குப் பின்வந்த இரண்டாம் இராசாதிராசனது ஒன்பதாம் ஆட்சியாண்டில் திருமழபாடிக் கோயிலுக்கு நிவந்தமளித்த குன்றத்தூர்ச் சேக் கிழான் மாதேவடிகள் ராமதேவனான உத்தம சோழப் பல்லவ ராயன் என்பவரே பெரியபுராணம் பாடிய சேக்கிழார் என்பதும், அவரை ஆதரித்துப் பெரியபுராணத்தை இயற்றச் செய்த அநபாயச்சோழன் என்பவன் இரண்டாம் குலோத்துங்கனே என்பதும், ஆசிரியர் சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்கனுக்குப் பின் அவன் மகன் இரண்டாம் இராசராசனது பதினேழாம் ஆட்சியாண்டிலும் வாழ்ந்தவர் என்பதும், சேக்கிழார் தம்பி பாலறாவாயர் எனக் கூறப்படுபவர் குன்றத்தூர்ச் சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயன் எனக் கல்வெட்டில் குறிக்கப் பட்டவரென்பதும், அவர் இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சியின்

இடைப்பகுதி தொடங்கி மூன்றாம் குலோத்துங்கன ஆட்சியின முன்பகுதிவரை வாழ்ந்தாரென்பதும் நனகு பெறபபடும் எனபது மு.இராகவையங்கார்,[21] மா. இராசமாணிக்கனார்[22] ஆகியோா கருத்தாகும்.

3. மேறகூறிய கருத்தை மறுத்து தி.வை.சதாசிவப் பண்டா ரத்தார், அவன் மூன்றாம் குலோத்துங்கனே என நிறுவியுள்ளார்.[23] இரண்டாம் குலோத்துங்னுக்கு ஆசிரியராகவும் அவைக்களப புலவராகவும் விளங்கியவர் ஒட்டக்கூத்தர். சைவ சமயத்தில் பேரீடுபாடுடைய ஒட்டக்கூத்தருடைய மாணவனாகப் பயின்ற இரண்டாம் குலோத்துங்கன், சைவசமய அடியார்களின் மெய் வரலாறுகளை அறியாத சமணர்களால் புனைந்துரைக்கப்பட்ட சீவக சிந்தாமணிக் கதையை மெய்யென நம்பிப் பொழுது போக்கினான் என்பதற்குச் சிறிதும் இடமில்லை.

குலோத்துங்கனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம இராசராசன் காலத்தும் வாழ்ந்திருந்து, இராசராசன் உலாவும் தக்கயாகப்பரணியும் இயற்றியவரும் தம் நூல்களில் இறையனாா அகப்பொருள், களவழிநாற்பது, கலிங்கத்துப்பரணி ஆகிய நூல் களைப் பாராட்டு பவருமான ஒட்டக்கூத்தர், தம் காலத்துப் பெரிய புராணம் பாடப்பெற்றிருப்பின் அதனைப் பாடிய சேக் கிழாரையும், அந்நூல் தோன்றுவதற்குக் காரணமாக இருந்த சோழ மன்னனையும் தாம் இயற்றிய நூல்களில் புகழ்ந்து போற்றி யிருப்பார். அங்ஙனம் குறிப்பிடாமையின், அவர் காலத்திற்குப பின்னரே பெரிய புராணம் இயற்றப் பெற்றிருக்க வேண்டும்.

சேக்கிழார் கூறியுள்ள பேரம்பலம் பொன்வேய்ந்த அநபாயன் மூன்றாம் குலோத்துங்கனே. இவனை எதிரம்பலம் பொன்வேய்ந்தான் என்று கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. எதிரம் பலமே பேரமபலம் என வழங்கியதென்பது அறியப்படுகிறது. எனவே மூன்றாம் குலோத்துங்கனே பேரம்பலம் பொன்வேய்ந்த அநபாயன் என்பதும், இவ்வேந்தனே சேக்கிழாரைக் கொண்டு பெரியபுராணம் இயற்றுவித்தான் என்பதும் புலனாகின்றன. இவ்வாறு தி.வை.சதாசிவப்பண்டாரத்தார் சேக்கிழார் காலத்தை ஆய்ந்து கூறுகின்றார்.

சேககிழார் மூன்றாம் குலோத்துக்கன காலத்தவரே எனபதைக் க. வெள்ளைவாரணனாரும் உடன்பட்டுக்கீழ் வருமாறு நிறுவுகின்றார்.[24]

சேக்கிழார் தம் காலத்துச் சோழ மன்னனைப் பெரிய புராணத்தில் பத்து இடங்களில் பாராட்டியுள்ளார். அப்பாடல களில் அபயன, அநபாயன், குலோத்துங்கசோழன் என்ற பெயர் களால அவ்வேந்தன் குறிக்கப்பெற்றுள்ளான். மேற்குறித்த பெயர்களுள் அபயன் என்பது முதல் குலோத்துங்க சோழனுக் குரிய சிறப்புப் பெயர். அநபாயன் என்பது இரண்டாம் குலோத் துங்கனுக்குரிய சிறப்புப் பெயர். குலோத்துங்கன் என்பது மூவர்க்கும் உரிய இயற்பெயராகும். கல்வெட்டுக்களால் இவை புலனாகின்றன.

முதலாம் குலோத்துங்கனுக்குரிய அபயன் என்ற சிறப்புப் பெயர் மகன் வழிப்பெயரன் இரண்டாம குலோத்துங்க சோழ னுக்கும வழங்குகின்றது. இதனை நோக்குங்கால் சோழ மன்னர் களை அவர்தம் முன்னோாக்குரிய சிறப்புப் பெயர்களாற போற்றும் வழக்கமுண்டென்பது நன்கு புலனாகின்றது. சேககிழாா தம் காலத்துச் சோழமன்னனை இரண்டாம் குலோத்துஙகனுக் குரிய சிறப்புப் பெயராகிய அநபாயன் என்ற பெயராலும் போற்றியுள்ளார்

சேக்கிழார் தில்லையில் பேரம்பலத்திற்குப் பொன்வேய்ந்த அநபாயனது செயலைக் குறித்துள்ளார். இப்பேரம்பலத்தைப் பொன்மயமாக்கிய பெரியோன் மூன்றாம் குலோத்துங்கனே. இவன் எதிரம்பலம் பொன் வேய்ந்தானென்று இவன் காலத்துக் கல்வெட்டுக்களால் அறிய முடிகிறது.

திருப்புறம்பயத்திருக்கோயிலின் திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜதேவரது பதின்மூன்றாம் ஆட்சியாண்டிற் பொறிக் கப்பட்ட கல்வெட்டிற்குப் பின் சுவஸ்தி ஸ்ரீ திரும்பேரம்பலம் பொன்வேய்ந்த திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலோத்துங்க சோழ தேவற்குயாண்டு எ-வது எனத் தொடங்கும் கல்வெட்டு வரையப்பெற்றுள்ளது.

முதல் கல்வெட்டில் திருப்புறம்பியத்துக் குடிமகன் ஆலங் குடையான அடிகள் புறம்பியன் என்பான தானொரு நவ்னை திருநந்தா விளக்கெரிக்கக் கொடுத்த நிவந்தமும், இரண்டாம் கல்வெட்டில அவனும் காடுடையான் சுற்றி திருச்சிற்றம்பலம் உடையான் எனபவனும் சேர்ந்தளித்த நிபந்தமும முறையே குறிககப் பெறறுள்ளன. எனவே இககல்வெட்டு இரண்டும் கால முறைப்படி ஒன்றன்பின் ஒன்றாக வெட்டப்பட்டனவே எனபது தெளியப்படுகிறது.

எனவே இக்கல்வெட்டில் குறிதத இராசராசன் இரண்டாம இராசராசனே என்பதும் அவனது கல்வெட்டிற்கு அடுதது வரையப்பட்ட கல்வெட்டில் குறிக்கப்படும பேரம்பலப் பொன வேய்ந்த சோழன் மூன்றாம் குலோத்துங்கனே எனபதும புலனாகிறது.

இரண்டாம் குலோத்துங்கன் தனது ஆட்சியின எழாம் ஆண்டில பொறிக்கப்பட்ட திருமாணிகுழிக் கல்வெட்டில் 'எதிரிலி சோழநல்லூரென்று நம் பேரால்' எனக் குறிககப்பட் டுள்ளது இவ்வாறே மூன்றாம் குலோததுங்கனது மூன்றாம் ஆட்சியாண்டில் திருமாணிகுழியில் வெடடப்பட்ட மற்றொரு கல்வெடடில், உள்ளூர் திருப்பேரமபலம் பொன்வேயநத பெருமான் நல்லூர் என்ற பெயரால் அம்மன்னது அதிகாரி மோகன ஆட்கொள்ளியான குலோத்துங்க சோழக் காடவராயன என்பான அவ்வூர்க்குப் பெயரிட்டு வழங்குகின்றான்.

திருமாணிகுழியென்னும் இவ்வூர் விக்கிரம சோழனாட்சி யின் மூன்றாமாண்டில் பழம் பெயரைத் தவிர்த்து விக்கிரம சோழ நல்லூர் எனனும் பெயரால் வேறுபிரித்து வழங்கப்பட்டதெனபது இவ்வூரக கல்வெட்டால் அறிய முடிகிறது.

பேரம்பலம் பொன்வேய்ந்த பெருமாள் என்ற சிறப்புப் பெயராற குறிக்கப்பெற்றவன் இராண்டாம் குலோததுங்கன் அல்லன் என்பதும், மேற்குறித்த திருப்புறம்பியக் கல்வெடடினால் அச்சிறப்புப் பெயர் மூன்றாம் குலோத்துங்க சோழனுக்கே உரியதெனபதும் பெறப்படுகின்றன.

திருவாரூரில் ஆயிரங்கால் மண்டபம் அமைத்தவன மூனறாம குலோத்துஙகனே எனத் திரிபுவன வீரேச்சரக கலவெட்டுத தெளிவாகக் கூறுகிறது. இம்மண்டபத்தையே தேவாசிரியனெனுந் திருக்காவணம்[25] எனப் பெரிய புராணத்தில் சிறபபிததுப போற்றியுள்ளார் சேக்கிழார்.

மேறகூறியவற்றான் தில்லைபேரம்பலம் பொன்வேய்ந்தவன் மூனறாம குலோததுங்கனே. இவனே சேக்கிழாரை ஆதரித்துப் பெரியபுராணம இயறறுவித்தவன் என்பது நன்கு புலனாகிறது. இதனால் இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆட்சியின் முற் பகுதியிலும் வாழ்ந்தவர் சேக்கிழார் என்பது தெரிய வருகிறது.

எனவே, சேக்கிழாரின் காலம் கி.பி.1113க்கும் கி.பி. 1218-க்கும் இடைப்பட்ட காலம் என்பது தெளிவாகிறது. இக்கருததை மறுக்கத்தக்க வேறு ஆதாரங்கள் கிடைக்கும் வரை சேக்கிழாா மூனறாம் குலோத்துங்கன் காலத்தவரே என்பதை உறுதியாகக கொள்ளலாம்.

**நூல் அமைப்பு**

பெரியபுராணம் பதினமூனறு சருக்கங்களைக கொண டுள்ளது. நூல் முகப்பில் திருமலைச் சருக்கமும், இறுதியில் வெளளானைச் சருக்கமும் இடம் பெற்றுள்ளன. நடுவில் அமைந் துளள பதினொரு சருக்கங்களும் திருத்தொண்டத்தொகையின் பதினொரு பாடல்களில் சொல்லப்பட்ட வரலாறுகளை அந்த வரிசையிலேயே கொண்டு அமைந்துள்ளன. சருக்கத்தின் பெயர், திருத்தொண்டததொகைப் பாடல்களின் தொடக்கத் தொடா களாகும். இவை முறையே 1.தில்லை வாழ் அந்தணர் சருக்கம, 2.இலைமலிந்த சருக்கம், 3.மும்மையால் உலகாண்ட சருக்கம், 4.திருநின்ற சருககம், 5.வம்பறா வரி வண்டுச் சருக்கம், 6.வார் கொண்ட வனமுலையாள் சருக்கம், 7.பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கம், 8.கறைக்கண்டான் சருக்கம், 9.கடல் சூழ்ந்த சருக்கம், 10.பத்தராய்ப் பணிவார் சருக்கம், 11.மன்னியசீர்ச் சருக்கம் எனற பெயரில் அமைந்தவை. இந்நூல் இருபெரும காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் ஐந்து சருக்கங்கள்

முதல் காண்டத்திலும், அடுத்துள்ள எட்டுச் சருக்கங்கள் இரண டாவது காண்டத்திலும் அடங்கியுள்ளன.

**நூல் பகுப்பு**

**உலகெலாம்** என்று தில்லைப்பெருமான் அடியெடுத்துக் கொடுத்த தொடரோடு நூல் தொடங்குகிறது. நூலின் பாயிரப் பகுதி பத்துப்பாடல்கள் கொண்டுள்ளது. பாயிரத்துள் அம்பலத் தாடுவார் வணக்கம், திருக்கூட்ட வணக்கம், அவையடக்கம், களன், பொருள், நூற்பெயர் முதலியவைகளும் இடம் பெற் றுள்ளன. அடுத்துத் திருமலைச் சருக்கம் என்ற பகுதி இடம் பெற்றுள்ளது. இது அறுபத்து மூன்று நாயன்மார் வரலாறு நூலாக உருப்பெற்ற பின்னணியை விளக்குகின்றது. இதனுள் திருமலைச் சிறப்பு, திருநாட்டுச்சிறப்பு, திருநகரச் சிறப்பு, திருக் கூட்டச் சிறப்பு, தடுத்தாட்கொண்ட புராணம் என்ற ஐந்து பகுதிகள் உள்ளன.

1.திருமலைச் சிறப்பில் உபமன்னிய முனிவர் வரலாறு, கயிலையிலிருந்து ஆலாலசுந்தரர் நிலவுலகுக்கு வரநேர்ந்த வரலாறு, அவர் திருவாரூரில் திருத்தொண்டத் தொகை பாட, நம்பியாண்டார் நம்பி அடியார்கள் வரலாறுகளை விரித்துரைத்த வரலாறு முதலியன கூறப்பட்டுள்ளன. 2.திரு நாட்டுச் சிறப்பில் சோழருடைய காவிரி நாட்டியல்பு கூறப்பட்டுள்ளது. 3.திருநகரச் சிறப்பில் திருத்தொண்டத் தொகை பிறந்த தலமாகிய திருவா ரூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த மனுநீதிச்சோழன் வரலாறு கூறப்பட்டுள்ளது. 4.திருக்கூட்டச் சிறப்பு அறுபத்து மூவர் புராணங்களின் சாரமாயுள்ள தத்துவங்களைத் தொகுத்துக் கூறும் பாங்கில் அமைந்துள்ளது.

அடுத்து அமைந்துள்ள 5.தடுத்தாட் கொண்ட புராணத்தில் சுந்தரர் திரு அவதாரம் செய்த திறமும், இறைவனால் தடுத்தாட் கொள்ளப்பட்ட செய்தியும், திருத்தொண்டத் தொகையருளிய செய்தியும் கூறப்படுகின்றன. இதையடுத்துத் திருத்தொண்டத் தொகை கூறும் அடியவர்களது வரலாறு முறையே தில்லை வாழந்தனர் சருக்கம் தொடங்கி மன்னியசீர்ச் சருக்கம் வரை

விரிந்துரைக்கப்படுகிறது. இறுதியில் உள்ள வெள்ளானைச் சருக்கத்தில் சுந்தரர் வெள்ளானை மீதேறிக் கழறிற்றறிவாரோடு திருக்கயிலாயம் சென்றடைந்த வரலாறு கூறப்படுகின்றது.

சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் ஒவ்வொரு பாடலிறுதியிலும் குறித்துள்ள ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே என்ற வரியைச் சேக்கிழார் பெரியபுராணத்தில் ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் சுந்தரர் துதியாகப் பாடியுள்ளார்.

**பாடல் தொகை**

சேக்கிழார் பெரியபுராணத்தை நாலாயிரத்து இருநூற்று ஐம்பத்து மூன்று விருத்தங்களால் பாடினார் என்று சேக்கிழார் புராணம் கூறுகிறது.[26] சைவசித்தாந்த மகாசமாஜப் பதிப்பில் பாடல்தொகை நாலாயிரத்து இருநூற்று எண்பத்தாறு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முப்பத்து மூன்று பாடல்கள் இடைச் செருகலாயிருத்தல் கூடும் என்று சி.கே.சுப்பிரமணிய முதலியார் நன்கு ஆராய்ந்து கூறியுள்ளார்.[27]

திருமலைச் சருக்கத்தின் ஒன்பது முதல் பன்னிரண்டு வரையுள்ள ஐந்து பாடல்களும், கண்ணப்ப நாயனார் புராணத்தில் நூற்று ஐம்பத்தெட்டு முதல் நூற்று அறுபத்திரண்டு வரையுள்ள பாடல்களும், சருக்கங்களின் முடிவில் அமைந்துள்ள கூற்றுவர், கணம்புல்லர், முனையடுவார், கோட்புலியார், புராணங்களில் அடுத்து வரும் புராணங்களுக்குத் தோற்றுவாயாகவுள்ள நான்கு செய்யுட்களும் சில பிரதிகளில் இல்லாமையால் இவை வெள்ளிப் பாடல்கள் எனக் கருதப்படுகின்றன. என்று க.வெள்ளைவாரணனார் கூறுவதும்[26] நினைவு கூரத்தக்கது. இதிலிருந்து பெரிய புராணத்தில் நாலாயிரத்து இருநூற்று ஐம்பத்து மூன்று விருத்தங்களுக்கு மேற்பட்ட பாடல்கள் அனைத்தும் இடைச்செருகல் பாடல்கள் தாம் என்பது தெளிவாகிறது.

**யாப்பு**

சேக்கிழார் இப்பொழுதுள்ள இருபத்து நான்கு தேவாரப் பண்களின் யாப்பில், பெரியபுராணப் பாடல்களை உரிய இடங்களிலே பாடியுள்ளார். பெரிய புராணத்திற்கு முற்பட்ட இலக்

கியங்களில் விருத்தப்பா ஒன்றேயுள்ளது. கட்டளைக் கலித்துறை விரவி வருவதில்லை. சேக்கிழாரதான் கட்டளைத் கலித்துறை விரவி வருமாறு அமைக்கின்றார்.

திருநாவுக்கரசர் முதலியோர் பதிகம் பாடினர் என்று குறிப்பிடும் போது அதன முதல் தொடரைக் குறிப்பிட்டு அதே பணணமைப்பில் சில பாடல்களைக் பாடுகின்றார் சேககிழாா. அந்த முறையில்தான், திருநாவுக்கரசர் **ஈன்றாகுமாய்** என்ற பதிகம் பாடினார் என்று சொல்லுமிடத்தில் அதே யாப்பில் ஏழு பாடல்களைக் கட்டளைக் கலித்துறையாகப பாடியிருக்கிறார்.

**தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு**
**நாயகன் சேவடி தைவரும் சிந்தையு நைந்துருகிப்**
**பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்**
**மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே**[29]

திலகவதியாருடைய விண்ணப்பங்களுக்கு இரங்கித் திருவதிகை வீரட்டாணத்திறைவன் இனிச் சூலை மடுத்து ஆள்வம் என்ற அருட் திறத்தினைக் கூறிய சந்தயாப்பையே தொடர்ந்து, சூலைநோயுடன் திருநாவுக்கரசர் திருவதிகை வீரட்டாணத்து இறைவன் திருமுன்பு வணங்கி உணர்வு பெறும்வரை கொசசகக் கலிப்பாச் சந்தத்தில் பாடியுள்ளார்.

**மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையார்**
**உன்னுடைய மனக்கவலை யொழிநீ யுன் னுடன்பிறந்தான்**
**முன்னமே முனியாகி யெனயடையத் தனமுயன்றான்**
**அன்னவனை யினிசசூலை மடுத்தாள்வ மெனவருளி**[30]

**நீறணிந்தா ரகத்திருளு நிறைகங்குற் புறத்திருளும்**
**மாறவருந் திருப்பள்ளி யெழுச்சியினின் மாதவஞ்செய்**
**சீறடியார் திருவலகுந் திருமெழுக்குந் தோண்டியுங்கொண்**
**டாறணிந்தார் கோயிலினுள் ளடைந்தவரைக் கொடுபுக்கார்**[31]

திருநாவுக்கரசரால் கூற்றாயினவாறு விலக்ககிலீர் என்று தொடங்கும் சந்தத்தில் யாக்கப் பெற்றது, சேக்கிழாரால் ஆசிரிய விருத்தமாக அமைக்கப்படுள்ளது. இது அவருடைய கவித்திறனை எடுத்தியம்புகின்றது.

நீற்றாலநிறை வாகிய மேனியுடன் நிறைஅன்புறு சிந்தை
யில்நேசமிக
மாற்றார்புரம் மாற்றிய வேதியரை மருளும்பிணிமாயை
அறுத்திடுவான்,
கூற்றாயின வாறு விலக்ககிலீர் எனநீடிய கோதில் திருப்பதிகம்,
போற்றாலுல கேழின் வருந்துயரும்போமாறெதிர் நின்று
புகன்றனரால்[32]

**காப்பியக் கட்டமைப்பு**

காப்பியத்தில், கதையாலும் பொருளாலும் ஆசிரியர் மேற்கொள்ளும் பிற அமைப்புகளாலும் ஒருமைப்பாடு அமைய வேண்டும். இங்ஙனம் அமையும் காப்பியமே கட்டமைப்புடையது, என்கின்றனர் காப்பியத் திறனாய்வாளர்கள்.

மேற்கூறிய கட்டமைப்பு, பெரியபுராணத்தில் தொடக்கம் முதல் இறுதி வரை சிதையாமல் அழகுற அமைந்துள்ளது. இக்காப்பியத்தின் தலைவர் சுந்தரரே. நூலின் தொடக்கத்திலும் இடையிலும் நிறைவிலும் இவர் வரலாறே பேசப்படுகின்றது. 'மாத வஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதி லாத்திருத் தொண்டத் தொகைதர'[36] சுந்தரர் தோன்றினார் எனப் பகர்ந் துள்ளார் சேக்கிழார். சுந்தரர் வரலாற்றையும், இவர் பாடியுள்ள திருத்தொண்டத் தொகையில் இடம் பெற்றுள்ள அடியார்களின் வரலாற்றையும் விரித்துப் பாடியிருப்பதன் வழி காப்பியக் கட்டுக்கோப்பில் ஒருமைப்பாட்டை அமைத்துள்ளார்.

**பெருங்காப்பிய இலக்கணம்**

இன்று கிடைத்திருக்கும் பாட்டியல் இலக்கண நூல்களில் மிகவும பழைமையானது பன்னிருபாட்டியல். இதில் காப்பிய இலக்கணம் சொல்லப் பெறவில்லை. இதன் பின் எழுந்த தண்டி யலங்காரமே காப்பிய இலக்கணத்தைக் கூறுகின்றது. இதில் கூறப்பெறும் காப்பிய இலக்கணங்கள்,

1. காப்பியத்தின் தொடக்கத்தில் வாழ்த்து அல்லது வணக்கம் அல்லது சொல்லப்படும் பொருளை உணர்த்துதல் வேண்டும். 2. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு

பொருளையும் விளக்க வேண்டும். 3.ஒபபற்ற தலைவன் ஒருவன் காப்பியத் தலைவனாக இருத்தல் வேண்டும். 4.மலை, கடல், நாடு, நகர், ஆறுவகைப் பெரும்பொழுது சிறுபொழுதுகள், ஞாயிற்றின் தோற்றம், திஙகளின் தோற்றம் இவற்றின் வாணனை கள் வேண்டும். 5.திருமணம், முடிசூடுதல், பொழில் விளையாடல், நீா விளையாட்டு, மதுவுண்டு களித்தல், மக்கள்பேறு, ஊடல், கூடல் முதலியன அமைதல் வேண்டும். 6.அமைச்சரோடு ஆராய் தல், தூது, வெளிநாட்டுப் பயணம், போர், வெற்றி ஆகியவை தொடர்புற்று அமைதல் வேண்டும். 7.சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் ஆகிய நூற்பிரிவுகள் இருத்தல் வேண்டும் என எட்டு இயல்புகள் கூறப்பட்டுள்ளன. நூல் முழுவதிலிருந்தும் பெறப்படும் பாவிகம் என்னும் காப்பியப் பண்பையும் சேர்த்துக் கொண்டால் தண்டியலங்காரத்திலிருந்து பெறப்படும் காப்பிய இயல்புகளை ஒன்பதாகக் கொள்ளலாம்.

**பெருங்காப்பிய இலக்கணத்திற்குப் பெரியபுராணம் பொருந்தி வருதல்**

இப்பெரு நூலிற்காப்பிய இலக்கணங்கள் எல்லாம் பொருந்தியுள்ளன என முதல் முதலாக எடுத்துக்காட்டியவர் சி.கே.சுப்பிரமணிய முதலியார் ஆவார்.[33] பெரியபுராணத்தைச் செந்தமிழ்க்காப்பியம் என்றும், பெருங்காப்பியம் என்றும் க.வெள்ளைவாரணர் குறிபபிடுவது[34] கவனத்திற கொளளத் தக்கதாகும். இவர்கள் கருத்திற்கேற்பப் பெருங்காப்பிய இலக் கணங்கள் பெரிய புராணததில் பொருந்தி வருகின்றன.

**உலகெலாம்** என்று இறைவன் அடியெடுததுக் கொடுத்த முதற் பாட்டிலேயே **வணங்குவாம்** என்றதால் **தெய்வ வணக் கமும், வாழ்த்தி** என்பதனால் **வாழ்த்தும்** கூறப்பட்டுள்ளன. **மலர் சிலம்படி வாழ்த்தி** என்றதனால் இறைவன் திருவடியையே பற்றுக்கோடாகக் கொணடு வாழ்ந்துய்ந்த அடியார்களைக் குறிப்பதாகக் கொண்டு **வரும் பொருள்** சுட்டப்பட்டுள்ளது.

காப்பிய இலக்கணப்படி அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருள்களையும் பயப்பதாகப் பெரியபுராணம்

அமைக்கப்பட்டுள்ளது. அறத்தை விளக்க மனுநீதிச் சோழன வரலாறு அடிப்படையாகக் கொள்ளப்படுள்ளது. வாழ்க்கைக்கு இன்றியமையாததாகிய பொருள், நாயன்மார்கள் அறம் செய்த தைக் கூறிய இடங்களில் எல்லாம் சிறப்புறச் சொல்லப்பட் டுள்ளன. இன்பம், களவு, கற்பு என்ற இருதிறத்தும், நாயன்மார் துணைவியர் வரலாறுகளில் வைத்து மனையறம் காத்த செய்தி யாகக் காட்டப்பட்டுள்ளது. வீடு ஒன்றே முடிவான பொருள் மற்ற மூன்றும் அவ்வீடுபேற்றை நோக்கிச் செலுத்த வேண்டுவன என்பதைப் புராணம் முழுவதையும் காணமுடிகிறது.

தன்னிகரில்லாத் தலைவராகச் சுந்தரர் காட்டப்படுகிறார். அவர் சரிதம் நூல் முழுமையும் கூறப்படுகிறது. மலை திருமலைச் சிறப்பில் பேசப்படும் கயிலை மலை நாடு - சோழநாடு, திரு நாட்டுச் சிறப்பு, நகர்-திருவாரூர், திருநகரச் சிறப்பு, பருவம் - இரு சுடர்த்தோற்றம், ஏனாதி நாயனார், கண்ணப்பநாயனார் வரலாற்று களில் இடம் பெறச் செய்யப் பெற்றுள்ளன.

நன்மனம் புணர்தல் சம்பந்தர், சுந்தரர் வரலாற்றிலும், புனல் விளையாடல் சேரமான் வரலாற்றிலும், முடிகவித்தல் கூற்றுவா வரலாற்றிலும், புலவி சுந்தரர், திருநீலகண்டத்துக் குயவனார் வரலாறுகளிலும், மந்திரம் மனுநீதிச்சோழன் வரலாற்றிலும் தூது சுந்தரர் வரலாற்றிலும், செலவு, இகல் வென்றா முதலியன புகழ்ச் சோழர் முதலியோர் வரலாறுகளிலும இடம்பெறச் செய்யப் பட்டுள்ளன.

காப்பியப் பகுதிகள் காண்டம், சருக்கம், புராணம் என்ற பாகுபாட்டைக் கொண்டுள்ளன. இங்ஙனம் பெரியபுராணத்தில் பெருங்காப்பிய இலக்கணங்கள் முழுமையாகப் பொருந்தி யுள்ளன. எனவே, பெரியபுராணம் ஒரு பெருங்காப்பியமே என்பது உறுதியாகிறது.

**பெரியபுராண மூலங்கள்**

பெரியபுராணத் தோற்றத்திற்கு அடித்தளமாக விளங்கிய நூல்கள் திருத்தொண்டத் தொகையும், திருத்தொண்டர் திருவந் தாதியும் ஆகும். மேலும் இதற்கு அடிநிலையாக மூவர் தேவாரம்,

திருமந்திரம், பதினோராம் திருமுறைப பாடல்கள, தில்லை உலா முதலிய நூல்கள் விளங்குகின்றன. மற்றும அக்காலத்து நிலவிய செவிவழிச் செய்திகள், சமணம், பௌத்தம் முதலிய பிறசமய நூல் கள், நாயன்மார் பற்றிய கல்வெட்டுக்கள, சிறபங்கள், ஓவியஙகள முதலியவற்றை அகச் சான்றுகளாகக் கொண்டு இநநூல் இயறறப் பெற்றுளளது.

பெரிய புராணம் சுந்தரர் பாடிய திருத்தொண்டத தொகையை முதல் நூலாகவும் நம்பியாண்டார் நம்பிகளது திருத்தொண்டர் திருவந்தாதியை வழி நூலாகவும், கொண்டு விரிந்த சார்பு நூலாகும். இதனைக் சேக்கிழார் திருமலைச் சிறப்பு என்றப் பகுதியில்,

தொன்று சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
யின்றெ வாதர வாலிங் கியம்புகேன்.[35]

எனக் கூறுவதால் அறிய முடிகிறது.

மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்
புறறி டத்தெம் புராண ரருளினாற்
சொறற மெய்த்திருத் தொண்டத் தொகையெனப்
பெறற நற்பதி கந்தொழப் பெற்றதாம்.[36]

என்று கூறுவதால் பெரியபுராணத்திற்குத் தொகைநூல் திருத்தொணடத்தொகை எனபது தெரிய வருகிறது.

அநத மெய்ப்பதி கத்தடி யார்களை
நநத நாதனா நம்பியாண்டார் நம்பி
புநதி யாரப் புகன்ற வகையினால்
வந்த வாறு வழாம லியமபுவாம்.[37]

என்றும் சேக்கிழார் கூறுவதால் பெரியபுராணத்திற்கு வகைநூல் திருத்தொண்டத் திருவந்தாதி என்றும் அறிந்து கொளள முடிகிறது.

தொகையா நாவலூராளி தொடுத்த திருத்தொண்டப் பெருமை
வகையால் விளங்கவுயர் நம்பியாண்டார் நம்பிவகுப்ப மற்றதனைத்
தகையா அன்பின்விரித்து லகோர்.[38]

என்று கச்சியப்ப முனிவர் கூறுவதிலிருந்தும் மேற்கூறப்பட்ட செய்தி உறுதிப்படுகிறது.

திருத்தொண்டத் தொகையையும் அதன் வகையாக அமைந்த திருத்தொண்டத் திருவந்தாதியையும் ஆதரவாகக் கொண்டு அடியார்களின் வரலாறுகளை விரித்துரைக்கும் விரிநூலாகச் சேக்கிழார் பெரியபுராணத்தை இயற்றியுள்ளார் என்று க.வெள்ளைவாரணனார் கூறுவது[39] குறிப்பிடத்தக்கது

மேற்கூறியவற்றிலிருந்து இவ்விரு நூல்களின் விரிந்த வரலாற்றையே சேக்கிழார் புராணமாகப் பாடினார் என்பது தெளியப்படுகிறது.

**நாட்டு நகரப் படலங்கள்**

பெருங்காப்பியத்தின் தொடக்கத்தில் அக்காப்பியத் தலைவர்க்குரிய நாட்டுச் சிறப்பையும், நகரச் சிறப்பையும் எடுத்துரைப்பது இயல்பு. ஆதலின் சேக்கிழாரும் தம் காப்பியத்தில் நாட்டு நகரப் படலங்களை அமைத்துள்ளார். இக்காப்பியத்தின் தலைவரான சுந்தரர் அவதரித்த நாடு திருமுனைப்பாடி, நகர் திருநாவலூர். எனவே இக்காப்பியத்தில் திருமுனைப்பாடியையும், திருநாவலூரையும் சிறப்பித்துள்ளார். இவை சிறப்பிடம் பெறும் காரணத்தை அவரே கூறியுள்ளார். திருத்தொண்டத் தொகையால் போற்றப்பெறும் சிவனடியார்களது திருக்கூட்டம் நிறைந்து விளங்கும் சிறப்புடையது சோழநாடு. சிவபெருமான் தனனடியார்களுக்கு என்றும் எளிவரும் பெருமையுடைய பழம்பதி திருவாரூர்.

**உலக முய்யவுஞ் சைவநின் றோங்கவு**
**மலகில் சீர்நம்பி யாரூரர் பாடிய**
**நிலவு தொண்டர்தங் கூட்ட நிறைந்துறை**
**குலவு தண்புள் ணாட்டணி கூறுவாம்.[40]**

எனத் திருமலைச் சிறப்பின் இறுதியில் கூறியுள்ளார். இவ்வாறே திருநாட்டுச் சிறப்பினையடுத்து,

**சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது**
**மன்னு மாமல ராள்வழி பட்டது**

வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச
சென்னி யார்திரு வாரூர்த் திருநகர்.[41]

எனத் திருநகரச் சிறப்பினைத் தொடங்குதலாலும சேககிழார் புலப்படுத்தியுள்ளார்.

**மனுநீதிச்சோழன் வரலாறு**

சேக்கிழார் திருநகரச் சிறபபில் மனுநீதிச் சோழன் வரலாற்றை அமைத்துள்ளார். இப்பகுதியில் கூறிய சிறப்புகளிலே விளங்க எடுத்துக்காட்டிய சரிதம் மனுநீதிச் சோழன் வரலாறே யாகும். ஆதலில் தேரூர்ந்தபுராணம், மனுநீதிச் சோழர் புராணம், மனுநீதி கண்ட புராணம் என்ற பெயர்களால் பல பதிப்புகளிலும், ஏட்டுப் பிரதிகளிலும் திருநகரச் சிறப்பு எடுத்தாளப்பட்டுள்ளது எனக் க.வெள்ளைவாரணனாரும்[42] சி.கே.சுப்பிரமணிய முதலியாரும்[43] கூறியுள்ளனர்.

மனுநீதிச் சோழன் அறநெறியில் வழுவாது ஆட்சி மேற் கொண்டு வந்தான். அவன் மகன், சேனைகள் தன்னைச் சூழ ந்துவர அரச வீதியில் உலாப்போந்தான். அங்ஙனம் செல்லும் போது வீதியிலே ஒரு பசுங்கன்று அவன் தேர்க்காலின் அடியில் அகப் பட்டு இறந்தது. கன்றை இழந்த பசு மனுநீதிச்சோழனிடம் நீதி கேட்டது. அரசன் தன் மகன் செய்த குற்றத்திற்கு அவனைக் கொல்வதே தக்க தண்டனை எனத் தன் மகனைத் தானே தேர்க் காலில் இட்டுக் கொன்றான். எவ்வுயிர்க்கும் அருளாளனாகிய மனுநீதிச் சோழனது செயற்கரிய இச் செயலைக்கண்டு பொறாது தேவர்கள மலர்மாரி பொழிந்தனர். சிவபெருமான் உமையுடன் தோன்றி அருள்புரிந்தான். இறந்த கன்றும், மைந்தனும உயிர் பெற்றெழுந்தனர்.

இங்ஙனம் மன்னுயிரனைத்தையும் தன்னுயிர்போல் பேணிக் காத்து முறை செய்த மனுநீதிச்சோழனது வரலாற்றை விரிததுரைத் துள்ளார் சேக்கிழார். இவ்வரலாற்றுக்கு ஆதாரமாய் அமைந்தது, இளங்கோவடிகள் அருளிய சிலப்பதிகாரமாகும். கோவலனைக் கொண்டு ஆராயாது கொலை புரிந்த பாண்டியனது அவையில் சென்று, தன் கணவன் கள்வனல்லன் என வழக்குரைக்க முறபட்ட

கண்ணகியை நீர்வார கண்ணை எம்முன் வந்தோய் யாரையோ நீ[44] என வினவிய நெடுஞ்செழியனை நோக்கித் தன் நாடும், ஊரும், தன் நாட்டு வேந்தாது அறநெறிபிறழா அரசியல் முறையும் இவையெனப புலபபடுத்தும் நிலையில்,

> வாயிற கடைமணி நடுநா நடுஙக
> ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சு சுடத் தான்தன்
> அரும்பெறற புதல்வனை ஆழியின் மடித்தோன்[45]

என ஆவின் துயரம் துடைத்த மனுநீதிச சோழனது அரச நீதியினை அறிவுறுத்துவதாக இளங்கோவடிகள் குறிததுள்ளார். மற்றும்,

> கறவை முறை செயத காவலன்[46]

எனச் சிலப்பதிகாரததிலும்,

> சால மறைநதோமபிக் சான்றவர் கைகரபபக்
> காலை கழிநததன மினறையும் - மேலைக
> கறகவைககன றூர்ந்தானைத் தந்தையும ஊர்நதான
> முறைமைககு மூப்பிளமை யில்.[47]

எனப் பழமொழியிலும் மனுநீதிசசோழன் வரலாறு கூறப பெற்றுள்ளது.

**நோக்கம்**

திருநகரச் சிறப்பில் மனுநீதிச்சோழன் வரலாற்றினைச் சேக்கிழார் உரைத்ததன் நோக்கம் பற்றிப் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. க.வெள்ளைவாரணனார் பின்வரும் கருத்துகளைக் கூறியுள்ளார். காப்பிய ஆசிரியர்கள் தாம் இயற்றும் காப்பியத்தில் காப்பியத்தலைவனது அரசியல் நெறிமுறையினை நகரச் சிறப் பினை ஒட்டிக் கூறுதல் மரபு. இம்மரபினைச் சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய காப்பியங்களில் காணலாம். இறை வனது அருள்வழிப் பட்ட அறநெறியினையே மேலாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் திருத்தொண்டத் தொகையில் போற்றப்பெற்ற அடியார்கள். ஆதலின் நீதியே உருவாக எவ்வுயிர்க்கும் அருளுடை யவனாய் அறநெறி வழுவாது திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவன் மனுநீதிச் சோழனாதலின் அவன்

சரிதம் திருத்தொண்டா வரலாறு கூறும் இப்புராணததின் தொடக்கத்தே திருநகரச் சிறப்பில் விரித்துரைக்கப பெறுவதாயிற்று எனறு கூறியுள்ளார்.[48]

மேலும் இறைவன் தன்பால் அன்புடைய அடியார்களுககு என்றும் எளிவநதருளும் பெருங்கருணைத்திறத்தினை உலக மக்கள் உணர்ந்து போற்றுதற் பொருட்டே இவ்வரலாற்றைக் கூறினேன் எனச் சேக்கிழாரே புலப்படுத்தியுள்ளார்.

**பொன்றயங்கு மதிலாரூர்ப் பூங்கோயி லமர்ந்தபிரான்**
**வென்றிமனு வேந்துனுக்கு வீதியிலே யருள்கொடுத்துச்**
**சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்**
**கென்றுமெளி வரும்பெருமை யேழுலகு மெடுத்தேத்தும்.**[49]

சேக்கிழார் மனுநீதிச்சோழன் வரலாற்றைத் திருநகரச் சிறப்பில் அமைத்ததன் நோக்கம் நகரச சிறப்பில் பழஞ்சரிதம் கூறுதல் முறை ஆதலால் ஆகும். பெரியபுராணம் தோன்றுவதற்குக் காரணம் அநபாயனது நீதியும், சால்புமே. ஆதலின் அவர்க்கு ஆதி முதல்வராய் நீதி போற்றி வந்த சோழர் செய்தியை மன்னு சீரந பாயன் வழிமுதல்[50] என்று போற்றினார் சேக்கிழார். திருவாரூர்ப் பெருமான் எண்ணிறந்தோர்க்கு அருள்புரிந்தது தான் மனுநீதிச் சோழன் நீதிக்குக் காரணம். அதுவே வழி முதலாம் அநபாயன் நீதிக்குக் காரணமாயிற்று. ஆதலில் திருவாரூர்ச் சிறப்பும் அங்கு இறைவன் அருட்செயல்களும் பலவாயினும இதனை இப்பகுதி யில் சிறப்பாய் எடுத்தோதிப் பிறவற்றை உய்த்துணர வைத்துள் ளார் சேக்கிழார்.

மேற்கண்டவற்றிலிருந்து மனுநீதிச்சோழன் வரலாற்றைச் சேக்கிழார் திருநகரச்சிறப்பில் அமைத்தமைக்கு முடிவான காரணம் நன்கு புலனாகிறது. மனுநீதிச்சோழன் விருப்பு வெறுப் பின்றி ஒரு குலத்துக்கு ஒரு நீதியாகாது ஒத்த பொது அறமாகத் திகழ்ந்த தன்மையது போல, இறைவனும் வேறுபாடின்றி எல்லா அடியார்களுக்கும் எளிவந்து கருணை புரிந்தான் என்பதனைக் காட்டவே இப்பகுதி அமைக்கப்பட்டது என்பது தெளிவு.

**தனியடியார்கள்**

சுந்தரா திருத்தொண்டத்தொகையில் திருநீலகண்டத்துக் குயவா முதல் திருநீலகண்டத்து யாழ்ப்பாணர்வரை அறுபது தனியடியாாகளைத் தொகுததுளளாா. இத்தொகை நூலினை வகுத்துப்பாடிய நம்பியாண்டாா் நம்பிகள் சுந்தரா, அவருடைய பெற்றோராகிய சடையனாா, இசை ஞானியார் ஆகிய மூவரையும் சேர்ந்து நாயன்மார்கள் அறுபத்துமூவர் என்னும் தொகையினை உருவாககினாா். இவவிருவரின் அடிச்சுவட்டில் வந்த சேக்கிழாரும் தனியடியார்கள அறுபத்துமூவர் என்றே பாடியுளளாா்.

**தொகையடியார்கள்**

தொகையடியாா எனபது கூட்டமான அடியாா என்று பொருள் திருத்தொண்டததொகையிலும், திருததொண்டர் திருவநதாதியிலும ஒன்பது தொகையடியார்கள கூறபபட்டுள்ளனா இததொகையடியார்களையே சேககிழாரும கூறியுளளாா். அவர்கள் 1.தில்லைவாழ் அந்தணா, 2.பொயயடிமையில்லாத புலவர், 3.பத்தராய்ப் பணிவாா, 4 பரமனையே பாடுவார், 5 சிததததைச சிவனபாலே வைததாா, 6 திருவாரூா் பிறநதார், 7.முப்போதும் திருமேனி தீணடுவார், 8.முழுநீறுபூசிய முனிவா, 9.அபபாலும் அடிசசார்ந்தாா முதலானோர்கள்.

**பெரியபராணம் சுட்டும் சமூகம்**

பெரியபுராணம் ஒரு சமயஞ்சார்ந்த காப்பியமாயினும், ஒரு சமுதாயக் காப்பியமாகவும் திகழ்கிறது. இன்று நாம் பேசுகின்ற புரட்சிகரமான சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்கள பல சேக்கிழா ரால் பேசப்படுகின்றன. 1.உழைப்பே உயர்வு தரும், 2.எல்லோரும் ஓர் குலம், 3. பெண்கள் முன்னேற்றம் முதலாயின அவற்றுள் குறிப்பிடத்தக்கன.

***1.உழைப்பே உயர்வு தரும்***

உழைப்பே உயர்வு தரும் என்பதை அடியவர்கள் வாழ்க்கை யின் மூலம் காட்டுகின்றார் சேக்கிழார். அடியவர்கள் அனைவரும் உடலை வருத்தி உழைத்தவர்கள். திருக்குறிப்புத் தொண்டர் துணி வெளுத்துக் கொடுத்தலாகிய தொண்டு செய்தார். திருநீல

கண்டத்துக் குயவர் தாம் உழைத்துத் திருவோடு செய்து கொடுக கிறார். நேசநாயனாா துணி நெய்து தானமளிககிறார். குருடரான தண்டியடிகள் திருக்குளப்பணி செய்கிறாா. இங்கெல்லாம் உடல் உழைப்பு பெருந்தொண்டாகக் கொளளப்படுகிறது.

உடல் உழைப்பின் உயர்வைத் திருநாவுககரசர் வரலாற்றிலி ருந்தே நனகு அறியமுடிகிறது. 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என வாழ்ந்தவர் அவர். திருவீழிமிழலைப் பஞ்சத்தினபோது அங்குத் திருநாவுக்கரசரும, ஞானசம்பந்தரும் சென்றிருந்தார்கள பஞ்சத்தைத் தீர்க்க வேண்டி இருவரும் படிக்காசு பெற்றார்கள திருநாவுக்கரசர் வாசி இல்லாக்காசு பெற ஞானசம்பந்தர் பெற்ற காசுக்கு வாசி தரவேண்டியிருந்தது. திருநாவுக்கரசர் பெற்ற காசு, உடல் உழைப்பினால் பெற்ற காசு. ஆதலினால், அந்தக காசுக்கு வாசி இல்லை. எனவே, திருநாவுக்கரசா செய்த கைத்தொண்டு, அதாவது உழவாரப்பணி, சிவபெருமானால் மதிக்கப்பெறறது. அதன் பொருட்டு அவர் கொடுத்த காசுக்கு வாசி தரவேண்டிய திலலை என்று சேக்கிழார் எடுத்துக் காடடுகினறார். உழைப்பின சிறபபிறகு இதனினும சிறநத சானறு வேறு வேண்டுவதில்லை.

**2. சாதிப்பாகுபாடு**

சமுதாயத்தைச் சாதிபேதமற்ற சமதர்மம் கொண்டதாகச் சேக்கிழார் அமைத்துள்ளார். சாதி வேற்றுமைகளைக் கடிந்து ஒதுக்காமல் ஒன்றிலொன்று உளங்கலந்த உயாந்த ஒழுக்கத்தை நிலைபெறச் செய்து சாதி வேற்றுமையை அகற்றுகிறார். ஞான சம்பந்தருககும், திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும் இடையிலுண் டான உறவைப்பாராட்டிப் பாடுகின்றார். ஆதி சைவ மரபினில் தோன்றி, அரசரிடத்தில் வளர்ந்த சுந்தரர் கணிகையர் குலத்துப் பரவையாரையும், வேளாண்குடி மரபுச் சங்கிலியாரையும் மணந்த வரலாற்றை எடுத்துக்கூறிச் சாதி வேற்றுமையை அகற்றும் அரிய பணியைச் செய்துள்ளார்.

நமிநந்தியடிகள் வரலாற்றில், தீண்டாமை பற்றிய ஒரு விளக்கம் தருகிறார் சேக்கிழார். ஆருரில் பெருமான் திருமணலிக்கு எழுந்தருளியபோது, யாவர் என்னாது எல்லாக்

குலததிலுள்ளோரும் உடன் சேவிததார்கள், இவரும் சேவித்தாா. இல்லம் சேர்ந்தபின், பூசை செயக என்று மனைவியார் கூறவும், இவர் தம்மைத்தீட்டுத் தொடர்ந்தது என்றும், ஆதலால் நீராடியே பூசனை செயய வேண்டும் என்றும் சொன்னார். மனைவியார் நன்னீர் கொணரச் சென்றபோது, இவர் அயர்ச்சியால் கண்மூட, கனவில் ஆரூர்ப் பெருமான் மறையோய், ஆரூரில் பிறந்தார் எல்லாரும் நம் கணங்கள் ஆன பரிசு காண்பாய்[51] என்று காட்டினார். பிறகுதான் நமிநந்தியடிகள் நல்லுணர்ச்சி பெற்று, அவர்களிடையே சாதி வேற்றுமையில்லை என்று உணர்கிறார். இவற்றால் சேக்கிழார் தீண்டாமையை அடியவர்கள் வாழ்க்கையிலிருந்து விலக்கினார் என்பது புலனாகிறது.

**3. பெண்கள் முன்னேற்றம்**

பெரிய புராணத்தில் சுட்டபபடும் பெண் குலத்தார் அனைவரையும் பக்தியிலும், ஒழுக்கத்திலும், அன்பிலும் மேம்பட்டவர்களாகவே சேக்கிழார் காட்டுகிறார். இக்காலத்தில் மகளிருக்கு இருக்கும் சுதந்திரத்தைவிட அவா காட்டும் மகளிர் சுதந்திரம் பலவகையிலும் மேம்பாடுயுடையாதாகவே விளஙகுகின்றது.

இன்று சமய நெறியில் தன்னியல்பாக இயங்க முடியவில்லை. தன் கணவன் எந்த சமயத்தைப் பின்பற்றுகிறானோ அதே சமயத்தையே மனைவியும் பின்பற்றவேண்டும் என்ற கருத்து சமுதாயத்தில் நிலவுகின்றது. ஆனால், சேக்கிழார் காட்டும் மங்கையர்க்கரசியாரோ தன் கணவரும், நாட்டுமக்களும் புறச் சமயமாகிய சமணத்தை தழுவி ஒழுக, தாம் மட்டும் சைவத்தைக் கொண்டொழுகி அரசனையும் நாட்டு மக்களையும் சைவத்தைப் பின்பற்றுமாறு மாற்றுகிறார். இது அக்கால மகளிர் சமயத் துறையில் தன்னிச்சையாகச் செயல்பட்ட திறனையும் அவர்தம் உயர்ந்த குறிக்கோளையும், தீரமிக்க இயல்பையும், அவர் பெற்றிருந்த எல்லை கடந்த சுதந்திரத்தையும் வெளிப்படுத்துகின்றன.

காரைக்கால் அம்மையார், கணவனுக்கு உறுதுணையாய் நின்று இல்லறம் நடத்திவந்தபோது, அவன் அவரிடம் விளக்கம் பெற்றிருந்த தெய்வ அருள்நிலையைக் கண்டு அஞ்சி அவரைத்

தெய்வமாக வழிபடுகிறான். கணவனுக்கு என்று ஏறபட்ட அழகு பொருந்திய உடலை அவன விரும்பாதபோது வெறுத்து, பேய் வடிவம் வேண்டிப் பெறுகிறார். இது அவரது இல்லறவொழுக கத்தைக் காட்டுகிறது.

திலகவதியாரின் நிலை தியாகமும், வைராக்கியமும் பொருந்திய நிலையாகும். மணமாகாதிருந்தும் கூட, தாய, தந்தை யரால் மணம் பேசப்பட்டார் என்ற காரணத்தால், தமக்கு நிச்சயித்த கலிப்பகையார் போரில் இறந்தார் என்று அறிந்தவுடன, உயிர்துறக்கத் துணிந்தார். தன தம்பியார் மேல்கொண்ட அன்பி னால் அம்பொன்மணி நூல் தாங்கா தனைத்துயிர்க்கும் அருள் தாங்கியிருந்தார்.

மகளிர் வீரத்துக்கும், அன்புக்கும், இல்லறவொழுக்கத திற்கும் இவர்கள் மூவருமே சிறந்த எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றனர். இதிலிருந்தே சேக்கிழார் மகளிா சுதந்திரப் போக்குக்கு எங்ஙனம் சிறப்பான இடம் அளித்துள்ளார் என்பது தெளிவாகிறது.

**அரசியல்**

பெரியபுராணம், அரசியல் கூறுகளை விளக்கும் நூலாகவும விளங்குகின்றது. தமிழ்நாட்டின் மூவேந்தர்களும் இந்நூலுள் சொல்லப்படுகின்றனர். அரசர்களின் நெறிமுறை பற்றியும் இந்நூல் பேசுகின்றது. மன்னனே ஆட்சித்தலைவன். அன்பும், அருளும், நீதியும், செங்கோற்சிறப்பும் உடையவனாக இருந்தான். மன்னர் இல்லாத நாடு உயிரில்லாத வெறும் உடலுக்கு ஒப்பானது.

**மன்னரை யின்றி வைகும் மண்ணுல கென்னுங் காலை**
**யின்னுயி ரின்றி வாழும் யாக்கையை யொக்கும்**[52]

என்று சேக்கிழார் கூறுவதன் மூலம் பெரியபுராணத்தில் ஆட்சித் தலைவனாகிய மன்னனைப் பற்றிய கொள்கை தெரியவருகின்றது. அநபாயச் சோழனின் பேரரசைப் பாரட்டி,

**நற்றமிழ் வரைப்பின் ஓங்கு நாம்புகழ் திருநாடென்றும்**
**பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்கும்**
**கொற்றவன் அநபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றான்**
**மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ**[53]

என அவனின கொற்றக்குடை குடிமக்களுக்குக் குளிர் நிழல் தரும் குடையென்று வாழ்த்துவதன் மூலம், அரசு பேரரசாக, இனிய தாகத் தண்ணளியுடையதாக அமையவேண்டும் என்பதை உணர்த்துகின்றாரா சேக்கிழார்.

அரச தருமம் பற்றி மனுநீதிச்சோழன் வரலாற்றில் விரிததுக் கூறுகின்றார். அனைத்து உயிர்களுக்கும் தீமைவாராது காப்பது அரசனது பொறுப்பு என உணர்த்துகின்றார்.

அரசன் சந்ததியின்றி இறந்து போகும்போது அரசயானை வீதியில் சென்று யாரேனும் ஒருவரைத் துதிக்கையினால் எடுத்துத் தாங்கிவர அவரே அரசராகிறார் என்ற வழக்காற்றுக் கதையை மூர்த்திநாயனார் புராணத்தில் கூறுகிறார். தில்லை மூவாயிரவர் சோழ மன்னர்களுக்கு முடிசூட்டும் தகுதியுள்ளவர்கள் என்பதைக் கூற்றுவநாயனார் புராணத்தால் அறிய முடிகிறது.

இங்ஙனம், அடியவர்களின் திறம்கூறும் நூலில் அமைச்சராக விளங்கிய சேககிழார் அரசியல் பண்புகளையும் விளககியுள்ளார்.

### பொருளாதாரம்

எல்லாரும் செல்வம் உடையவராக இருக்க வேண்டும. ஒரு சிலருக்கே செல்வம உடைமையாதல் கூடாது என்ற பொருளா தாரப் பொதுவுடைமையை வலியுறுத்தியுள்ளார் சேக்கிழார். சுநதரர் வேண்டியவாறு, இறைவன் ஆணையால் பூதகணங்கள் குண்டையூர்கிழார் தந்த நெல்மலையை ஆருர்த்தெருவில் மலை யெனக் குவிந்தன. அவரவர் மனைக்கு முன் உள்ள நெற்குவியலை அவரவரே எடுத்துக்கொள்ளும்படி பரவையார் பறையறைந்தார். இது சேக்கிழார் காட்டிய பொருளாதாரப் பொதுவுடைமைக்குத் தக்க சான்றாக விளங்குகின்றது.

### பண்பாடு

பெரியபுராணத்தில் கூறப்படும் அடியவர்களின் வாழ்க் கையை ஆழ்ந்து நோக்கும்போது அவர்கள் போற்றிக்காத்த வாழ்வியல் நெறிகளை, பண்பாட்டைத் தெளிவாக உணரமுடி கிறது. அவற்றுள் குறிப்பிடத்தக்கன, 1.விருந்தோம்பல் பண்பு,

2.கொடைப் பண்பு, 3.பகைவனுக்கும் அருள்பாலிககும் பணபு. 4.பெண்மைப.பண்பு முதலியன.

**1.விருந்தோம்பல் பண்பு**

பெரியபுராணததில கூறபபடும் அடியார்களில் பெருமபாலானவர்கள் விருந்தோமபல் பண்பில் சிறந்து விளங்கியவாகளாகக் காணப்படுகினறனர். இளையான்குடி மாறரும், அவர் மனைவியாரும் தினந்தோறும் சிவனடியார்களை விருந்தினர்களாக ஏற்று உபசரித்தனர் என்பது,

**ஆளும்நாயகர் அன்பரானவர் அளவிலாருளம மகிழவே**

**நாளுநாளு நிறைந்துவந்து நுகர்ந்ததன்மையின் நன்மையால்**[54]

என்பதால் அறிய முடிகிறது.

சிறுதொண்டர், தம் இல்லத்திற்கு வந்த காபாலிகருக்கு அவரது விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகத் தங்களின் ஒரே மகனான சீராளனை அரிந்து கறிசமைத்து அவரை உபசரிக்க முறபடட செயலிலிருந்தும் விருந்தோம்பற் பண்பை அடியவர்கள் போற்றிய முறை தெரியவருகிறது.

**2.கொடைப்பண்பு**

பெரியபுராண அடியவர்கள் தங்களிடம் வந்தவர்களுக்கு (அடியார்களுக்கு) இல்லையென்னாது வாரி வழங்கியவர்கள். அவர்கள் தங்களது உடைமைகளையெல்லாம் அடியாாகளது உடைமைகளாகக் கருதி வாழ்ந்தவர்கள்.

மானக்கஞ்சாறர் தாம்பெற்ற செல்வம் அனைத்தையும் அடியார்களின் உடைமைகளாகக் கருதி வாழ்ந்தவர். அடியார்களின் குறிப்பினை அறிந்து கொடுக்கும் தன்மையர்.

**மாறில்பெருஞ் செல்வத்து வளம்பெருக மற்றதெலாம்**
**ஆறுலவுஞ் சடைக்கற்றை யந்தணர்த மடியாராம்**
**ஈறில்பெருந் திருவுடையா ருடையாரென் றியாவையுநேர்**
**கூறுவதன் முன்னவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்ளார்.**[55]

என்று சேக்கிழார் கூறுவதன்மூலம் தம்மிடம் வந்த மாவிரதியாருக்கு, அவரது விருப்பத்தை நிறைவேற்றும் முகத்தான்

திருமணக்கோலம் பூண்டுள்ள தம் ஒரே மகளிர் கூந்தலை அரிந்து கொடுத்த மானக்கஞ்சாறருடைய கொடைச் சிறப்பை அறிய முடிகிறது.

கழறிற்றறிவார் சிவபெருமானால் தன்னிடம் அனுப்பப் பட்ட பாணபத்திரருக்கு அவர்கண்டு மகிழ்வெய்தி வியப்படை கின்ற அளவுக்குப் பொருள்களை அளித்தார்.

**பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார்**

**காணக் கொடுத்த நிதியெல்லாங் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப[56]**

என்று சேக்கிழார் கூறுவதன்மூலம் கழறிற்றறிவாரின் கொடைச் சிறப்பை அறிய முடிகிறது.

### 3. பகைவனுக்கும் அருள்பாலிக்கும் பண்பு

மெய்ப்பொருள் நாயனாரை, முத்தநாதன் என்ற எதிரி சிவனடியார் வேடம் பூண்டு வந்து வாளால் வெட்டினான். அவனைக் கொல்ல முயன்ற, தம் மெய்க்காப்பாளன் தத்தனைத் தடுத்து, தத்தா நமர் என்று கூறி, அவனுக்கு எந்தவித இடையூறும் ஏற்படாவண்ணம் கொண்டுபோய் ஊரின் புறத்தே விட்டு வருமாறு கூறியதிலிருந்து மெய்ப்பொருள் நாயனாரிடம் அமைந்திருந்த மேற்கூறிய பகைவனுக்கும் அருள்பாலிக்கும் பண்பை அறியமுடிகிறது.

பெரியபுராண அடியார்கள் போரில் எதிரிக்குக் கூடத் தன்னால் பழிநேரக்கூடாது என்று கருதிய பண்பாட்டைக் கடைப்பிடித்தவர்கள் என்பது ஏனாதிநாதர் வரலாற்றால் அறிமுடிகிறது.

ஏனாதிநாதர், சிவவேடப் பொலிவோடு தம்மை எதிர்த்துப் போரிட்ட அதிசூரன் என்பவனை, என்றும் திருநீறு காணப்படாத அவன் நெற்றியில் அன்று திருநீறு காணப்பட்டதால் அவனைக் கொல்லாமல் விட்டதிலிருந்தும், சிவனடியார் ஒருவர் நிராயுதபாணியைக் கொன்றார் என்ற பழி அதிசூரனுக்கு ஏற்படக் கூடாது என்பதற்காகவும், தானும் எதிர்த்துப் போரிடுபவரைப் போல நடித்ததிலிருந்தும் மேற்கூறப்பட்ட பண்பை அறிய முடிகிறது.

**4. பெண்மைப் பண்பாடு**

ஞானசம்பந்தர் தலயாத்திரை செய்துகொண்டு திருமருகலைச் சென்றடைந்தபோது அவ்வூரிலுள்ள ஒரு சத்திரத்தில் ஒரு பெண் அரவுதீண்டி இறந்து போன ஒரு ஆடவனின் அருகில் நின்று அவனைத் தொடாமல் அழுது அரற்றிக் கொண்டிருக்கிறாள். அவள் அழும்போது பாம்புகூட உன்னைத் தீண்டியதே. ஆனால் என்னால் உன்னைத் தொட இயலவில்லையே என்று ஏங்கி அழுகிறாள். இதனைச் சேக்கிழார் வாளரவு தீண்டவுந்தான் தீண்ட கில்லாள்[57] என்று கூறுவதன் மூலம் அறியமுடிகின்றது.

மணம் செய்து கொள்ளவேண்டும் என்ற முடிவோடு புறப்பட்டு வந்த அவர்களுக்கு இன்னும் திருமணம் நடக்கவில்லை. அதற்குள் அந்த ஆடவனை அரவுதீண்டி அவன் உயிரைப் போக்கி விட்டது. முறையாகத் திருமணம் நடை பெறாத காரணத்தால்தான் அவனைத்தொட்டு அழுவதற்குக் கூடத் தனக்கு உரிமையில்லையே என்று அந்தப்பெண் அழுவதாகச் சேக்கிழார் சித்திரித்துள்ளார். இதிலிருந்து அக்காலத்து மகளிர் மேற்கொண்டொழுகிய பண்பாட்டை அறிய இயல்கின்றது.

மேற்கூறிய சில நிகழ்ச்சிகள் பெரியபுராண அடியார்கள் மேற்கொண்டு ஒழுகிய பண்பாட்டை விளக்கி நிற்கின்றன.

**பிறசமயக் கண்டனங்கள்**

பெரியபுராண காலத்தில் தமிழகத்தில் சைவமே தழைத்திருந்தது. ஆனால், சேக்கிழார் பாடுகின்ற நாயன்மார் சிலருடைய காலங்களில் நிலவியிருந்த சமணம், பௌத்தம் பற்றிய குறிப்புகளையும் காணமுடிகிறது.

பௌத்தம் இரண்டு இடங்களில் பேசப்படுகிறது. சாக்கியர் வரலாற்றிலும், ஞானசம்பந்தர் மதுரையில் சமணத்தை ஒடுக்கிச் சைவத்தைப் பரப்பி மீண்டு வருங்காலத்து வழியில் போதிமங்கை என்ற ஊரில் புத்தசமயத்தார் கண்டு தடுத்தபோது, மெய்ப்பொருள் பற்றிச் சாக்கியரோடு வாதம் செய்து சைவம் அல்லாது மற்றொன்றும் இல்லை என்று நிலைநாட்டிய இடத்திலும் பௌத்தம் பற்றிய அக்கால நிலை விளக்கப்பட்டுள்ளது.

இவ்விரண்டு இடங்களிலும் சைவத்தை உயர்த்திப் பேசுகின்றார் சேக்கிழார்.

சமணம, பல இடஙகளில் பேசபபடுகிறது. இரண்டு இடஙகளில விரிவாகக் காணமுடிகிறது. ஒன்று அப்பர் சமண சமயம் சென்று திலகவதியார இடையிட்டால் சிவபெருமானால் சூலை நோய கொடுததுத தடுத்தாட் கொள்ளப்பட்டது. மற்றொன்று, மதுரையில் ஞானசம்பந்தர் சமணத்தை வென்று சைவ ஒளி விளஙகச செயதது. இவ்விடஙகளிலெல்லாம் சேக்கிழார் பிற சமயஙகளைவிடச சைவமே சிறந்த சமயம என எடுத்துக காட்டியுள்ளார.

சேக்கிழார, அககாலத்தில் மதக்கோட்பாட்டுக்கு மாறாகப் போலி வாழ்க்கை மேற்கொண்டு ஒழுகிய சமண சமயிகள் பலரையும் தம் நூலில் கண்டிக்கின்றார். கொல்லாமை மறைந்துறையும் அமணசமயம்[58] என்றும், பொய்வாய்மை பெருக்கிய புனசமயபபொறியில் சமண்நீசர் புறத்துறையாம் அவவாழ்குழி[59] என்றும், கொலையும் பொய்ம்மையும் மிலவென்று கொடுமையே புரிவோர[60] எனறும் கூறுகிறார்.

## பெரியபுராணத் தாக்கத்தால் உருவான பிற்கால நூல்கள்

அடியார்கள வரலாற்றைக் சேக்கிழார் விரித்துப் பெரிய புராணமாகப் பாடியது, பின் வந்தோர் பலருக்கு ஓர் அரிய முன் மாதிரியாக அமைநதிருப்பதை இலக்கிய வரலாற்றால் அறிய முடிகிறது. சந்தான ஆசாரியருள் ஒருவரான உமாபதிசிவம் சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராணசாரம் என்ற நூல்களைப் பாடியுளளார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சேக்கிழார் பிள்ளைத்தமிழ், துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகளின் நால்வர் நான்மணிமாலை, கொடுமுடி மலைக்கொழுநது பாவலரின் திருத்தொண்டர் சதகம், சிவஞான சுவாமிகளின் சோமேசர் முதுமொழி வெண்பா, வ.தெய்வநாயக முதலியாரின் பெரியபுராண சாரவெண்பா, சி.கே.சுப்பிரமணிய முதலியாரின் சேக்கிழார் செம்மணித்திரள், குமாரபாரதியின் திருத்தொண்டர் மாலை, இரா.இளங்குமரனின் பெரியபுராணக்

கதைகள், கிருபானந்தவாரியாரின் சிவனருட்செல்வர், கோவி. மணிசேகரனின் மாண்புமிகு முதலமைச்சர் முதலான நூல்கள் பெரியபுராணத்தாக்கத்தால் உருவான பிற்கால நூல்களாகும்.

**பெரியபுராணப் பதிப்புகள்**

பெரியபுராணம் பலரால் பல காலங்களில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. அவர்கள் சிறப்பான பதிப்புகள் பற்றிய செய்திகள் இங்கே தொகுக்கப் பெற்றுள்ளன. அவைகளாகவன வீரசைவ மகாலிங்கையர் பதிப்பு-1843, ஆறுமுக நாவலர் பதிப்பு 1854, காஞ்சி சபாபதி முதலியார் பதிப்பு 1859, 1870, திருமயிலை சுப்பராய ஞானியார் பதிப்பு-1870, சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை பதிப்பு-1879, ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் பதிப்பு-1888, சதாசிவப்பிள்ளை பெரியபுராணம் இரண்டாம் காண்டம் பதிப்பு-1889, சுப்பராய நாயகர் பதிப்பு-1893, 1896, செந்தில் வேலு முதலியார் பதிப்பு-1903, திரு.வி.கலியாணசுந்தர முதலியார் பதிப்பு-1910, சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பு-1934, 1937, 1950, திருப்பனந்தாள் காசிமடத்துப் பதிப்பு-1950, 1974, 1982, சைவசித்தாந்த நூறபதிப்புக் கழகப்பதிப்பு-1970.

**உரைப்பதிப்புக்கள்**

உரைப்பதிப்புகளாக வெளிவந்துள்ள நூல்கள் மொத்தம் ஐந்து. அவைகளாவன, மகாலிங்கையர் பொழிப்புரை, திருக்குறிப்புத்தொண்டர் புராணம் வரை 1847, சி.கே.சுப்பிரமணிய முதலியார் பேருரை நூல் முழுமைக்கும்-1935-1954, ஆலால சுந்தரம் பிள்ளை உரைமுதல் மூன்று சருக்கங்களுக்கு பட்டும்-1938, ஆறுமுகத்தம்பிரான் உரை நூல் முழுமைக்கும்-1945.

**பெரியபுராண வசனங்கள்**

பெரியபுராண மூல நூலை எல்லோரும் படித்து இன்புற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் வசனமாக எழுதப்பட்டு வெளிவந்தவையே பெரியபுராண வசனங்கள். அவைகளாவன, புஷ்பரதச் செட்டியாரது கலாரத்நாகர அச்சுக்கூடப் பதிப்பு-1864, ஆறுமுக நாவலர் பதிப்பு-1898, திரு.வி.கலியாணசுந்தர

முதலியார் நாயன்மார் வரலாறு-1937, திருப்பனந்தாள் காசி மடத்துபபதிபபு திருத்தொணடர் புராண உரைநடை-1954.

**பெரியபுராணத்தில் நிகழ்த்தப்பெற்ற ஆய்வுகள்**

பல்வேறு அறிஞர் பெருமக்கள் பெரியபுராணத்தில் ஆய்வுரை எழுதியிருக்கின்றனர். சிலர் ஆய்வு செய்து முனைவர் (டாகடா) படடம் பெறுவதில் ஆர்வம் கொண்டுள்ளனர். இவவிதம பெரிய புராணததில் பல்வேறு ஆய்வு நூல்கள் தோனறிக கொண்டிருக்கின்றன. அவைகளில் சிலவற்றை ஈண்டு காணலாம். வா.மகாதேவ முதலியார்-பெரியபுராண ஆராய்ச்சி-1924, சேலையூர் வா.சகாதேவ முதலியார்-பெரிய புராண ஆராய்ச்சி-1924, அ.மு.சரவண முதலியார்-அறுபான் மும்மை நாயன்மார் சரிததிர உண்மை-1929, சோமசுந்தர தேசிகர்-சைவ சிகாமணிகள் இருவர்-1930, சி.கே.சுப்பிரமணிய முதலியார்-சேக்கிழாா-1933, மா.இராசமாணிக்கனார் - சேககிழார்-1945, மா.இராசமாணிக்கனார்-பெரியபுராண ஆராய்ச்சி-1948, சி கே சுப்பிரமணிய முதலியார்-சேக்கிழாரும் சேயிழையாரும்-1960, ந.சுப்புலட்சுமி-பெரியபுராணத்தில் பெண்மை-1966, திருநெல்வேலி சைவ சிததாநத நூறபதிபபுககழக வெளியீடு - பெரிய புராணச் சொற்பொழிவுகள்-1970, மறை.திருநாவுக்கரசு-பெரிய புராண ஆய்வுரை தொகுதிகள் நான்கு-1973, 1977, கா.சுப்பிரமணிய பிள்ளையவர்கள் சேக்கிழார் அடிகள் வரலாறும் பெரிய புராண ஆராய்ச்சியும்-1975, அ.சங்கரி- பெரிய புராணத்தில் உவமைகள்-1975, அ.ச.ஞானசம்பந்தன்-தேசிய இலக்கியம்-1978, சோ.சிவபாதசுந்தரம்-சேக்கிழார் அடிச் சுவட்டில்-1978, இராசேஸ்வரி-பெரிய புராணத்தில் பெண் மணிகள்-1982, அ.ச.ஞானசம்பந்தன்-பெரியபுராணம் ஓர் ஆய்வு-1987, தா.வே.வீராசாமி-பெரியபுராண ஆராய்ச்சி-1987.

**தொகுப்புரை**

மேற்கூறப்பட்ட செய்திகளின் மூலம் கீழ்க்காணும் முடிவுகள் கிடைக்கப்பெறுகின்றன.

1. திருத்தொண்டர் புராணம் என்பதே சேக்கிழார் தம் நூலுக்கு இட்ட பெயரென்பதும், பெரிய புராணம் என்பது சிறப்பு

நோக்கி வழங்கி வரும் பெயரென்பதும் ஆய்ந்து நிறுவப பெற்றன.

2. சேக்கிழார் காலம் பற்றி விரிவான ஆய்வு மேற்கொள்ளப் பெற்று, இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆட்சியின் பிற்பகுதியும், மூன்றாம் குலோத்துங்க ஆட்சியின் முற்பகுதி யுமே சேக்கிழார் வாழ்ந்த காலம் என்பது உறுதி செய்யப் பெற்றது.

3. பெரிய புராணம் இரண்டு காண்டங்களையும், பதின்மூன்று சருக்கங்களையும், நாலாயிரத்து இருநூற்று எண்பத்தாறு பாடல்களையும் மட்டுமே கொண்டது என்பதும், மிகைப் பாடல்கள் இடைச் செருகல்களே என்பதும் தக்க சான்றுகள் காட்டி உறுதி செய்யப்பெற்றது.

4. பெரிய புராணத்திற்கு முற்பட்ட இலக்கியங்களில் விருத்தப் பாவுடன் கட்டளைக் கலித்துறை விரவி வருவதில்லை. சேக்கிழாரே முதன்முதல் கட்டளைக் கலித்துறை யாப்பு விரவி வருமாறு, காப்பியம் அமைத்துள்ளார் என்பது நன்கு விளக்கி நிறுவப் பெற்றது.

5. பெரிய புராணத்தைக் காப்பிய ஒருமைப்பாட்டுடன் சேக்கிழார் அமைத்துள்ளார் என்பதும், பெரியபுராணம் பெருங்காப்பிய இலக்கணங்களையெல்லாம் முற்றிலும் கொண்டு இலங்குகின்ற திறமும் முறையாக நிறவப்பெற்றது.

6. சேக்கிழார் திருத்தொண்டத் தொகையை முதல் நூலாகவும், திருத்தொண்டர் திருவந்தாதியை வழிநூலாகவும், வேறு பல சான்றாதாரங்களையும் கொண்டு பெரிய புராணத்தை விரி நூலாகச் செய்துள்ளார் என்பது உரியவாறு விளக்கப்பெற்றது.

7. நகரப்படலத்தில் மனுநீதிச்சோழன் வரலாறு கூறப்பட்டதன் உண்மை நோக்கம் சுட்டப்பெற்றது.

8. சேக்கிழார் காண விரும்பிய, சமத்துவ சமுதாய அமைப்பும் மக்கள் போற்றி ஒழுக விரும்பிய உயர் பண்பாடுகளும், சேக்கிழாரின் புறச் சமயங்கள் பற்றிய மதிப்பீடுகளும், சேக்கிழாரின் காப்பியத்தாக்கத்தால் உருப்பெற்ற பிற்கால

நூல்களும், பதிப்புகளும், ஆய்வுகளும் முறையாக முயன்று தொகுதது நிறைவாகச் சுட்டப்பெற்றன.

9. பெரியபுராணத்தில் - திருக்குறளின் தாக்கம் அமைந்துள்ள திறத்தை ஆராய, பெரிய புராணம் பற்றிய விரிவான ஆய்வு இன்றியமையாது வேண்டப்படுதலின் தொடர்புகருதி இம் முதல் இயல் பெரிய புராணத்தைப் பல்வேறு கோணங்களில் ஆயநது காணப் பயன் கொள்ளப்பெற்றது.

### குறிப்பு விளக்கம்

1. பெரியபுராணம், பா.10
2. மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பன்னிரண்டாம் நூற்றாண்டு, முதல்பாகம், ப.154
3. பெரிய புராணம், பா.3
4. கந்தபுராணம், கச்சியப்பச் சிவாச்சாரியார், அவையடக்கம், பா.1
5. மு.அருணாசலம், மு.நூ., ப.116
6. செந்தமிழ் தொகுதி இரண்டு, பக்.273, 386
7. சோமசுந்தர தேசிகர், சைவசிகாமணிகள் இருவர், பக்.107-120
8. அ.கோபிநாதராவ், சோழ வம்ச சரித்திரச் சுருக்கம், பக்.75-76
9. கா.சுப்பிரமணிய பிள்ளை, தமிழ் இலக்கிய வரலாறு, ப.334
10. மு.இராகவையங்கார், சாசனத் தமிழ்க்கவி சரிதம், பக்.70-78
11. மா.இராசமாணிக்கனார், பெரிய புராண ஆராய்ச்சி, பக்.16-20
12. சி.கே.சுப்பிரமணிய முதலியார், சேக்கிழார், பக்.12-23
13. மு.அருணாசலம், மு.நூ., பக்.143-150
14. தி.வை.சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம், இரண்டாம் பகுதி, பக்.167-168
15. க.வெள்ளைவாரணனார், பன்னிரு திருமுறை வரலாறு, இரண்டாம் பகுதி, ப.825

16. செந்தமிழ் தொகுதி இரண்டு. பக 273-386
17. மு.இராகவையங்கார், சாசனத் தமிழ்க்கவி சரிதம், பக்.75-76
18. அ.கோபிநாதராவ, சோழவணிக சரித்திரச சுருககம். ப.75
19. கா.சுப்பிரமணிய பிள்ளை, மு.நூ., ப.333
20. க.வெள்ளைவாரனார், மு.நூ., ப 804
21. மு.இராகவையஙகார், மு.நூ., ப.78
22. ம.இராசமாணிக்கனார், மு.நூ., ப 21
23. தி.வை.சதாசிவ பண்டாரததார், மு.நூ., ப.167
24. க.வெள்ளைவாரணனாா, மு.நூ., பக்.807-825
25. பெரிய புராணம, பா.137
26. உமாபதி சிவாசாரியாா, சேக்கிழாா புராணம், பா.52
27. சி கே.சுபபிரமணிய முதலியார், சேககிழாா பக.206-224
28 க.வெளளைவாரனாா, மு.நூ., ப.1049
29 பெரிய புராணம், பா.1410
30. மேறபடி நூல். பா.1318
31. மேறபடி நூல். பா.1338
32. மேற்படி நூல், பா.1340
33. சி.கே.சுப்பிரமணிய முதலியாா, திருத்தொண்டர் புராணம் பேருரை, முதற்பகுதி, ப.1
34. க.வெள்ளைவாரணனாா, மு.நூ., ப.826
35. பெரிய புராணம், பா.47
36. மேறபடி நூல், பா.49
37. மேற்படி நூல், பா.49
38. காஞ்சி புராணம், கச்சியப்ப முனிவர், பாயிரம், பா.12
39. க.வெள்ளைவாரனார், மு.நூ., ப.830
40. பெரிய புராணம், பா.50
41. மேற்படி நூல், பா.86

42. க. வெள்ளைவாரணனார், மு.நூ., ப.854

43. சி. கே. சுப்பிரமணிய முதலியார், மு.நூ., ப.103

44. சிலப்பதிகாரம், கா.20, வரி 48-49

45. மேற்படி நூல், கா.20, வரி.53-55

46. மேற்படி நூல், வஞ்சிக்காண்டம், கா.29, பா.17, வரி.4

47. பழமொழி, பா.93

48. க. வெள்ளைவாரணனார், மு.நூ., ப.872

49. பெரியபுராணம், பா.134

50. மேற்படி நூல், பா.98

51. மேற்படி நூல், பா.1887

52. மேற்படி நூல், பா.1001

53. மேற்படி நூல், பா.85

54. மேற்படி நூல், பா.444

55. மேற்படி நூல், பா.879

56. மேற்படி நூல், பா.3788

57. மேற்படி நூல், பா.2377

58. மேற்படி நூல், பா.1307

59. மேற்படி நூல், பா.1343

60. மேற்படி நூல், பா.1351



# 2

# திருக்குறள் பகுப்பாய்வு

பெரியபுராணத்தில், திருக்குறளின் தாக்கம் பற்றி ஆய்வு மேற்கொள்வதற்குத் திருக்குறள் பற்றிய அறிமுகமும், பகுப்பாய்வும் இன்றியமையாதன. ஆதலின், "திருக்குறள் பகுப்பாய்வு" எனனும் இப்பகுதியில் திருக்குறள் பற்றிய பொதுவான விளக்கங்களைத் தரும்நோக்கில் அமைகின்றது. நூற்பெயர், நூலாசிரியர், காலம், நூல் அமைப்பு, நூல் பகுப்பு, சமூக இலக்கியங்களாகிய எட்டுத்தொகை பத்துப்பாட்டிலிருந்து வேறுபட்டு நிற்குமதிறம், எதிர்நீச்சல் இலக்கியம், சங்ககால சமூக - அரசியல் - பொருளாதாரக் கோட்பாடுகளோடு திருக்குறள் மாறுபடும் இடங்கள், கடைச் சங்கநூல்களில் திருக்குறளின் ஆட்சி, பிற்கால நூல்களில் திருக்குறளின் ஆட்சி - காப்பியங்கள் - சமயநூல்கள் - திருக்குறளின் தாக்கத்தால் உருவான அறநூல்கள், பிறவகை நூல்கள், திருக்குறள் உரைகள், மொழி பெயர்ப்புக்கள், அரிய பதிப்புமுயற்சிகள் என்னும் தலைப்புக்களில் திருக்குறள் பற்றிய பல செய்திகள் நிறுவப்பட்டுள்ளது. முடிவுகள் அவ்வத்தலைப்புக்களின் நிறைவிலும், தொகுத்து இயல் நிறைவிலும் வழங்கப் பெற்றுள்ளன.

## நூற்பெயர்

திருவள்ளுவர் இயற்றிய நூல் திருக்குறள் என்ற பெயரால் இன்று வழங்கப்படுகிறது. இது ஆசிரியர் தம் நூலுக்கு வைத்த பெயரன்று. உலகம் வழங்கிய பெயர். தம் நூலுக்கு 'இது பெயர்' என அவர் எடுத்துக் கூறவில்லை. இதனை ஆங்கிலப் புலவர் ஒருவர் "தனக்கு ஓர் இயற்பெயர் இல்லாமல், தான் செய்த நூலுக்கு ஒருபெயர் சூட்டாமல் உயர்ந்த நூல் ஒன்றைச் செய்து உதவிய வள்ளலை நாம் எப்படிப் பாராட்ட வேண்டும்' என வியப்பதாகத் தம்நூலில் கூறியுள்ளார். ச.தண்டபாணிதேசிகர்.[1]

'குறள்' என்னும் பாவினால் நூலை ஆக்கியிருப்பதால் 'குறள்' என்பது கருவியாகு பெயராய் வழங்கப்படுகிறது

என்கிறார்கள் மு.சண்முகம் பிள்ளையும்,[2] ச.தண்டபாணிதேசிகரும்.[3] பழந்தமிழ் இலக்கியமாகிய கலித்தொகை, பரிபாடல் எனனும் நூல்கள் பாட்டாலேயேபெயர் பெற்றன என்பது ஈண்டு நோக்கத்தக்கது. 'திரு' என்பது சிறப்பு நோக்கிக் கூறும் அடைமொழி. குறளுக்கும் சிறப்பு நோக்கித் திரு என்னும் அடைமொழி சேர்க்கப் பெற்றது. இங்ஙனமே திருவாசகம், திருக்களிற்றுப் படியார் முதலிய நூல்களும் வழங்குகின்றன.

இந்நூல், தோன்றிய காலம் முதல் கவிஞரும், புலவரும், இதன் தன்மை நோக்கிப் பல பெயர்களைப் படைத்து வழங்கியுள்ளனர். திருவள்ளுவரால் அருளப்படட இந்நூல், ஒன்பது பெயர்களால் வழங்கப்பட்டு வந்தது என்பதனை,

**சீரார் திருக்குறள் உத்தர**
**வேதம திருவள்ளுவர்**
**பேரார் பொய்யாமொழி வாயுறை**
**வாழ்த்துப் பெருந் தெயவநூல**
**ஊரா பொதுமறை முப்பால**
**தமிழமறை யொன்பதும நம**
**காராளர் கற்றுணர் செய்யுட்கு**
**நாமங்கள் கார்குழலே.**

என்னும் பழஞ் செயயுள் மூலம் அறிய முடிகிறது. பிற்காலத்து, மேலும் பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. திருவள்ளுவப்பயன், பழமொழி, பால்முறை பொருளுரை, முதுமொழி, வள்ளுவர் வாய்ச்சொல், வள்ளுவனார் வைப்பு என்பன சில.

ஆசிரியர் தம் நூலுக்கு வைத்த பெயர் எது என்பது பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. இப்பெயர்களுள், 'முப்பால்' என்ற பெயரே ஆசிரியர் வைத்ததாக இருக்க வேண்டும் என்பது பெரும்பான்மையோரின் கருத்து. இதற்குப் பல சான்றுகள் உள்ளன.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களைத் தொகுத்துக்கூறும் வெண்பா ஒன்று, திருக்குறளை 'முப்பால்' என்றே குறிக்கின்றது.[4] திருக்குறளின் பல்வேறு சிறப்புக்களையும் கூறும் திருவள்ளுவமாலையில் "முப்பால்" என்ற பெயர் வழக்கே மிகுதியாயுள்ளது.[5]

மேலும் திருக்குறளைச் சிறப்பித்துக் கூறும் சில தனிப்பாடல் களும் "முப்பால்" என்றே குறிப்பிடுகின்றன.

. . . தெறுகலியைச்
செற்றவேல் மாற திருவள்ளுவனார் வாய்ச்
சொற்றகுமுப் பால்வாழ்த்துச சொல [6]

என்று பெருந்தொகைப் பாடல் திருக்குறளை 'முப்பால்' என்ற பெயரிலேயே வழங்குகின்றது. பரிமேலழகர் உரைச் சிறப்புப் பாயிரத்தில் 'முப்பால்' என்ற பெயரே காணப்படுகின்றது.[7] பாலாவது, பகுப்பு அல்லது பகுதி என்னும் பொருள் தருவது. திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பகுதிகளாக உள்ளமையின், 'முப்பால்' என்பது முதற் பெயராய் அமைந்தது என்கிறார் மு.சண்முகம் பிள்ளை. [8]

எனவே திருக்குறளுக்குத் திருவள்ளுவர் இட்ட பெயர் 'முப்பால்' என்பதை மேலே காட்டிய சான்றுகளால் தெளியலாம். இவர்தம் நூலை மூன்று பெரும் பகுதியாக அமைத்துள்ளமையும் இதற்கு ஆதாரமாக உள்ளது. பிற்காலத்தில்தான் திருக்குறள் என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

**நூலாசிரியர்**

திருவள்ளுவர் வரலாற்றைப் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றது. இவரது வரலாற்றை அறியக் கபிலரகவலும், ஞானாமிர்தமும் துணை செய்கின்றன. அவற்றை அடிப்படையாக வைத்தும், திருவள்ளுவமாலைச் செய்யுட்களைக் கொண்டும் ஒரு வரலாறு உருவாகியுள்ளது.

திருவள்ளுவர் தந்தை பகவன்; தாய் ஆதி, உடன்பிறந்தார்கள் அவ்வை, உப்பை, உருவை, வள்ளி, அதியமான், கபிலர். தாயாகிய ஆதி, தம் கணவரான பகவனது கட்டளைப்படி பெற்ற மக்களைப் பெற்ற இடத்தில் விட்டுச் சென்றனர். அங்குள்ள பல்வேறு சாதிமக்கள், குழந்தைகளை எடுத்து வளர்த்தனர். இதனால் திருவள்ளுவர் முதலாயினோர் பல்வேறு சாதியினராகக் கருதப் பட்டனர். திருவள்ளுவர், உரிய காலத்து வாசுகியம்மை யாரை

மணந்து, நெசவுத் தொழிலால் வாழ்க்கை நடத்தி வந்தனர். தம்முடைய வாழ்வின அனுபவங்களையும் உலகம் கொடுத்த உயர்ந்த கருத்துககளையும் கொண்டு இந்நூலைச் செய்து மதுரைச் சங்கத்தில் அரங்கேற்றம் செய்தார். அங்கிருந்த புலவர்களுக்கு இவரது புலமையில் ஐயபபாடு தோன்ற அசிரீரியே அதனை நீக்கி வைத்தது. திருக்குறளை அரங்கேற்று கையில் சீத்தலைச்சாத்தனார் முதலிய புலவாகள் இருநது கேட்டனர் என்பதே அவவரலாறு.

கபிலரகவலில, ஆதி எனபவள, கருவூர்ப் புலையனால் வளர்ககப்பட்டவள் எனறும், பகவன் திருவாரூர்ப் பார்ப்பனன் எனறும் குறிபபிடப பெற்றுள்ளது. ஞானாமிர்தம், யாளிதத்தன் எனனும் பார்ப்பனனுக்கும், பார்ப்பனி எனககருதப்பட்ட ஒரு புலைசசிக்கும் பிறந்தவன் எனப் பேசுகிறது.

பழைய பதிப்புக்களில் காணப்படும் திருவளளுவர் வரலாறு, திருககயிலையில் பரமசிவன் பார்வதிககுச சொனனதாகத தொடஙகுகிறது. இல்வாழக்கையிலிருந்து ஐமபுல இனபங்களை ஆராயந்து கொண்டே வீட்டின்பத்தை அடைந்தவர் யார் என்று உமையமமை கேட்க இறைவன சொனனதாக வரலாறு கூறுகின்றது.

இவ்வரலாறுகள ஒன்றுககொன்று வேறுபட்டு இருக்கின்றன. இவற்றிலிருந்து உண்மை வரலாற்றை காண்பது அரிதாகின்றது. இவரது நூலிலிருந்தும் தக்க சான்றுகள் கிடைக்கவில்லை. அறிவுலகம், கற்பனைப்புனைவுகளை வரலாற்று மெய்மைகளாக ஏற்காது. பலகாலத்தும், பலரும், தத்தமது விருப்பத்திற்கேற்ப எழுதிவைத்த மேற்கூறிய கதைகள் எவற்றையும் திருவள்ளுவரின் உண்மை வாழ்க்கை வரலாறாக ஏற்க இயலவில்லை. நூலில் காணப்படும் உயர்கோட்பாடுகள் பலவற்றையும், தம் வாழ்வில் கொண்டொழுகிய சான்றோர் திருவள்ளுவர் என்பதையே அவர் வாழ்வியல் முறையாகக் கொள்ள இயல்கின்றது.

நூலாசிரியருக்குத் திருவள்ளுவர் என்ற பெயரே இன்று நிலவுகின்றது. இது இவர் இயற்பெயர் அன்று. பிறந்த குடிப்

பெயர் அல்லது வளர்ந்த குடிபபெயரெனறு கொளள இடமிருக கின்றது. இவ்வுண்மையை மாமூலனாா திருவளளுவ மாலையில கூறியுளளாா.[9]

வள்ளுவா என்பது சாதி பறறிய இயறபெயா வளளுவா என்பார் தமிழ் நாட்டில் பறையர் என்னும குடியினருககுச சோதிட நூல் வல்லாராய்த் தமிழறிவு மிககவராய இனறும் இருக கினறனா. அககுடியினரால் இவா வளாககப் பெறறமையாலோ, அக்குடியில் பிறந்தமையினாலோ இபபெயர் பெற்றாா. இவருக குப் பததுபபெயர்கள இலககிய உலகில் வழங்குகினறன. தேவா, தெயவபபுலவர் பொயயில்புலவா, முதறபாவலாா, பெருநாவலா, மாதாநுபஙகி, செநநாபபோதார், நாயனாா, நானமுகனார், புலவர் எனபன. இபபெயர்கள் யாவுமமதிருவள்ளுவமாலையில் புலவாகள படைதது மொழிந்த சிறபபுப பெயாகள.

**காலம்:**

திருவளளுவர் காலத்தைப பற்றிப பல்வேறு கருததுக்கள நிலவுகின்றன. அவருடைய காலததை வரையறுக்கப பலருப முயனறுளளனா

1. வையாபுரிபபிளளை "ஒருவநதம்" எனற சொல ஆராய்ச்சியால் திருக்குறள கி.பி. 450 இல் தோனறியது எனறு துணிநதுளளாா.[10] இவருடைய கருததை டி பி.பழனியபபாப பிள்ளையும,[11] சோமசுநதர பாரதியும[12] மறுததுளளனா.

2. மா.இராசமாணிககனார், கி.பி. முதல இரண்டு நூற்றாண்டுகளைச சாாந்தனவாகக் கருதபபடும, பெரும்பாலான தொகை நூல்களிலும், சிலப்பதிகாரம், மணிமேகலை எனப்படுப காப்பியங்களிலும குறட்பாக்களின சொறகளும, தொடர்களும, கருததுக்களும ஆளப்பட்டிருததலின் அவறறுக்கு முற்பட்டது திருக்குறள். எனவே திருக்குறள் காலம கி.மு. ஒன்று முதல முந்நூறுக்கு உடபட்டது எனக் கூறுகிறாா.[13]

3. சமண பெளததக் கருத்துக்கள் திருக்குறளில் இடம பெற்றுள்ளன எனறும, அச்சமயங்கள் தமிழ்நாட்டில் அசோகன் காலத்தில் அதாவது கி.மு. மூன்றாம நூற்றாணடில் பரவின

என்றும் கொண்டு திருவள்ளுவர் காலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டு என்கிறார் மறைமலையடிகள்.[14]

இவற்றையெல்லாம் காரணம் காட்டி இராமச்சந்திர தீட்சிதர் தமது நூலில் திருவள்ளுவா காலத்தை ஒருவாறு வரையறுத்துள்ளாா. ச.தண்டபாணி தேசிகர் இராமச்சந்திர தீட்சிதர் கருத்தையே கொண்டு கி.மு. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டு எனக் கொண்டுள்ளார்.[15]

நிலமபுடை பெயர்வ தாயினும ஒருவன்
செய்தி கொனறோர்க குய்தி இல்என
அறம் பாடிற்றே - ஆயிழை கணவ

எனப் பாடுகின்றார் ஆலத்தூர் கிழார். 'அறம் பாடிற்று' என அவர் கூறுவதற்கு 'அறநூல் கூறிற்று' என்பதே பொருள். உரையாசிரியர்களும் அங்ஙனமே பொருள் கொண்டுள்ளனர். அறநூல் என்பது திருககுறளைக் குறிக்கும் என தி.வை.சதாசிவ பண்டாரத்தாா குறிபபிடுகிறார்.[17] இதிலிருந்து சங்க காலததிறகும் முற்பட்டவர் திருவள்ளுவர் எனபது புலனாகிறது.

மேறகூறியவற்றிலிருநத திருவளளுவர் காலம் கி.மு.முதல் இரண்டு நூற்றாண்டுக்கு உடபடடது என்று கோடலே அமைவுடைத்தாகும்.

## நூல் அமைப்பு

திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று மூன்று பகுதிகளாய்ப் பிரிக்கப்பட்டுள்ளது. அறத்துப்பால் முப்பத்தெட்டு அதிகாரங்களையும், பொருட்பால் எழுபது அதிகாரங்களையும், காமத்துப்பால் இருபத்தைந்து அதிகாரங்களையும் கொண்டுள்ளன. ஒவ்வொரு அதிகாரமும் பத்துப்பத்துக் குறள் வெண்பாக்கள் அடங்கியது. ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்கள் இந்நூலில் உள்ளன.

## நூல் பகுப்பு

முதலில் பாயிரம் அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்து, மழையைப் பேசும் வான்சிறப்பு, அறவோரைப் பற்றிப் பேசும் நீத்தார் பெருமை, அறன் எல்லோர் வாழ்விலும் அடிப்படை

ஆதலை வற்புறுத்தும் அறன் வலியுறுததல ஆக நான்கு அதிகாரங்கள் பாயிரமாக அமைகின்றன.

பாயிரத்தை அடுத்து, அறத்துப்பால் நூலின தொடக்கமாக அமைகின்றது. இதில் இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என்ற மூன்று இயல்கள் அடங்கியுள்ளன.

இல்லறவியல், இல்வாழ்க்கை தொடங்கிப் புகழ் ஈறாக இருபது அதிகாரங்களைக் கொண்டுள்ளது. இவ்வியலில் ஒருவன் மனைத்தக்க மாண்புடையவளை வாழ்க்கைத் துணையாகக் கொண்டு, நல்லறமாம் இல்லறத்திற்கியைந்த செயல்களை நாள் தோறும் செய்து மக்கட்பேற்றுடன் வாழ்தலைக் கூறுகின்றார்.

துறவறவியல், அருளுடைமை முதல் அவாவறுத்தல் ஈறாகப் பதின்மூன்று அதிகாரங்களைக் கொண்டு விளங்குகிறது. இவ் வியலில் இவ்வுலகில் நில்லாமையே, நிலையானது என்று தெளிந்து, பிறப்பால் வருவது துன்பமே என்றும், பிறவிப் பிணியை அகற்றுவதே பேரின்பம் என்றும் கொண்டு பற்றற்று மறுமை நோக்கித் தவஞ்செய்யும் அரிய நெறியைக் கூறுகிறார்.

ஊழியலை ஒரு அதிகாரத்தால் அமைத்துள்ளார். வாழ்வும் தாழ்வும் விளைவது ஊழால், அவரவர் செயத வினைகள் அவரவரையே பற்றி நிற்பது. இது இல்லறத்தாருக்கும். துறவறத் தாருக்கும் பொது என்கிறார்.

பொருட்பால் அரசியல். அங்கவியல், குடியியல் என மூன்று இயலாகப் பிரிக்கப்பட்டுளளது. அரசியல், இறைமாட்சி முதலாக இடுக்கணழியாமை ஈறாக இருபத்தைந்து அதிகாரங் களைக் கொண்டுள்ளது. இவ்வியலில் அரசன் எதத்கு குணங்க ளோடு விளங்கி, எங்ஙனம் நாட்டை ஆளவேண்டும் என்பதைக் கூறியுள்ளார். அங்கவியல் அமைச்சு முதல் மருந்து ஈறாக முப்பத் திரண்டு அதிகாரங்களைக் கொண்டுள்ளது. இவ்வியலில் அரசியல் நடத்துவதற்கு ஒன்றற்கொன்று துணையான அங்கங் களின் இயல்பு கூறப்பட்டுள்ளது. குடியியல், குடிமை முதல் கயமை ஈறாகப் பதின்மூன்று அதிகாரங்களைக் கொண்டுள்ளது. இவ்வியலில் சிறந்த குடிமக்களின் இயல்புகளை விரித்துரைத் துளளார்.

காமதத்துப்பால் களவியல், கற்பியல் என இரண்டு இயல் களைக் கொண்டுள்ளது. களவியல் தகையணங்குறுத்தல முதலாக அலரறிவுறுததல் ஈறாக ஏழு அதிகாரங்களைக் கொண்டுள்ளது. இவ்வியலில் தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் களவில் கண்டு அதனவழி இன்பியல் வாழ்வைத தொடங்குவதைக் கூறுகின்றார். கற்பியல், பிரிவாற்றாமை முதல் ஊடலுவகை ஈறாயப் பதினெட்டு அதிகாரஙகளைக் கொண்டுள்ளது. இவ வியலில் தலைவன் தலைவியின நிலை கூறபபட்டுளளது.

**சமூக இலக்கியங்களாகிய எட்டுத்தொகை பத்துப்பாட்டி லிருந்து வேறுபட்டு நிற்கும் திறம்**

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகை பத்துப் பாட்டி லிருந்து திருக்குறள் பாவகையாலும், நூல் அமைந்திருக்கும் முறையாலும, பிறவகையாலும் வேறுபட்டு நிற்கிறது.

1. சஙக இலக்கியங்கள் பல புலவர் பாடிய செய்யுட்களின் தொகுதியாக அமைந்துள்ளது. திருக்குறள் திருவள்ளுவர் ஒருவ ராலேயே பாடபபட்டது.

2. திருவளளுவர் வாய்ச சொலலிறகு முன்னாத்தோனறிய நூல்களெல்லாம் பிறபாவகையால் அமைந்துள்ளன. திரு வள்ளுவா மடடும் குறள் யாப்பினை மேற்கொண்டு இயறறி யுள்ளார்.

3. சஙக இலக்கியங்கள் தனி மனிதர்களைக் கருப் பொரு ளாகக் கொண்டு அமைந்துள்ளன. திருக்குறள் சமுதாயத்தினர் அனைவர்க்கும உரியதாகப் பாடப்பட்டுள்ளது.

4. அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருளையும் ஒரு சேரக்கூறும் நூல்கள் சங்க இலக்கியங்களில் இல்லை. திருவள்ளுவரே முப்பொருளையும் ஒருங்கே அமைத்துள்ளார்.

5. சங்க நூல்களில் உள்ள அகப்பாடல்களுக்கும் திருக் குறளில் உளள அகப்பொருட்பாக்களுக்கும் வேறுபாடுள்ளது. பழைய அகபபடல்கள் தொல்காப்பியர் வகுத்த முதல், கரு, உரி என் முறையிலேயே பாடப் பட்டுள்ளன, சில பாடல்கள் தாம் உரிப்பொருள மட்டும் பெற்று விளங்குகின்றன. ஆனால்,

திருவள்ளுவர் வாயமொழியின் அகபபாடடுகளாகிய காமததுப பாலின் குறட்பாககள் எல்லாம் முதலபொருளும், கருப பொருளும் இன்றிக் காதலுணர்வை மட்டும புலப்படுதது கின்றன.

6. சங்கப்பாடல்களில அமைந்துளள ஊடல்முறை வேறு. திருக்குறளில் அமைந்துள்ள ஊடலமுறைவேறு. சஙகபபாடல் களில் ஊடலைப் பறறிக் குறிப்பிடும ஞான்று பரத்தையைப பற்றிக் குறிப்பிடுவது உண்டு. திருககுறளில் பரத்தையா இலலை

7. சங்கப்பாடலில் தலைவன் பரத்தையை நாடிச செல் வதைப் போல் திருக்குறளில் தலைவன் பரத்தையை நாடிச செல்லும் அமைப்பு இல்லை.

8. சங்க அகப்பாடலில் தலைவி, தலைவனைவிடப பண்பாடு உடையவளாக விளங்குகின்றாள். திருக்குறளில பெண்ணைப் போலவே ஆணும் நெறியுடைய நல்லோனாகக காட்சியளிக்கின்றான்.

மேற்கூறியவற்றிலிருந்து திருக்குறள் சங்க இலக்கியஙகளி லிருநது வேறுபட்டு நிற்கும் திறத்தை நன்கு அறிய முடிகிறது.

**எதிர்நீச்சல் இலக்கியம்**

திருக்குறள் சஙககால வாழக்கை முறையைக் கண்டனம் செய்ய எழுந்த நூல் என்று கூறலாம். முன்னோர் கூறிய கருத்துக்கள் என்று எல்லாவற்றையும் கண்மூடிப்போற்றாமல், நல்லனவற்றை மட்டும் மேற்கொண்ட புரட்சிமனம் உடையவர் திருவள்ளுவர். வாழ்க்கைக்குத் தீமைதருபவை அறநெறிக்கு மாறானவை, சமுதாயத்தில் வழக்கத்தில் இருப்பினும் அவற்றை யெல்லாம் அஞ்சாது எதிர்த்த புரட்சி நூல் திருக்குறள்.

சங்க காலத்தில் இருந்த சில தீய பழக்க வழக்கஙகளை அறநெறிக்கு மாறான செயல்களைக் கடிந்து ஒதுக்கியுள்ளார் அக கால மக்கள் புலால் உண்டனர். புலாலுக்காக உயிர்க் கொலை புரிந்தனர். கள்ளுண்டு களித்தனர். மேலும் சூதாடிப்பொழுது போக்குதலும், பரத்தையருடன் கூடி மகிழ்ந்து வாழ்தலும் மலிந்து கிடந்தன. இத்தகைய சமுதாயத்தில் கள்ளுண்ணலையும்,

புலாலுண்ணலையும், கழிகாமத்தையும் கடிந்து பேசியுள்ளது குறிப்பிடத்தக்கது.

அக்காலப் புலவர்கள் சமூகத்தின் விருப்பத்தை மட்டுமே பாடினார், ஆனால் குறள சமூகத்தை நெறிப் படுத்த அதற்கு நன்மை தருவனவற்றை மட்டுமே எடுத்துப் பேசுகிறது.

கள்ளுண்ணுதலையும், சூதாடுவதையும் தங்கள் வாழ்க்கையின் ஒரு பகுதியாக நினைத்து வாழ்ந்த மக்களிடையே இத்தகைய புதுமைக் கருத்துக்களை அஞ்சாது எடுத்தியம்பிய திருக்குறள் எதிர் நீச்சல் இலக்கியம் என்பதில் ஐயமில்லை.

**சங்ககாலச் சமூக - அரசியல் - பொருளாதாரக் கோட்பாடுகளோடு திருக்குறள் மாறுபடும் இடங்கள்**

சங்ககாலச் சமூக - அரசியல் - பொருளாதாரக் கோட்பாடுகளோடு திருக்குறள் சில இடஙகளில் வேறுபட்டுள்ளது.

**சமூகம்**

சஙககாலச சமூகததில் சில தீயபழகக வழக்கங்கள் அற நெறிககு மாறான செயல்கள் மலிந்திருந்தன. அவறறையெல்லாம திருவள்ளுவர் கடிந்து விலக்கினார்.

**புலால் உண்ணாமை**

சங்க இலக்கியத்தில் உள்ள பல பாடலகள மக்கள் புலால் உண்டு திளைத்ததை விரிவாகப் பாடுகின்றன. புலால் உணவின் வகை, சமைக்கும முறை, சமைத்த புலாலின் தோற்றம், புலால் உண்ணும் மக்களின் இயல்பு ஆகியவை பறறிப் பேசுகின்றன. புறநானூறு,

**மைவிடை இரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்**
**காயம் கனிந்த கண்ணகன் கொழுங்குறை**
**நறவுள் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப**
**உண்டுந் தின்றும்.**[18]

என்று புலால் உண்டு மகிழ்ந்த மக்களைப் பாடுகின்றது. புலால் உண்ணும் வழக்கத்தை அவர்கள் தீயது என்று கடிந்து ஒதுக்க வில்லை. திருவள்ளுவர், புலால் உண்ணும் வழக்கத்தைக் கடிந்து

புலால் மறுத்தல் என்று ஓர் அதிகாரம் இயற்றித் தம் கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

**உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்**
**புண்ண துணர்வார்ப பெறின்**[19]

எனப் புலால் உண்ணலை அவா கண்டித்தல் நினைவு கூரத்தக்கது

**கொல்லாமை**

சங்ககால மக்கள் தாம் வழிபடும் தெய்வங்களுக்கு ஆடு முதலிய உயிரினங்களைப் பலியிட்டு வழிபட்டனர். திருமுருகாற்றுப்படையில் முருகனை வழிபடும் போது வெண்பொரிதூவி ஆட்டுக்கிடாவின் இரத்தத்தோடு அரிசி கலந்து இட்டு வழிபாடு செயதனர் என்பதை நக்கீரர் பின்வரும் அடிகளில் விளக்குகின்றார்.

**. .வெண்பொரி சிதறி**
**மதவலி நிலையஇய மாத்தாள் கொழுவிடைக்**
**குருதியோடு விரைஇய தூவெள் அரிசி**
**சில் பலிச் செய்து.**[20]

இததகைய குறிப்புக்கள் சங்க இலக்கியததில் பல இடஙகளில காணப்படுகின்றன.

சங்கப்புலவரில் எவரும் சிற்றுயிாகளின் கொலையைக கடிநது தனிப்பாடலோ நூலோ இயற்றவில்லை. திருவள்ளுவா தம் நூலில் 'கொல்லாமை' என்று ஓர் அதிகாரம வகுத்துக கொண்டு உயிர்க் கொலையைக் கடிந்து கூறியுள்ளாா

**அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்**
**பிறவினை எல்லாம் தரும்.**[21]

என இவ்வாறு வரும் பாடல்கள் வள்ளுவரின் கொல்லாமை அறத்தை வற்புறுத்துகின்றன.

**வரைவின் மகளிர்**

அக்காலத்தில் ஆடவர் பலர் பரத்தையரைக் கூடிவாழும் தீய ஒழுக்கம் மலிந்து இருந்ததை இலக்கியங்களால் உணர

முடிகிறது. 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கொள்கைக்கும் இட மிலலை. ஒருவன பல பெணடிரோடு உறவு கொண்டு மகிழ்ந்து வாழ்நததை மருதத்திணைப பாடல்களால் அறியமுடிகின்றது. 'பரததையிற பிரிவு' அகததுறைப் பாடல்களில் இடம் பெறுகின்றது.

வளளுவர் 'வரைவின் மகளிர்' என்று ஓர் அதிகாரம் அமைததுககொண்டு, பொது மகளிர் தொடர்பு தீயது என்பதை வற்புறுததியுளளார். திருககுறளில் உள்ள காமத்துப்பாலில் பரததையாககு இடமிலலை. தலைவன் பரத்தையரை நாடிச் செல்வதில்லை. தலைவி தலைவன் மீது அளவற்ற அன்பு காரணமாக ஊடல் கொள்கின்றாள். இதைக் கொண்டே வள்ளுவர் மருதத்திணையைப் பாடியுள்ளார்.

**கள்ளுண்ணாமை**

சஙககால மக்களுள் பலர் களளுண்டு களித்து ஆடினர். கள்ளுண்டு களிக்கும் வாழக்கையைச் சங்கப்புலவாகள 'மடடுண் வாழககை' என்று சிறப்பித்துப் பாடுகின்ற னர்.

தேள கடுபபன்ன நாள்படு தேறல[22]

என்று களளின் பெருமையைக கூறுகினறனா. அதியமான இறந்தபோது ஒளவையாா,

**சிறியகட் பெறினே எமககீயும் மன்னே**
**பெரியகட் பெறினே**
**யாமபாடத் தான்மகிழ்ந்து உண்ணு மன்னே[23]**

என்று பாடுகின்றார்.

கள்ளுண்ணும் வழக்கம் தீயது என்று அக்காலச் சமுதா யத்தில் கற்றோரும் மற்றோரும் கருதவில்லை. ஆனால் வள்ளுவர் கள்ளால் விளையும் தீமைகளைத் தெளிவாக உணர்ந்தார். கள்ளைப் புறக்கணித்தார், கள்ளுண்ணாமை என்ற அதிகாரத்தை வகுத்து,

**உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா**
**னெண்ணப் படவேண்டா தார்.[24]**

எனக் கள்ளுண்ணுதலைக் கடிந்துரைக்கின்றார் திருவள்ளுவர்.

**சூது**

சங்ககாலச் சமுதாயத்தில் சூதாடும் வழககம இருந்தது. பொது மன்றங்களில் கூடிச் சூதாடினர். இச்செய்தியை.

> **நரைமூதாளர் நாய இடக் குழிந்த**
> **வல்லின் நல்லகம**[25]

என்று புறநானூறு கூறுகின்றது. சிறுவர்கள வேப்பமரததின் நிழலில் மண்தரையில் கோடுகள் கிழித்து, நெல்லிககாயகளைச சூதுக் காய்களாக வைத்து உருட்டி விளையாடி மகிழ்ந்தனர் என்பதை நற்றிணைப்பாடல் ஒன்று தெளிவாக்குகின்றது.

> **பொரியரை வேம்பின் புள்ளி நீழல்**
> **கட்டளை யன்ன வட்டரங்கு இழைத்துக்**
> **கல்லாச சிறாஅர் நெல்லிவட் டாடும்**
> **வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர்.**[26]

சஙகப் புலவர்களுள் பலரும், சூது தீயது என்று கடிந்துரைக்க விலலை.

ஆனால் திருவள்ளுவர் "வேண்டற்க சூதினை" என்று புரட்சிக்குரல் கொடுத்தார்.

> **வேண்டற்க வெனறிடினுஞ் சூதினை வென்றதூஉந்**
> **தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.**[27]

இவ்வாறு திருவள்ளுவர் சஙககால மககள் வாழவில் ஊறிக்கிடந்த சமூகக் கேடுகள் பலவற்றை அஞ்சாது எதிாத்து அறமுழக்கம் செய்துளளார்.

**அரசியல்**

சங்க இலக்கியங்களில் மன்னன் காணுங்கடவுளாகக் காட்சியளிக்கின்றான். அரசுரிமை பிறப்புரிமையால் வருவது, அவன் ஆளும் நாடு அவனது உடமை, அரசனே நாட்டிற்கு உயிர் என்பதனை.

> **மன்னனுயிர்த்தே மலர்தலை உலகம.**[28]

என்ற புறநானூற்று வரிகளால் நன்கு அறிய முடிகிறது. முதன்மையும் சிறப்பும் அரசற்கே உரியன. அவன் ஆடசியில் குறுக்கிட்

டால் கொலையே தண்டனை. அரசனது நோக்கம் நாட்டை இடத்தால் பெருக்குவது. இகலும், போருமே வெளிநாட்டுக் கொள்கை. பிறர் இடும்திறையே புகழ்ச் செல்வமெனப் பேசப்படுகிறது.

திருக்குறள் இவற்றினின்றும் மாறுபட்டு விளங்குகின்றது. மன்னனை இறைவன என்று கூறவில்லை. செங்கோன்மையின் காரணமாக இறை இடத்தில் வைத்து மக்களால் மன்னன் போற்றப்படுவான் என்கிறார்.

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும்.**[29]

வேந்துரிமை பிறப்புரிமை என்ற கருத்திற்குத் திருக்குறளில் சிறு குறிப்பும் இல்லை. பிறப்பால் அரசனாவதைக் கூறவில்லை. நாட்டுக்கு ஓர் அரசுவேண்டும். அரசன் மரபுவழி பேசாது, இறை மாட்சி அதிகாரத்துள அவனுக்கு அமையவேண்டிய அரசியல் பண்புகளையே பேசுகிறாா.

வள்ளுவர் முடியாட்சி, குடியாட்சி என வேறுபடுத்தி மொழியாது ஆட்சித் தலைவன சிறப்புப பறறியே கூறினார். குடிமக்களுக்கு வளளுவ அரசு மதிப்புக்கொடுப்பது. குடிதழிஇக் கோலோச்சும் மாநில மன்னன்[30] என்பார் அரசினைக் காப்பது குடிகள் கடன குடிமக்களைக் காப்பது அரசின் கடன் என்கிறார் வள்ளுவர்.

சங்ககாலத்தில், மிகுந்த வரிவிதித்தல், வரியை முறையாக வசூலிக்காமை ஆகிய குற்றங்கள் அரசிடம் கண்டபொழுது பிசிராந்தையார் வெகுண்டு பாடுகிறார்.[31]

திருக்குறள் வரியைப் பற்றி நேரடியாக விளக்கிக் கூற வில்லை. மக்கள் அவரவருடைய பொருளியல் தகுதிக்கேற்றவாறு அவர்களே வலிய அரசிற்குப் பொருளை செலுத்த வேண்டும் என்பதே வள்ளுவத்தின் கொள்கை.

## பொருளாதாரம்

சங்கப் பாடல்களில் வறுமையால் வாடியவர்களின் காட்சி

ஒரு புறமும், அவர்களின் வறுமையைத் தீர்க்கவலல செல்வா களின் ஈகைத் திறன் மற்றொரு புறமும் காணமுடிகிறது. இதனை,

> பைதற சுற்றத்துப் பசிப்பகை யாசிக்
> கோழி யோனே கோப்பெருஞ் சோழன்[32]

என்ற பிசிராந்தையார் பாடலால் அறியமுடிகிறது. வறுமை காரணமாகப் புலவர்கள் வள்ளல்களை முகமனாகப் பலவாறு புகழ்ந்து பாடியனவே பல புறநானூற்றுப் பாடல்கள். பரிசில் வழங்காது காலந்தாழ்த்திய மன்னரைப் பற்றியும் பாடப்பட் டுள்ளது. அத்தகைய மன்னன் ஒருவனை ஔவையார் பின்வரு மாறு பாடுகிறார்.

> வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழகக்கைப்
> பரிசிலர்க் கடையா வாயி லோயோ
> கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி
> தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொல்
> அறியும புகழு முடையோர் மாய்ந்தென[33]

திருவள்ளுவர் வறுமையின் கொடுமையைத் தெளிவாக எடுததுக் கூறியும், இரந்து வாழும் பொல்லாத நிலையைக் கடிந்தும் புரட்சி செய்துள்ளார். இவற்றை இரவச்சம், நன்றியில் செல்வம எனற அதிகாரங்களில் இழித்துக் கூறியுள்ளார். வறுமையின் கொடுமையை அவர்.

> இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
> கெடுக வுலகியற்றி யான்.[34]

எனச் சாடுகிறார். பிறருக்கு ஈயாதவரை,

> நசசப் படாதவன் செல்வம் நடுவூருள
> நச்சு மரம்பழுத் தற்று.[35]

என்கிறார்

இங்ஙனம் திருக்குறள் சங்க இலக்கியங்களில் கூறப்படும் சமூக-அரசியல்-பொருளாதாரக் கோட்பாடுகளிலிருந்து மாறு பட்டு விளங்குகிறது.

**கடைச்சங்க நூல்களில் திருக்குறளின் ஆட்சி**

முன்னோர் மொழிபொருளைப் பொன்னே போல் போற்றும் தமிழ்ப் பாவலர்கள் தங்கள் இலக்கியப் படைப்புகளில் இயன்ற இடங்களில் எல்லாம் திருக்குறளின் சொற்களையும், தொடர்களையும், கருத்துக்களையும் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் அமைத்து அழகு செய்துள்ளனர்.

சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டு எட்டுத்தொகையில் திருக்குறள் கருத்துக்கள் பல இடம் பெற்றுள்ளன.

**நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்**
**வானின் றமையா தொழுக்கு**[36]

என்ற குறள்

**நீரின் றமையா உலகம் போலத்**
**தம்மின் றமையா நந்நயத் தருளி**[37]

என நற்றிணைப் பாடல் ஒன்றில் எடுத்தாளப் பெற்றுள்ளது

**பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க**
**நோதக்க நட்டார் செயின்** [38]

என்ற குறள்

**பேதை மையாற் பெருந்தகை கெழுமி**
**நோதக்க செய்தொன் றுடையேன் கொல்லோ.**[39]

எனக் குறுந்தொகைப் பாடல் ஒன்றில் இடம் பெற்றுள்ளது.

**பற்றற்ற கண்ணு பழைமைபா ராட்டுதல்**
**சுற்றத்தார் கண்ணே யுள.**[40]

என்ற குறள் கருத்து.

**தொலையாக் கொள்கைச் சுற்றத்தார்**[41]

எனப் பதிற்றுப்பத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது.

**காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்**
**நாணுத்தாழ் வீழ்த்த கதவு.**[42]

என்ற குறளும்,

**காமக் கணிசசியாற கையறவு வட்டித்துச்**
**சேமத்திரை வீழ்த்துச சென்றமளி சோகுவோர்.[43]**

என்ற பரிபாடல் அடிகளும் ஒத்துள்ளன.

**தெய்வம் தொழஅள் கொழுநன் தொழுதெழுவாள**
**பெய்யெனப் பெய்யும் மழை.[44]**

என வள்ளுவர் பெண்ணின் பெருமையைப் பாடுகின்றார். கலித்தொகையில் இக்குறட்கருத்து.

**அருமழை தரல் வேண்டின தருகிற்கும பெருமையளே[45]**

என எடுத்தாளப்பட்டுள்ளது.

**சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்**
**காக்கம் எவனோ உயிர்க்கு[46]**

என்ற குறள்

**சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்**
**அறதது வழிப்படூஉம் தோற்றும் போல.[47]**

என்ற புறநானூற்றுப் பாடல் ஒன்றில் ஒருவாறு பொதிந்துள்து.

**வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சில் மிசைவான் புலம்.[48]**

எனற குறள

**விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை**
**நின்னோ டுண்டலும் புரைவதென் றாங்க[49]**

என்ற குறிஞ்சிப்பாட்டு வரிகளுக்கு ஏற்றம் தருகிறது.

**வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்**
**ஈண்டு முயலப் படும்.[50]**

என்ற குறள் திருமுருகாற்றுப்படையில்

**வேண்டுநர் வேண்டியாங்கு யெய்தினர்[51]**

என்ற அடியை நினைவூட்டுகிறது.

இத்தகு, ஒப்பாய்வு முயற்சியால் சங்ககாலப் புலவர்கள் பலர் தம்பாடல்களில் திருக்குறளைப் பொதித்து வைத்து அழகு செய்துள்ளனர் என்பது நன்கு புலனாகிறது.

### பிற்கால நூல்களில் திருக்குறளின் ஆட்சி

கடைச்சங்க காலத்திற்குப் பிற்பட்ட காப்பியங்கள், சமயநூல்கள், அறநூல்கள் ஆகியவற்றிலெல்லாம், புலவர்கள் பலர் திருக்குறளை வைத்திழைத்துத் தம் நூலுக்குத் தனிப் பெருமையைத் தேடிக் கொண்டுள்ளனர். திருக்குறளின் அடிச் சுவடுகள் சங்க காலத்திற்குப் பின் தோன்றிய இலக்கியங்களில் மிகவும் தெளிவாகவே இனங்காணுமாறு புலப்பட்டுத் தோன்றுகின்றன.

### காப்பியங்கள்

திருக்குறள், இளங்கோவடிகளின் எண்ணத்திலே இழை யோடிச் சிலம்பிலே ஒலித்துள்ளது. கோவலன் கண்ணகியின் நலங்களைப் பலபடப் பாராட்டுகின்றான்.

**அளிய வாமே சிறுபசுங் கிளியே**
**குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தநின்**
**மழலைக் கிளவிக்கு வருந்தின்**[52]

என்கிறான். மக்கட்பேறு வாய்க்கப் பெறாத நிலையில் காதலியின் மழலை மொழியிலே யாழ் ஓசை குழலோசைகளின் இனிமையும், ஒத்த அளவில் சுட்டிக் குழைக்கப்பட்டன என்கிறான். இவர்கட்கு மக்கட்பேறு இருந்தால் இவற்றின் இனிமை ஒரு பொருட்டாகத் தோன்றியிராது என்ற நயத்தை இளங்கோவின் உள்ளத்தே ஊறச்செய்து இங்ஙனம் கவிதை புனையச் செய்தது,

**குழலினிது யாழினிது என்பதம் மக்கள்**
**மழலைச்சொல் கேளா தவர்**[53]

என்ற குறளே என அறிய முடிகிறது.

கோவேந்தன் தேவியே யான் ஒன்றுந் தெரியாதவளாக இருப்பினும் ஆதிமந்தி முதலான கற்புடையமங்கையர் எழுவர் பிறந்த நாட்டில் பிறந்தவள். ஆதலால் கூறுகிறேன்.

**முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு**
**பிற்பகல் காண்குறூஉம் பெற்றிய**[54]

அதனை நீகாண் என்கிறாள் கண்ணகி. இப்பகுதி

**பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்**[56]

என்ற குறளையே உயிராகக் கொண்டெழுந்தமையைச் சுட்டி நிற்கின்றது.

இளங்கோவடிகளைப் போலவே சீத்தலைச் சாத்தனாரும் திருக்குறளில் ஈடுபாடுமிக்கவர். வள்ளுவரைப் பொய்யில் புலவன் என்றும் அவர் வாய்மொழியைப் பொருளுரை என்றும் போற்றியுள்ளார்.

**தெய்வம் தொழஅள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை**[56]

கணவனே தெய்வம் எனக்கொண்டக் கற்புடைய மாதர் பெய் என்றால் மழை பெய்யும் என்று திட்பமாகக் கூறினார் திருவள்ளுவர், இதனையே மணிமேகலை,

**தெய்வம் தொழஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றஅப்**
**பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்**[57]

என்று அறிவுறுத்துகின்றது.

ஆபுத்திரன் மதுரையை அடைந்து, அம்பலத்தை இருப்பிட மாகக் கொண்டு பிச்சையேற்றுக் குருடர் செவிடர் முதலியோர்க் குக் கொடுத்து, மீதத்தைத் தானுண்டான் என்பதை உணர்த்தும் பகுதியாக,

**காணார், கேளார், கால்முடப் பட்டோர்,**
**பேணுநர் இல்லோர், பிணிநடுக் குற்றோர்**
**யாவரும் வருக என்று இசைத்துடன் ஊட்டி**[58]

எனக் கூறுகிறது. இப்பகுதி

**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.**[59]

என்ற திருவள்ளுவர் வாக்கினை நினைவூட்டுகிறது.

திருக்குறளாகிய வாழ்க்கைநூல், சீவகசிந்தாமணியாகிய காப்பிபயத்தில் ஆங்காங்கு அமைந்து தானும் விளங்கி, காப்பியத் தையும் விளங்கச் செய்கிறது.

ஒருமுறை, கடலில் கலம் ஒன்று புயலில் சிக்குற்றது. கலத்திலிருந்த அனைவரும் நடுங்கினர். சீதத்தன் அவர்களை நோக்கிக் கூறுகின்றான்.

**இடுககண்வந் துற்றகாலை யெரிகின்ற விளக்குப் போல**
**நடுக்கமொன் றானும இன்றி நகுக.[60]**

என்ற அப்பாடல்பகுதி

**இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்தூர்வது அஃதொப்பது இல் [61]**

என்ற திருக்குறளால் உருவாக்கம் பெற்றமை புலனாகின்றது.

கற்புடைய மகளிர் காதல் வெள்ளம் கரை கடந்து வழிவதாயினும் தாங்கள் கணவனைத் தேடிச் செல்லுதலையோ, மடல் ஏறுதலையோ விரும்ப மாட்டார்கள் என்ற இயல்பை வள்ளுவர்,

**கடலனன காமம் உழந்தும் மடலேறாப்**
**பெணணின் பெருந்தகக தில்[62]**

என்றார இதனையே திருத்தக்கதேவர், குணமாலை, சீவகன் மீது காதல் கொண்டு கன்னிமாடததில் நநது புலம்புகின்றாள. அவள் தன்னாறறாமையைக் கூறுவதாக,

**எண்ணில் காமம எரிப்பினும் மேற்செலாப்**
**பெண்ணின் மிக்கது பெண்ணலது இல்லையே.[63]**

என்கிறார். மேற்கூறியவற்றால் காப்பிய ஆசிரியர்கள் திருக்குறளைப் போற்றிப் பொதித்துள்ளமை நன்கு புலனாகிறது.

**சமய நூல்கள்**

கி.பி. ஏழாம் நூற்றாண்டு தொடங்கிச் சைவ அருளாளர்களும், வைணவச் சான்றோர்களும் குறளைத் தம் நூல்களில் பலவிடத்தும் எடுத்தாண்டுள்ளனர்.

**தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்[64]**

என்னும் திருக்குறளைச் சைவ சமய சந்தான குரவருள் ஒருவரான உமாபதி சிவம், தமது நெஞ்சுவிடு தூதில்,

**தேருங்கால்**

**உன்னை யொழிய உறவில்லை யென்னுமது**

**தன்னை யறிலைத் தனியறிவைத் - முன்னம்**

**தலைப்பட்டாா தீரத் துறந்தார் மயங்கி**

**வலைப்பட்டார் மற்றையவ ரென்று - நிலைத்தமிழின்**

**தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த**

**மெய்வைத்த சொல்லை விரும்பாமல்**[65]

என்று அருளிச் செய்திருக்கின்றார்.

**காலை யரும்பிப பகலெல்லாம் போதாகி**

**மாலை மலருமிந் நோய்**[66]

என்ற குறடபாவை

**காலை யரும்பிப் பகலெல்லாம்**

**போதா யிருந்த காமமலர்**

**மாலை மலர்ந்து பொறாமலொரு**

**மாயை நாம மணிவல்லி**[67]

எனத தாம் பாடிய பிரபுலிங்கலீலை பாடல் ஒன்றில் சிவபபிரகாசர் அமைத்துள்ளார்.

**பற்றுக பறறறறான் பறறினை யப்பற்றைப்**

**பற்றுக பறறு விடறகு**[68]

என்னும் குறளைத திருவாய்மொழி பாடிய வைணவப பெரியார்,

**அற்றது பற்றுஎனில், உற்றது வீடுஉயிர்**

**செற்றது மன்னுறில், அற்றுஇறை பற்றே**[69]

என்று அமைத்துளளார்

இவற்றால் எல்லாம் சைவ வைணவ நூல்களில் திருக்குறள விளைத்த தாக்கங்களை ஒருவாறு அறிய முடிகிறது.

### திருக்குறளின் தாக்கத்தால் உருவான அறநூல்கள்

திருக்குறள் அமைத்து வழங்கியதடத்தில் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களாகவுள்ள ஏனைய அறநூல்கள் பலவும் எழுந்தன. திருக்குறள் காட்டிய அறங்கள் பலவற்றை உயிர் நிலையாகக கொண்டு, பிற அறச் செயல்களினையும் கோவைப்படுத்திக்

கூட்டியும் குறைத்தும் கூறுவனவே பிற அறநூல்கள். இவ்வகையில் அமைந்த நூல்களுள் திருக்குறளோடு ஒப்புநோக்கத் தக்கன நாலடியார், பழமொழிநானூறு, திரிகடுகம், சிறு பஞ்சமூலம், ஏலாதி, நான்மணிக்கடிகை, முதுமொழிக்காஞ்சி, இன்னா நாற்பது, ஆசாரக்கோவை முதலான நூல்களாகும்.

**திருக்குறள் தாக்கத்தால் உருவான பிறவகை நூல்கள்**

திருக்குறளை ஒரு பாடலின் பிற்பகுதியில் வைத்து, முற் பகுதியில் அதற்கு விளக்கமாக வரலாறுகளைக் கூறும் நூல்கள் பல உள்ளன. இதுவன்றித் திருக்குறளின் தனிச்சிறப்பை வெளிப் படுத்தும் நோக்கில் அமைந்த வேறு பலவகையான நூல்களும் தமிழில் உள்ளன. சினேந்திர வெண்பா, தினகரவெண்பா, திருப்புல்லாணிமாலை, இரங்கேசவெண்பா, வடமாலை வெண்பா, பழைய விருத்த நூல், திருமலை வெண்பா, முதுமொழி வெண்பா, சோமேசர் முதுநெறி வெண்பா, திருக்குறட் குமரேச வெண்பா, காந்தி முதுநெறி வெண்பா, பெரியபுராணச் சரித்திர வெண்பா மாலை, முதுமொழி மேல்வைப்பு, நீதிநெறி விளக்கம் என்பனவாகும்.

**திருக்குறள் உரைகள்**

திருக்குறளின் நுண்கூறுகளைப் பலகோணத்தில் காணவும் போற்றவும் தலைப்பட்டவர்கள் உரையாசிரியர்கள். நவில் தொறும் நூல்நயம் கண்டு, பலருக்கும் பயன் படவேண்டும் என்ற நோக்கில் சான்றோர் பலர் அரிய உரைகளை வகுத்து வழங்கினர். திருக்குறளுக்கு உரை வகுத்தவர்கள்பதின்மரென்று தனிப்பாட லொன்று கூறுகின்றது.

> **தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்**
> **பரிதி பரிமே லழகர் திருமலையர்**
> **மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர் நூற்**
> **கெல்லை உரைசெய்தார் இவர்.**

இப்பதின்மர் உரைகளுள் மணக்குடவர், பருதியார், பரிப் பெருமாள், காலிங்கர், பரிமேலழகர் ஆகிய ஐவர் உரைகளுமே முழுமையாகக் கிடைத்துள்ளன, இவற்றுள் பரிமேலழகர்

உரையே சிறந்ததெனப் பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது, பெரிதும் வழங்கி வருவதும் இதுவே.

இலக்கண-இலக்கிய உரையாசிரியர்களும் தாங்கள் எழுதிய பிற நூலுரைகளில் வாய்ப்பு நேர்ந்த இடங்களில் சில குறட்பாக்களுக்கு அரிய உரை எழுதிச் செல்கின்றனர். பேராசிரியர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் முதலியோர் குறிக்கத்தக்கவர்கள்.

பிற்காலத்தில் பல அறிஞர்கள் திருக்குறளுக்குப் புதிய உரைகள் கண்டுள்ளனர். அவற்றுள் மு.வரதராசனார் உரை, நாமக்கல் இராமலிங்கர் உரை, புலவர் குழந்தை உரை, திரு.வி.கலியாணசுந்தரனார் உரை, முதலியன குறிப்பிடத்தக்கன. இத்தகைய உரைகள் திருக்குறளுக்கு அணிசெய்வனவாக உள்ளன.

### மொழி பெயர்ப்புகள்

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ்நாடு எனப் பாரதியார் பாராட்டியதற்கேற்பத் திருக்குறள் இன்று உலகம் முழுதும் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதற்கு வித்திட்டவர் ஜி.யு.போப் ஆவார். இவர் ஆங்கிலத்தில் 1886 இல் திருக்குறளை மொழி பெயர்த்தார்.

இதன்பின் ஜெர்மன் மொழியில் கிரால் என்பவர் 1854 இலிலும், தெலுங்கு மொழியில் ஸ்ரீராமுலுரெட்டி என்பவர் 1948-இலும், பிரெஞ்சு மொழியில் ஏரியல் என்பவர் 1849-இலும், மலையாள மொழியில் கோவிந்த பிள்ளை என்பவர் 1915-இலும், குஜராத்தி மொழியில் நஞ்சுலால் சோக்சி என்பவர் 1931-இலும், இந்தி மொழியில் சங்கர் ராசு நாயுடு என்பவர் 1958-இலும், ரஷ்யன் மொழியில் இலசோவ் என்பவர் 1963-இலும், மராட்டி மொழியில் சேன் என்பவர் 1948-இலும் திருக்குறளை மொழி பெயர்த்துள்ளனர். மேலும் முப்பதிற்கும் மேற்பட்ட மொழிகளில் அறிஞர்கள் பலர் மொழி பெயர்த்துள்ளனர். இவற்றுள் பலமொழிகளில் ஒவ்வொன்றும் இரண்டு முதல், முப்பத்துமூன்றுவரை மொழி பெயர்ப்புகள் வெளிவந்துள்ளன.

### அரிய பதிப்பு முயற்சிகள்

இலக்கியங்கள் பரவும் வழி முறைகளில் பதிப்புக்களும் ஒன்று. நம் நாட்டில் அதிகப் பதிப்புக்கள் கொண்ட நூல் திருக்குறளே. நூற்றுக்குமேல் பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் குறிப்பிடத் தக்கவை ஐம்பது பதிப்புக்கள். இப்பதிப்புக்கள் பல திறத்தன. மூலப்பதிப்பு, பரிமேலழகர் உரைப்பதிப்பு, உரை விளக்கப்பதிப்பு, உரைவளப்பதிப்பு, உரைவேறு பாட்டுப்பதிப்பு, உரைக்கொத்துப் பதிப்பு, ஆராய்ச்சிப் பதிப்பு, பிறர் உரைப் பதிப்பு, தெளிவுரைப் பதிப்பு, மலிவுப் பதிப்பு, கையடக்கப் பதிப்பு, உரையோடு கூடிய கையடக்கப் பதிப்பு, பரிசுப்பதிப்பு எனப் பதிப்புக்கள் பல. அவற்றுள் அரிய பதிப்புக்கள் சில.

### திருக்குறள் மூலப்பதிப்புக்கள்

அம்பலவாணக் கவிராயர் பதிப்பு 1811, சென்னை புட்பரதச் செட்டியார் பதிப்பு 1859, கிருட்டிணசாமி பிள்ளை பதிப்பு 1875, வீராசாமி நாயுடு வித்யா விநோதினி அச்சகப் பதிப்பு 1878, பரசுராம முதலியார் பரப்பிரம அச்சு இயந்திர சாலைப்பதிப்பு 1880, ஜீவரட்சாமிர்த அச்சுக்கூடப் பதிப்பு 1888, ஆறுமுக நாவலர் பதிப்பு 1898, சுவாமிநாதப் பண்டிதர் பதிப்பு-1908, திருநெல்வேலி சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பு-1924, கணேச அச்சுக்கூடப் பதிப்பு-1928, திருநெல்வேலி சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மறுபதிப்புக்கள்-1935, கழகக் கையடக்கப் பதிப்பு-1942, மணி.திருநாவுக்கரசு முதலியார் பதிப்பு-1950, கடலூர் நாராயணசாமி பொதிகைப் பதிப்பகப் பதிப்பு-1950, லிப்கோ பதிப்பு-1961.

### பரிமேலழகர் உரைப்பதிப்பு

இராமானுஜக் கவிராயர் இருபத்து நான்கு அதிகாரங்கள் மட்டும் வி.துருஐயர் செய்த ஆங்கில மொழி பெயர்ப்புடன் கூடிய பதிப்பு-1840, ஆறுமுக நாவலர் பதிப்பு-1861, புட்பரதச் செட்டியார் கலாரத்னாகரம் அச்சகப் பதிப்பு-1885, முருகேச முதலியார் லாசரசு மொழிபெயர்ப்புப் பதிப்பு-1838, கோ.வடிவேல் செட்டியார் பதிப்பு-1904, மு.இராகவையங்கார் பதிப்பு-1910, கோ.வடிவேல் செட்டியார் ஆங்கில மொழி

பெயர்ப்புடன் கூடிய பதிப்பு-1919, செ.மு.வேலு முதலியார் கையடக்கப் பதிப்பு-1920, குப்புசாமி முதலியார் பதிப்பு-1924, 1926, மணி. திருநாவுக்கரசு முதலியார் பதிப்பு-1928, கு.சடகோப இராமானுசர் பதிப்பு-1937, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்புக்கள் பத்து-1947, 1975 புலவர் குழந்தை பதிப்பு-1952, வை.கோவிந்தன் சக்தி காரியாலயம் பதிப்பு-1957.

**மணக்குடவர் உரை**

வ.உ.சிதம்பரனார் உரைப்பதிப்பு-1917, பொன்னுசாமி நாட்டார் உரைப்பதிப்பு-1925, மலர் நிலையம் உரைப் பதிப்பு-1958.

**பரிப்பெருமாள், காலிங்கர் உரை**

தெ.பொ.பழனியப்ப பிள்ளை உரைப்பதிப்பு (காமத்துப் பால்) 1945, (அறத்துப்பால், பொருட்பால்) - 1948

**பிற உரைப்பதிப்புகள்**

சரவணப் பெருமாள் ஐயர் உரைப்பதிப்பு-1838, வேதகிரி முதலியார் உரைப்பதிப்பு-1949, மு.ரா.அருணாச்சலக் கவிராயர் உரைப்பதிப்பு-1913, கா.சுப்பிரமணிய பிள்ளை கையடக்கப் பதிப்பு-1929, நாகை தண்டபாணி பிள்ளை உரைப்பதிப்பு-1933, வ.உ.சிரம்பரனார் உரைப்பதிப்பு (அறத்துப்பால் விருத்திவுரை)-1935, திரு.வி.கலியாண சுந்தரனார் இல்லறவியல் உரைப்பதிப்பு-1936, மு.வரதராசனார் தெளிவுரை இருபத்தைந்து பதிப்புகள்-1949, 1975.

**உரைவளம்**

ச. தண்டபாணி தேசிகர் அறத்துப்பால்-1950, பொருட் பால்-1951, காமத்துப்பால்-1952.

**உரைக்கொத்து**

பட்டுசாமி ஓதுவார் அறத்துப்பால்-1957, பொருட்பால், காமத்துப்பால்-1960, இ.வ.ஜகந்நாதன் ஆராய்ச்சிப் பதிப்பு-1983, கு.சுந்தரமூர்த்தி உரைத்திறன்-1981.

*தொகுப்புரை*

*இவண் மேற்கொள்ளப்பெற்ற ஆய்வின் பயனாகக் கீழ்காணும் முடிவுகள் காணப்பெற்றன.*

1. *திருவள்ளுவர் தம் நூலுக்கு வைத்த பெயர் முப்பால் என்பதே. திருக்குறள் என்ற வழக்குப் பிற்காலத்தில்தான் வழங்கப்பட்டு வந்துள்ளது.*
2. *திருவள்ளுவரைப் பற்றி வழங்கிவரும் வரலாறுகள் ஒன்றுக் கொன்று வேறுபட்டு இருப்பதால் இவை உண்மை வரலாறுகள் அல்ல.*
3. *திருவள்ளுவர் என்பது சாதி பற்றிய இயற்பெயர்.*
4. *திருவள்ளுவர் காலம் கி.மு.முதல் நூற்றாண்டிற்கும் இரண் டாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டது.*
5. *சமூக இலக்கியங்களாகிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டி லிருந்து திருக்குறள் பாவகையாலும், நூல் அமைத்திருக்கும் முறையாலும் பிறவகையாலும் வேறுபட்டு விளங்குகிறது.*
6. *கள்ளுண்ணுதல், புலாலுண்ணுதல், சூதாடுதல் முதலான தீய பழக்கங்களை வாழ்க்கையின் பெருந்துன்பங்களாகக் கொண்டு வாழ்ந்த மக்களிடையே கள்ளுண்ணாமை, புலா லுண்ணாமை, சூதாடாமை முதலானவைகளை அஞ்சாது எடுத்தியம்பிய திருக்குறள் ஒரு எதிர்நீச்சல் இலக்கியமாக விளங்குகிறது.*
7. *கடைச் சங்ககாலச் சமூக, அரசியல், பொருளாதாரக் கோட் பாடுகளோடு திருக்குறள் பலவகையிலும் மாறுபடுகிறது.*
8. *கடைச்சங்க இலக்கியமாக பத்துப்பாட்டு, எட்டுத் தொகையில் சான்றோர் திருக்குறளைப் பலவிடங்களில் பொதித்து அழகு செய்துள்ளனர்.*
9. *கடைச் சங்க காலத்திற்குப் பிற்பட்ட காப்பியங்கள், சமய நூல்கள், அற நூல்கள் முதலிய எல்லாவகை இலக்கிய வடிவங்களிலும் திருக்குறளின் அடிச்சுவடுகள் ஆழமாகப் பதிந்துள்ளன.*

10. திருக்குறள் தாக்கத்தால் உருவான நூல்கள் பல.
11. திருக்குறளுக்கு அமைந்துள்ள பல்வேறு உரைகள், தமிழ்ச் சான்றோர்களை இந்நூல் எந்த அளவுக்கு ஈர்த்துள்ளது என்பதற்குச் சான்று கூறுவனவாக அமைந்துள்ளன.
12. உலக மொழிகள் பலவற்றினாலும் திருக்குறள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளதன் மூலம் உலகச் சான்றோர் உள்ளங் களை ஈர்த்த திருக்குறள்திறம் உணர்த்தப்பட்டது.
13. திருக்குறள் நாடெங்கும் பரவுவதற்கு மேற்கொள்ளப்பெற்ற அரிய பதிப்பு முயற்சிகள் சிலவும் எடுத்துக் காட்டப்பெற்றன.

இவ்வாறு, திருக்குறள் தான் தோன்றிய காலத்திற்குப் பின்தோன்றிய, எல்லாவகையான நூல்களிலும், ஆழமாகத் தன் அடிச்சுவடுகளைப் பதிப்பித்து, மேலாதிக்கம் செலுத்தியுள்ளது. ஒரு அறநூல்-காதல்-சமூகம்-காப்பியம்-சமயம்-இலக்கணம் என வேறுபட்ட பலதுறை நூல்களிலும் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளமை வியப்பைத் தருகிறது. சமய வேறுபாடுகளையும், கால வேறுபாடு களையும், கடந்து அனைவரையும் ஈர்க்கும் திறங்கொண்ட குறள் பெரிய புராண ஆசிரியர் சேக்கிழாரையும் ஈர்த்ததில் வியப்பேதும் இல்லை. பெரிய புராணத்தில் திருக்குறள் ஏற்படுத்திய தாக்கங் களைப் பகுத்து ஆராய்வதற்குத் திருக்குறள் பற்றிய இவ்விரிவான ஆய்வு பெரிதும் துணையாக அமைகிறது.

## குறிப்பு விளக்கம்

1. ச.தண்டபாணி தேசிகர், திருக்குறள் அழகும் அமைப்பும், ப.15
2. மு.சண்முகம் பிள்ளை, திருக்குறள் அமைப்பும் முறையும், ப.3
3. ச.தண்டபாணி தேசிகர், மு.நூ., ப.16
4. நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி - மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டோதி என்பவே
கைந்நிலைய வாம்கீழ்க்கணக்கு

5. குறள்வெண்பாவில் சிறுந்திடு முப்பால் (39), முப்பால் (44, 49), முப்பால் மொழிந்த முதற்பாவலர் (19), வண்டமிழின் முப்பால் (33), வள்ளுவர் முப்பால் (10, 11, 31), வள்ளுவர் முப்பால் நூல் (46), வள்ளுவர் தாய் செய்பவரும் முப்பால் (30), வள்ளுவனார் முப்பால் (12, 15, 17), வள்ளுவனார் முப்பால் மொழிந்த மொழி (9), எனப் பதினைந்து பாடல்களில் முப்பால் என்னும் பெயர் நூலைக் குறிப்பதாகத் திருவள்ளுவ மாலையில் வழங்கப் பெற்றிருக்கிறது.
6. பெருந்தொகை, பா.1998
7. . . . . . . . . . . வள்ளுவனார்

   பொய்பற்ற முப்பால் பொருளுரைத்தான் தென்செழுனைத்

   தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து
8. மு.சண்முகம் பிள்ளை, மு.நூ., ப.4
9. மாமூவனார், திருவள்ளுவமாலை, பா.9
10. மா.இராசமாணிக்கனார், திருவள்ளுவர் காலம் யாது, ப.36
11. மேற்படி நூல், ப.57
12. மேற்படி நூல், ப.69
13. மேற்படி நூல், ப.36
14. மறைமலையடிகள், முற்காலப் பிற்காலத் தமிழ் புலவோர், ப.102
15. ச. தண்டபாணி தேசிகர், மு.நூ., பக்.124-125
16. புறநானூறு, பா.34, வரி.5-7
17. தி.வை.சதாசிவப் பண்டாரத்தார், தமிழ்இலக்கிய வரலாறு ப.12
18. புறநானூறு, பா.364, வரி.4-7
19. திருக்குறள், 257
20. திருமுருகாற்றுப்படை, பா.வ.231-234
21. திருக்குறள், 321
22. புறநானூறு, பா.392, வரி.2-16

23. மேற்படி நூல், பா.235, வரி.1-3
24. திருக்குறள், 922
25. புறநானூறு, பா.52, வரி.14-15
26. நற்றிணை, பா.3, வரி.2-5
27. திருக்குறள், 931
28. புறநானூறு, பா.186, வரி.2
29. திருக்குறள், 388
30. மேற்படி நூல், 544
31. புறநானூறு, பா.184
32. மேற்படி நூல், பா.212, வரி.7-8
33. மேற்படி நூல், பா.206, வரி.4-8
34. திருக்குறள், 1062
35. மேற்படி நூல், 1008
36. மேற்படி நுல், 20
37. நற்றிணை, பா.1, வரி.6-7
38. திருக்குறள், 855
39. குறுந்தொகை, பா.230, வரி.3-4
40. திருக்குறள், 521
41. பதிற்றுப்பத்து, ஏழாம்பத்து, பா.10, வரி.17
42. திருக்குறள், 1251
43. பரிபாடல், பா.10, வரி.34-35
44. திருக்குறள், 55
45. கலித்தொகை, பா.39, வரி.6
46. திருக்குறள், 31
47. புறநானூறு, பா.31, வரி.1-2
48. திருக்குறள், 85
49. குறிஞ்சிப்பாட்டு, பா.வரி.206-207
50. திருக்குறள், 265
51. திருமுருகாற்றுப்படை, பா.வரி.248

52. சிலப்பதிகாரம், கா.1, வரி.57-59
53. திருக்குறள், 66
54. சிலப்பதிகாரம், கா.21, வரி.3-4
55. திருக்குறள், 319
56. மேற்படி நூல்.55
57. மணிமேகலை, கா.22, வரி.59-61
58. மேற்படி நூல், கா.13, வரி.111-113
59. திருக்குறள், 322
60. சீவகசிந்தாமணி, இலம்.3, பா.509, வரி.1-2
61. திருக்குறள், 621
62. மேற்படி நூல். 1137
63. சீவகசிந்தாமணி, இலம்.4, பா.998, வரி.3-4
64. திருக்குறள், 348
65. உமாபதி சிவம், நெஞ்சுவிடு தூது, பா.வரி.23-26
66. திருக்குறள், 1227
67. சிவப்பிரகாசர், பிரபுலிங்கலீலை, பா.56, வரி.1-2
68. திருக்குறள், 350
69. திருவாய்மொழி, நம்மாழ்வார், பாசு.எ.2097



# 3

# பெரியபுராணத்தில் திருக்குறள் அறத்துப்பாலின் தாக்கம்

'பெரியபுராணத்தில் திருக்குறள் அறத்துப்பாலின் தாக்கம், என்னும் இப்பகுதியில், பெரிய புராணத்தில் திருக்குறள் தாக்கத்தால் ஏற்பட்ட ஒரு சில முழு வரலாறுகள், வரலாற்றுப் பகுதிகள், முழுப் பாடல்கள், பாடல் வரிகள், ஒரு குறள் நெறிவழி வாழ்ந்த நாயன்மார்கள் பற்றிய செய்திகள் முதற்கண் ஆராயப் பெற்றுள்ளன. தொடர்ந்து திருவள்ளுவரின் கடவுட் கோட்பாடு, நீத்தார் பெருமை கூறும் அடியார் இலக்கணம் - பெரியபுராண அடியவர் இலக்கணங்களோடு பொருந்தி வருதல், அறன் வலியுறுத்தல் கூறுகள் முதலிய பாயிரக்கூறுகள் ஆய்வுக்குட்படுத்தப் பெற்றுள்ளன. அடுத்து, இல்லறக் கூறுகளான, இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு முதலிய திருக்குறள் அதிகாரங்கள் காட்டும் இல்லற நெறியில் வாழ்ந்த பெரிய புராணப் பாத்திரங்கள் பற்றிய குறிப்புக்கள் நிரல்பட நிறுவபபெற்றுள்ளன. தொடர்ந்து ஏனைய இல்லற - துறவற அதிகாரக் கருத்துக்களால் பெரியபுராணத்தில் விளைந்த தாக்கங்களும், ஊழ்பற்றிய வள்ளுவர் கருத்துக்கள் பெரியபுராணத்தில் ஊடுருவி நிற்கும் திறங்களும் ஆராய்ந்து நிறுவப் பெற்றுள்ளன.

### குறள் தாக்கத்தால் ஏற்பட்ட வரலாறுகள்

அறநூல்கள் விரித்துரைக்கும் வாழ்வறங்களுக்குக் காப்பியங்கள் கதை வடிவிலான விளக்கங்களைத் தரும். சில பெரிய புராணத் தனி அடியார் வரலாறுகளை ஆழ்ந்து நோக்கினால் அவை, சில குறட்பாக்களுக்கு முற்றும் பொருத்தமான சித்திரங்களாகத் திகழ்கின்றன. அறக்கோட்பாடுகளும், சமயக் கோட்பாடுகளும் நெருக்கமான தொடர்புடையவை. இவ்வகையில் சில குறட்பாக்களின் முழுத் தாக்கத்தால், அவற்றின் சமயம் சார்ந்த வாழ்வில் சித்திரமாக அமைந்த நாயன்மார் வரலாறுகள் பெரிய புராணத்தில் இடம் பெற்றுள்ளன.

**இளையான்குடி மாறநாயனார்**

இளையான்குடி மாறநாயனார் சிவபெருமானிடத்தும், சிவனடியார்களிடத்தும் பேரன்புடன் விளங்கினார். தம் விருந் தோம்பலின் சிறப்பினால் அடியார்களுக்கு விருந்தூட்டி வந்தார்.

**இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தல் பொருட்டு**[1]

என்ற குறளுக்கேற்ப வாழ்ந்தார். இதனால் வறுமையுற்றார். வறுமையுற்ற போதும் குறிக்கோளில் வழுவாத நாயனார் தமது பொருள்கள் எல்லாவற்றையும் விற்று அடியவர்களை உபசரித்து வந்தார்.

**ஒப்புரவி னால்வரும் கேடெனின், அஃதொருவன்**
**விற்றுக்கொள் தக்க துடைத்து**[2]

என்ற குறளுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தார். மழைக் காலத்தில் ஒருநாள் இரவு வீட்டில் பொருள் ஒன்றுமில்லாமையால் நாய னாரும் அவரது மனைவியாரும் பசியைப் பொறுத்துக் கொண்டு இருந்தனர். நள்ளிரவில் எங்கும் பெருமழை. மழையில் நனைந்த சிவனடியார் ஒருவர் நாயனார் இல்லம் வந்து சேர்ந்தார். உடனே அவருக்கு உடையளித்து ஒய்வு கொள்ளுமாறு செய்து, நாயனார் தம் மனைவியிடம் நமக்கு உணவில்லை ஆயினும் பசியுடன் வந்துள்ள சிவனடியார்க்கு உணவூட்டல் வேண்டும் என்றார். இது,

**ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின்**[3]

என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. நாயனார் கூறியதைக் கேட்ட அவர் மனைவி, நள்ளிரவு பெருமழை, எவரும் நமக்கு ஏதும்தாரார். வயலில் விதைத்த நெல்லைக் கொண்டு வந்தால் உணவு செய்யலாம் என்றார்.

நாயனார் நடுஇரவில், கொட்டும் மழையில், கூடையைத் தலையிற் கவிழ்த்துக் கொண்டு காலினால் தடவிச் சென்று வயலில் மிதந்து ஒதுங்கியிருந்த நெல்லை வாரிக் கொணர்ந்தார். மனைவியார் நெல்லைச் சேறுபோகக் கழுவி, விறகு இல்லையே என்றார். நாயனார் இல்லத்தின் கூரையிலுள்ள வரிச்சல்களை

வெட்டி விறகாக்கித் தந்தார். நெல்லின் ஈரம்போக வறுத்துக் குற்றி அரிசியாக்கிச் சோறாக்கினார். நாயனார் கொல்லையிலுள்ள கிரைகளைப் பறித்துக் கொடுக்க மனைவியார் கிரைக்கறி செய்தார்.

இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை[4]

என்ற குறளுக்கேற்ப விளங்கினார் இளையான்குடி மாறநாயனார் மனைவி. இருவரும் உணவுண்ண எழுந்தருளி வருக என்று, சிவனடி யாரை வேண்ட அவர் மாபெரும் ஒளி வடிவாய்த் தோன்றி அவர்கட்குச் சிவனுலகப் பேற்றை அருளினார்.

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு[5]

என்ற குறளின்படி விருந்தோம்பல் பண்பினால் இருவரும் தேவர் களுக்கு நல்விருந்தினர் ஆயினர்.

**மானக்கஞ்சாற நாயனார்**

மானக்கஞ்சாற நாயனார் சிவபெருமானிடத்தும் அவனடி யாரிடத்தும் அளவிலா அன்பு பூண்டவர். சிவனடியார்கள் குறிப் பறிந்து, அவர்கள் கேளாமலே வேண்டும் பொருளை மனமுவந்து ஈவார். பெற்ற செல்வத்தின் பயனிதுவே என்று மகிழ்வார். இதனை,

இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள[6]

என்ற குறளுடன் ஒப்ப நோக்கலாம். சிவபெருமானை மகப்பேறு கருதி வேண்டினார்.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற[7]

என்ற குறளின்படி அழகின் மிக்க பெண்மகளைப் பெற்றார். பெரு கிழ்வுடன் வளர்த்தார். அவருக்குத் திருமணப் பருவம் வந்துற்றது. திருமண நாளன்று, முனிவர் ஒருவர் நாயனார் மாளிகைக்கு வந்தார். மணமகள் தம்மை வணங்கிய போது அவர், அவருடைய ஒப்பனை செய்யப் பெற்ற நீண்ட கூந்தலைக் கண்டார்.

நாயனாரிடம், இக்கூந்தலால் செய்யப்படும் பஞ்சவடி அணிந்து கொள்ளுதற்குரியது என்றார். அவ்வளவில், குறிப்பறிந்த நாயனார் தம் மகளின் கூந்தலை அடியுடன் வாளால் அரிந்து அவரிடம் நீட்ட இறைவன் அருள்புரிந்தான். மானக்கஞ்சாற நாயனாரின் இச் செயலானது,

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு**[8]

என்ற குறளின் கருத்தாக அமைந்துள்ளது.

**காரைக்கால் அம்மையார்**

காரைக்காலம்மையார் சிவபக்தியில் மிகுந்தவர். பெரும் வணிகரான பரமதத்தனின் மனைவி. சிவனடியார்பால் பேரன் புடையவராய் அவர்களுக்கு உணவளிக்கும், பெருங்கொடை புரிந்தும் இல்லறத்தை நடத்தி வந்தார்.

**இருந்தோம்பி இல்வாழ்வு தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தல் பொருட்டு**[9]

என்ற குறளின்படி வாழ்ந்தார். ஒருநாள், தம் கணவனார் கையுறை யாகப் பெற்றுத்தந்த இரண்டு மாங்கனிகளில் ஒன்றைச் சிவனடியார் ஒருவர்க்கு,

**விருந்து புறந்ததாத் தானுண்டல் சாவா**
**மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று**[10]

என்ற குறளுக்கேற்ப உணவுடன் படைத்தார். இதனையறியாத கணவன், உணவுண்ணும்போது மற்ற மாங்கனியை உண்டான். அதன் சுவை மிகுதியால் ஈர்ப்புண்ட அவன் மற்றொரு கனியையும் உண்ணக் கொண்டு வருக என்றான். தாம் முன்பே சிவனடியார்க் குப் படைத்து விட்டதால் கணவனுக்கு என்ன சொல்வதென்று திகைத்துச் சிவபெருமான் திருவடிகளை நினைந்தார்.

இறைவன் அருளால் மாங்கனி ஒன்று கையகத்துவரப் பெற்று அதனைப் படைத்தார். முன்புண்ட மாங்கனியைவிட இது சுவையில் மிக்கு இருந்ததைக் கண்ட பரமதத்தன் இதனை எங்கு பெற்றாய் என்றான். காரைக்காலம்மையார் நிகழ்ந்தவற்றைக் கூற,

இன்னொரு கனியையும் பெற்றுத்தா என்றான் பரமதத்தன். அம்மையார் இறைவனை வேண்ட மீண்டும் ஒரு கனி வந்தது. அதனைக் கணவன் கையில் கொடுக்க, அவன் வாங்கிய உடன் கனி மறைந்தது. அம்மையாரின் தெய்வத் தன்மையை உணர்ந்து அவரிடமிருந்து பிரிந்து வாழ்ந்து வந்தான்.

இவையெல்லாம் அறியாத உறவினர், அம்மையாரைக் கணவனிடம் கொண்டு சென்றனர். அவன் நிகழ்ந்தவற்றை யெல்லாம் கூறி வணங்கினான். கணவனுக்குப் பயன்படாத உடலை,

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு[11]

என்ற குறளுக்கேற்ப நீக்கிப் பேயுருவங் கொண்டார். கயிலை மலையை அடைந்து இறைவன் திருவடிகளில் சேர்ந்தார்.

வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல[12]

என்ற குறளுக்கேற்பப் பிறவித்துன்பம் நீக்கினார்.

சிறுத்தொண்டர்

சிறுத்தொண்ட நாயனார் சிவபெருமானை வணங்கி வந்தார். நாள்தோறும் சிவனடியார்களுக்கு விருந்தளித்தார். அடியார் அனைவரும் உண்டபின் உண்பார்.

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்[13]

என்ற குறளின்படி திகழ்ந்தார். இவர் மனைவி திருவெண்காட்டு நங்கை. இவர்களுக்குச் சீராளன் என்னும் மகன் பிறந்தான்.

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு[14]

என்ற குறளுக்கேற்ப வாழ்ந்தனர். ஒருநாள் இறைவன் எண்ணப்படி உணவுண்ண அடியார் ஒருவரும் வரவில்லை. நாயனார் என்செய் வனே என்று வருந்தியிருந்த நிலையில் பயிரவக் கோலத்துச் சிவனடியாரைக் கண்டு விட்டிற்கழைத்து வந்தார். பயிரவர்

பிள்ளை கறி தந்தால் உண்பேன் என்றும், தம் சிறுவனைப் பெற்றோர் மனமகிழ்ச்சியுடன் தாமே அரிந்து சமைக்க வேண்டும் என்றும் நியதிகள் கூறினார்.

**மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து**[15]

என்ற குறளின்படி, திருவெண்காட்டுநங்கை, சீராளனைப் பிடித்துக் கொள்ளத் தாமே தலையை அரிந்தார். இருவரும் மகிழ்வுடன் இச்செயலை விருந்தினருக்காகச் செய்தனர். நாயன்மார் வீட்டில் சமையல் செய்யும் சந்தனத் தாதியார் தலைக் கறியைச் சமைத்தார். பயிரவரை உணவுக்கு அழைத்தனர். அவர் சீராளனையும் உண்ண அழையும் என்றார். நடந்ததைக் கூறினால் பயிரவர் உண்ணாது போய்விடுவாரோ என்ற கவலையால் சீராளனை அழைத்தனர். சீராளன் ஓடிவந்தார். இறைவன் அவர்களுக்கு வீடுபேற்றை அளித்தான்.

**ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்**
**விற்றுக்கோள் தக்க துடைத்து**[16]

என்ற குறளுக்கேற்ப வாழ்ந்து உய்த்தவர்கள் இவர்கள்.

### வரலாற்றுப் பகுதிகள்

பெரியபுராண நாயன்மார்கள் வரலாறுகளில் சில பகுதிகள் குறள் தாக்கத்தால் அமைந்தவையாக உள்ளன.

### கண்ணப்ப நாயனார்

கண்ணப்பர் காட்டில் வேட்டையாடுகையில் காளத்தி மலையில் சிவலிங்கத்தைக் கண்டார். அவ்வளவில், அளவிலா அன்பு கொண்டார். தம்மை மறந்தார். அவனையே நினைந்தார். அவனுக்காகவே வேட்டையாடினார். இறைச்சியை அவர் முன் வைத்துப் பேரன்புடன் உண்ணுமாறு வேண்டினார். தம்மைப் பற்றிய உணர்ச்சியே இல்லாமல் உண்ணாது பகலில் வேட்டையாடி இரவில் இறைவனைப் பாதுகாத்திருந்தார். ஒருநாள் இறைவன் கண்ணில் குருதி கொட்டியது. இதனைக் கண்டு தமது கண்களில் ஒன்றைப் பெயர்த்து அப்பினார். குருதி நின்றது.

மற்றொரு கண்ணிலிருந்தும் குருதி கொட்டுவதைக் கண்டு தனது மற்றொரு கண்ணையும் பெயர்த்து அப்பினார். இச்செய்கை,

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு**[17]

என்ற குறள் கருத்தினை ஒத்துள்ளது.

***மங்கையர்க்கரசியார்***

மங்கையர்க்கரசியார் நின்ற சீர் நெடுமாற நாயனாரின் மனைவி. இவர் சிவ வழிபாடு மேற்கொண்டார். கணவனும் நாட்டு மக்களும் புறச்சமயத்தில் ஒழுகினர். அமைச்சராகிய குலச்சிறையார் உதவியுடன் நாட்டு மக்களையும் மன்னனையும் சைவ சமயத்திற்கு மாற்றினார். இங்ஙனம், தாம் சைவத்தினின்று சிறிதும் பிறழாமல், தம் கணவனிடத்தும் மாறு கொள்ளாமல் பெண்மைக்குரிய குணங்களில் சிறிதும் மாசு அடையாமல் மன்னனையும் நாட்டையும் சைவத்திற்குக் கொணர்ந்தமையாகிய இச்செயல்,

**தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்**[18]

என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

***பாடல்கள்***

திருக்குறள் அறத்துப்பாவின் குறள்கள் சில பெரியபுரா ணத்துப் பாடல்கள் சிலவற்றிற்கு நிலைக்களமாக விளங்குகின்றன. அத்தகைய பாடல்கள் இங்கு ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளன.

**கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ**
**னற்றா டொழாஅ ரெனின்**[19]

**செய்யுள்நிகழ் சொற்றெளியும் செவ்வியநூல் பலநோக்கும்**
**மெய்யுணர்வின் பயன்இதுவே எனத்துணிந்து விளங்கியொளிர்**
**மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்**
**பொய்யடிமை யில்லாத புலவர் எனப் புகழ்மிக்கார்**[20]

**உள்ளநிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால்**
**தெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன்கழலில் செறிவென்றே**

கொள்ளும்உணர் வினில்முன்னே கூற்றுதைத்த கழற்கன்பு
பள்ளமடை யாய்என்றும் பயின்றுவரும் பண்புடையார்[21]

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்[22]

முன்னவரை நேர்நோக்கி முக்கண்ணர் மூவுலகும்
நின்னிலைமை அறிவித்தோம் நீயும்இனி நீடியநம்
மன்னுலகு பிரியாது வைகுவாய் எனஅருளி
அந்நிலையே எழுந்தருளி அணிஏகாம் பரம் அணைந்தார்[23]

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்[24]

ஆங்குவளர் எயிலினுடன் விளங்கும் வாயில் அப்பதியில் வாழ்
பெரியோர் உள்ளம் போல ஓங்குநிலைத் தன்மையனாய் அகிலம்
உய்ய உமைபாகர் அருள்செய்த ஒழுக்க மல்லால், தீங்குநெறி
அடையாத தடையுமாகிச் செந்நெறிக்கண் நிகழ்வாய்மை திருந்த
மார்க்கம், தாங்குலவ நிலவிவளர் ஒலியால் என்றும் தடநெடுவான்
அளப்பனவாத் தகைய வாகும்[25]

கோளில் பொறியில் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை[26]

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாந டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ[27]

பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்[28]

அணைவுற வந்தெழும் அறிவு தொடங்கின அடியார்பால்
இணையில் பவங்கிளர் கடல்கள் இகந்திட இருதாளின்
புனையருள் அங்கணர் பொருவிடை தங்கிய புணர்பாகத்
துணையோ டணைந்தனர் சுருதி தொடர்ந்த பெருந்தோணி[29]

விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின் றுடற்றும் பசி[30]

ஏரின் உழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்[31]

விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது[32]

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு[33]

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்[34]

மண்ணின்மிசை வான்பொய்த்து நதிகள் தப்பி மன்னுயிர்கள்
கண்சாம்பி உணவு மாறி, விண்ணவர்க்கு சிறப்பில்வரும்
பூசை யாற்றா மிக்கபெரும் பசிஉலகில் விரவக் கண்டு,
பண்ணமரு மொழியுமையாள் முலையின் ஞானப்
பாலறா வாயருடன்
அரசும் பார்மேல், கண்ணுதலான் திருநீற்றுச் சார்வி
னோர்க்குங் கவலைவரு மோ என்று கருத்திற் கொண்டார்[35]

நெடுங்கடலுந் தன்நீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்[36]

மகிழ்ந்த தன்தலை வாழும்அந் நாளிடை வானில்
திகழ்ந்த ஞாயிறு துணைப்புணர் ஒரையுட் சேர்ந்து
நிகழ்த தன்மையில் நிலவும்ஏழ் கடல்நீர்மை குன்ற
வெகுண்டு வெங்கதிர் பரப்பலின் முதிர்ந்தது வேனில்[37]

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை[38]

அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பில்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி
வரைபுரை மாடம்நீடி மலர்ந்துள பதிகள் எங்கும்[39]

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்[40]

இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதெ
னில்லவள் மாணாக் கடை[41]

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
நன்கல நன்மக்கட் பேறு[42]

நீராருஞ் சடைமுடியார் அருளினால் நிறைதவத்துப்
பேராள ரவர்தமக்குப் பெருகுதிரு மனையறத்தின்
வேராகி விளங்குதிரு வெண்காட்டு நங்கைபால்
சீராள தேவரெனுந் திருமைந்தர் அவதரித்தார்[43]

மற்றை மறையோன் திருமனைவி வாய்த்த மரபில் வந்துதித்தாள்
சுற்றம் விரும்பும் இல்வாழ்க்கைத் தொழிலாள் உலகில்
துணைப்புதல்வர் பெற்று விளங்குத் தவஞ்செய்தாள் பெறும்பே
றெல்லைப் பயன்பெருவாள் பற்றை எரியும் பற்றுவரச் சார்பா
யுள்ள பவித்திரையாம்[44]

தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள்
தந்தம் வினையான் வரும்[45]

செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மென்மையால்[46]

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு[47]

அருவிலையிற் பெருங்காசும் அவையே யாகி அமுதுசெய்யத்
தொண்டரள விறந்து பொங்கி, வருமவர்கள் எல்லார்க்கும் வந்தா
ருக்கும் மகிழ்ந்துண்ண இன்னடிசில் மாளா தாகத் திருமுடிமேல்
திங்களொடு கங்கை சூடுஞ் சிவபெருமான் அருள்செய்யச் சிறப்பின்
மிக்க, பெருமைதரு சண்பைநகர் வேந்தர் நாவுக் கரசர்இவர்
பெருஞ்சோற்றுப் பிறங்கல் ஈந்தார்[48]

இணைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்[49]

கறியமுதங் குதவாதே திருஅமுது கைகூட
வெறிமலர்மேல் திருவனையார் விடையவன்தன் அடியாரே
பெறலரிய விருந்தானால் பேறிதன்மேல் இல்லை யெனும்
அறிவினராய் அவர்அமுது செய்வதனுக் காதரிப்பார்[50]

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு[51]

தீங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்குதண் டாயத்தி னால்வலித்
தாங்க யிற்கத்தி யால்அரிந் தன்புடன்
ஓங்கு சீர்திருத்தொண்டி னுயர்ந்தனர்[52]

பணிவுடைய னின்சொல னாதலொருவற்
கணியல்ல மற்றுப் பிற[53]

ஈசருக்கே அன்பானார் யாவரையுந் தாங்கண்டால்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற் (று)
ஆசையினால் ஆவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி இனியனவே பேசுவார்[54]

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது[55]

அங்கது கேட்டு நின்ற அமணரும் அவர்மேற் சென்று
பொங்கிய வெகுளி கூரப் பொறாமைகா ரணமே யாகத்
தங்கள்வாய் சோர்ந்து தாமே தனிவாதில் அழிந்தோ மாசின்
வெங்கழு வேற்று வான்இவ் வேந்தனே என்று சொன்னார்[56]

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு[57]

பாவக்கொடு வினைமுற்றிய படிறுற்றடு கொடியோர்
நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்
ஏவிச்செறு பொருகைக்கரி யினைஉய்த்திட வெருளார்
சேவிற்றிகழ் பவர்பொற்கழல் தெளிவுற்றனர் பெரியோர்[58]

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள[59]

செல்வம் மேவிய நாளில் இச்செயல் செய்வ தன்றியும் மெய்யினால்
அல்லல் நல்குர வான போதினும் வல்லர் என்றறி விக்கவே
மல்லல் நீடிய செல்வம் மெல்ல மறைந்து நாடொறும் மாறிவந் (து)
ஒல்லை யில்வறு மைப்ப தம்புக உன்னி னார்தில்லை
மன்னினார்[60]

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவான்
பெற்றான் பொருள்வைப் புழி[61]

மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேல்மன்னர் வினவுதலும்
அத்தனடி யாரையான் அமுதுசெய்விப் பதுமுட்ட
இத்தகைமை செய்தேன் என் றியம்புதலும் மிகஇரங்கிப்
பத்தரைவிட்(டு) இவரன்றோ பண்டாரம் எனக் (கு) என்பார்[62]

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்[63]

ஆளும்அங் கணருக் கன்பர் அணைந்தபோ தடியிர் றாழ்ந்து
மூளும்ஆ தரவு பொங்க முன்புறின் றினிய கூறி
நாளும்நல் லமுத மூட்டி நயந்தன எல்லாம் நல்கி
நீளும்இன் பத்துள் தங்கி நிதிமழை மாரி போன்றார்[64]

என்று கணவர் கூறுதலும் அதனுக் கிசைத் தெம் பிரான் தொண்டர்
இன்று தாழா தமுதுசெய்யப் பெற்றின் கவர்தம் மலர்ந்தமுகம்
நன்று காண்ப தெனநயந்து நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளி யினிற்கொண்டு வாரும் என்றார் திருவனையார்[65]

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது[66]

அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற
அணிகொம் பரின்மிசை
அருகெங்கும் தவமுன் புரிதலில் வருதொண் டெனு நிலை தலைநின்
றுயர்தமிழ் இறையோராம் இவர்தந் திருவடி வதுகண் டதிசயம்

எனவந் தெதிர் அரகர என்றே சிவமுன் பயில்மொழி
பகர்கின் றனவளர் சிறைமென் கிளியொடு சிறு பூவை[67]

தவமறைத் தல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று[68]

நில்லாத உலகியல்பு கண்டு நிலை யாவாழ்க்கை
அல்லேன் என் றறத்துறந்துசமயங்க ளானவற்றின்
நல்லாறு தெரிந்துணர நம்பர்அரு ளாமையினால்
கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயங் குறுகுவார்[69]

இவர்நிலை இதுவே யாக இலங்குவேல் தென்ன னான
அவன்நிலை அதுவாம் அந்நாள் அருகர்தந் நிலையா தென்னில்
தவமறைத் தல்ல செய்வார் தங்கள்மந் திரத்தால் செந்தீ
சிவநெறி வளர்க்க வந்தார் திருமடஞ் சேரச் செய்தார்[70]

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து[71]

மெய்யெலாம நிறு பூசி வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினில் படைக ரந்த புத்தகக் கவளி ஏந்தி
மைபொதி விளக்கே என்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்த நாதன்[72]

வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
உண்ணெஞ்சின் வஞ்சக் கறுப்பும் உடன்கொண்டு
வண்ணச் சுடர்வாள் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப்போர் வீரர்க்குச் சொன்னஇ டம்புகுந்தான்[73]

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு[74]

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர்புராணம் என்பாம்[75]

அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்[76]

மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யார்நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வராய்க்
காசினிமேற் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினால்
ஆசில்அறச் சாலைகளும் தண்ணீர்ப்பந் தரும் அமைப்பார்[77]

இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து[78]

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்[79]

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்[80]

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
மலைப்பட்டார் மற்றை யவர்[81]

போர்வலைச் சிலைத்தொழில் புறத்திலே விளைப்பவச்
சார்வலைத் தொடக்கறுக்க ஏகும்ஐயர் தம்முனே
சார்வலைப் பகுத்தகன்று கானமா வளைக்கநீள்
வார்வலைத் திறஞ்சுமந்து வந்தவெற்பர் முந்தினார்[82]

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்[82]

அகில லோகமும் பொருள்முதற் றாமெனும் அளவில்
புகலும் அம்பெரும் பற்றினைப் புரையற அறிந்த
இகலில் மெய்த்திருத் தொண்டர்முன் இறைவர்தாம் விடைமேல்
முகில்வி சும்பிடை அணைந்தனர் பொழிந்தனர் முகைப்பூ[84]

பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு[85]

அருள்செய்த மொழிகேளா அடற்கரிகை தனைஉருவிப்
பொருள்செய்தாம் எனப்பெற்றேன் எனக்கொண்டு பூங்கொடிதன்
இருள்செய்த கருங்கூந்தல் அடியில்அரிந் தெதிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட[87]

அந்நிலைமைச் சாக்கியர்தம் அருங்கலைநூல் ஓதிஅது
தன்நிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல
என்னும்அது தெளிந்(து) ஈசர் அருள்கூட ஈறில்சிவ
நன்னெறியே பொருளாவ தெனஉணர்வு நாட்டுவார்[87]

செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுங் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லை என உய்வகையாற்
பொருள்சிவன் என்(று) அருளாலே உணர்ந்தறிந்தார்[88]

எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு[89]

ஏதமே விளைந்த திந்த அடிகள்மார் இயல்பால் என்பார்
நாதனும் ஆல வாயில் நம்பனே காணும் என்பார்
போதமா வதுவும் முக்கட் புராணனை அறிய தென்பார்
வேதமும் நீறு மாகி விரவிடும் எங்கும் என்பார்[90]

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்[91]

மெய்ம்மேற்கண் துளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும்பிள் ளைமைதானோ
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்(து)
அம்மேஅப் பா என்றென் றழைத்தருளி அழுதருள[92]

ஆர்வம் மிக்கெழும் அன்பினில் மலரயன் அனைய
சீர்ம றைத்தொழிற் சடங்குசெய் திருந்துநூல் முனிவர்
பார்வ ழிப்பட வரும்இரு வினைகளின் பந்தச்
சார்பொ ழிப்பவர் திருக்கையிற் காப்புநாண் சாத்த[93]

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்[94]

தலைப்பட்டார் எல்லாருந் தனிவீரர் வாளிற்
கொலைப்பட்டார் முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம்போ லாயினார்[95]

*பாடல் வரிகள்*

திருக்குறள் அறத்துப்பாலின் குறள்கள் சில சொல்லாலும், பொருளாலும் பெரியபுராணத்தில் பொதிந்துள்ளன. அவற்றில் சில இங்கு ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளன.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்[96]

வந்ததொரு செயலாலே
கழலடைந்த திருத்தொண்டர்[97]

இருள்சேர் ரிருவினையும் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு[98]

நிலவியவினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளின்அள வுளவே[99]

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்[100]

நற்றமிழ் மாலை புனைந்தருளி ஞானசம்பந்தர் புலன்கள்
ஐந்தும் செற்றவர்[101]

தனக்குவமை யில்லாதான்றாள் சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது[102]

திருவால வாய் அமர்ந்த தனிநாதன்
பூமருவுஞ் சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார்[103]

பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்[104]

கரையில்கவ லைக்கடற்கோர் கரைபற்றி னார்போன்று
விரைவுறுமெய் அன்பினால் விடாதொழிலார் தமைக்கண்டு[105]

குறைவில தெனினும் கூற்றை உதைத்தவர் நாமங் கூறி
நிறைகடற் பிறவித் துன்பம் நீங்கிடப் பெற்ற தன்றே[106]

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று[107]

மழைவளர் உலகில் எங்கும் மன்னிய சைவம் ஓங்க[108]

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்[109]

சைவர் வாழ்மடத் தமணர்கள் இட்டதீத் தழல்போய்ப்
பைய வேசென்று பாண்டியற் காகெனப் பணிந்தார்[110]

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது[111]

ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்
கோதிலாத குணப்பெருங் குன்றனார்[112]

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற[113]

மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யார்நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்க[114]

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
இவ்வாழ்வா னென்பான் றுணை[115]

மிக்கமனை அறம்புரிந்து விருந்தளிக்கும் மேன்மையினர்[116]

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது[117]

அன்புறுவாய்மை
மனைய றம்புரிந் தடியவர்க் கின்புற வழிபடுந் தொழில் மிக்கார்[118]

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை[119]

நீதிமனை அறம் புரியும் நீர்மையினை நிலைநிற்பார்[120]

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்[121]

வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்[122]

தெய்வந் தொழஅள் கொழுநன் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை[123]

கொவ்வைவாய்ப் பரவையார் கொழுநரையே தொழுதெழுவார்[124]

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு[125]

துணைப்புதவர் பெற்று விளங்குந் தவஞ்செய்தான் பெறும்பே
றெல்லைப் பயன்பெறு வாள்[126]

மக்கள்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு[127]

உருகிமனங் கரைந்தலைய உடனணைந்து தழுவியும்முன்
பெருகியஇன் புறஅளித்தார் பெரும்புகலிப் பிள்ளையார்[128]

குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்[129]

உண்ணனைந் தமுதம் ஊறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல்
வண்ணமென் பவளச்செவ்வாய் தரட்டியே வளரா நின்றார்[130]

தம்மின்தம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது[131]

தீதகன் றுலகம் உய்யத் திருஅவ தாரம் செய்தார்[132]

நம்பி யாரு ரரைப்பயந்தார் ஞால மெல்லாங் குடிவாழ[133]

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்[134]

அளவில்தொல் கலைகள் முற்றி அரும்பெறல் தந்தை மிக்க
உளமிகழ் காதல் கூர ஓங்கிய குணத்தால் நீழ[135]

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்[136]

நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல் அன்பு நீர்பொழி கண்ணும்[137]

பொங்கு காதலின் மெய்ம்மயிர்ப் புளகமும் பொழியும்
செங்கண் நீர்தரும் அருவியும் திகழ்திரு மேனி[138]

மனம் பொழியும் பேரன்பால்
பெருகியகண் மழைபொழியப் பெரும்புகலிப் பெருந்தகையார்
உருகியஅன் புள்ளவைப்ப[139]

வித்தும் மிடல்வேண்டு கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்[140]

காதல் அடியார்க் கமுதாக்கி அமுது செய்யக்
கண்டுண்ணும், நீதி முறைமை வழுவாத நியதி பூண்ட
நிலைமையார்[141]

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று[142]

கனியிருக்கக் காய் கவர்ந்த
கள்வனேன்[143]

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்[144]

நன்மை நீடிய நடுநிலை ஒழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப[145]

மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்[146]

உலகினில் ஒழுக்க என்றும் உயர்பெருந் தொண்டை நாட்டு
நலமிகு சிறப்பின் மிக்க நான்மறை விளங்கு மூதூர்
குலமுதற் சீலம் என்றுங் குறை[147]

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி[148]

நன்மையல் லாது செய்யும்
ஊனம்வந் தடையில் யாமும் உயிர்துறத் தொழிவ(து) என்றார்[149]

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது[150]

பொறாமைகா ரணமே யாகத்
தங்கள்வாய் சோர்ந்து தாமே தனிவாதில் அழிந்தோ மாகில்
வெங்கழு வேற்று வான்இவ் வேந்தனே[151]

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு[152]

பாரா தரிக்க எடுத்தேந்திப் பணிந்தார் பருவ மழைபொழியும்
காரால் நிகர்க்க அரியகொடைக் கையார் கழறிற் றறிவார் தாம்[153]

மருவ இனியார் பால்செய்வ தென்னாம் என்றும் மகிழ்ச்சியினால்
பருவ மழைச்செய் கைபற்றிக் கொண்டு[154]

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்[155]

பறையறைந்த
பணியாலே மனைநிறைத்துப் பாங்கெங்கும் நெற்கூடு
கணியாமற் கட்டிநகர் களிகூரப் பரவையார்[156]

ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றால்[157]

பொருவாரும் போர்க்களத்தில் உயிர்க்கொடுத்துப் புகழ்
கொண்டார்[158]

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று[159]

பொய்கடிந் தறத்தின் வாழ்வார்[160]

உறங்குவது போலுஞ் சாக்காடு றங்கி
விழிப்பது போலும் பிறப்பு[161]

உட்டரு களிப்பி னோடும் உறங்கிமீ தெழுந்த தொத்து[162]
அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்

வேண்டிய வெல்லா மொருங்கு[163]

நிலவியஇரு வினைவலையிடை நிலைகழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளின்அள வுளவே[164]

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு[165]

பற்றை எரியும் பற்றுவரச் சார்பாயு
யுள்ள பவித்திரையாம்[166]

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானாம் மாணாப் பிறப்பு[167]

பொருள்செய்தாம் எனப்பெற்றேன் எனக்கொண்டு பூங்கொடிதன்
இருள்செய்த கருங்கூந்தல் அடியில்அரிந் தெதிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி விடைநீட்ட[168]

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி[169]

பைவளர்வாள் அரவணிந்தார் பாதமலர் நிழல்சேர்ந்து
மெய்வகைய வழிஅன்பின் மீளாத நிலைபெற்றார்[170]

சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துக்
சார்தரா சார்தரு நோய்[171]

சைவமெய்த் திருவின் சார்வே பொருளெனச் சாரு நீரார்[172]
வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குத் துய்த்த லரிது[173]

அருள்வான்
அருளும் வகையார் நினைவார்[174]

## ஒரு குறள் வழி வாழ்ந்த நாயன்மார்கள்

பெரியபுராண நாயன்மார்கள் வரலாறுகளுள் சில ஒவ்வோர் குறளின் விளக்கங்களாக அமைந்துள்ளன. அங்குக் குறட்பாக்களின் உரை விளக்கமாகச் சேக்கிழார் சில நாயன்மார்கள் வரலாறுகளை அமைத்துள்ளதாகவே தோன்றுகிறது.

### இயற்பகை நாயனார்

இயற்பகை நாயனார் சிவபெருமானிடத்தும், சிவனடியார் களிடத்தும் பேரன்பு கொண்டவர். சிவனடியார்கள் எது கேட் பினும் மகிழ்ந்து அளித்தலையே பெரும் நோன்பாகக் கொண் டார். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டுத் தாம் கொண்ட குறிக் கோளின்படி வாழ்ந்து வந்தார். ஒருநாள் காமுக வேடத்துடன் சிவனடியார் நாயனாரின் இல்லமுற்றார். நாயனார் அவரை அன்புடன் வரவேற்று நிற்கையில், வந்தவர், நீர் அடியவர் எது கேட்டாலும் மறுக்காமல் மகிழ்ந்தளிப்பதைக் கேட்டு உம்மிடம் ஒன்றை வேண்டி வந்தேன் என்றார். அதற்கு நாயனார், என்னிட திருப்பின் அப்பொருள் சிவனடியாருடைமை என்றார். வந்தவர் உன்னிடம் நிலைத்த காதலுடைய உன் மனைவியை விரும்பி வந்தேன் என்றார். நாயனார் மகிழ்ந்து, என்னிடம் உள்ளதையே கேட்டீர், இதோ என்று சொல்லித் தம் மனைவியாரிடம் இவருக்கு உன்னைக் கொடுத்தேன் என்றார். மனைவியாரும் நீர் சொல்வதைச் செய்வது தவிர எனக்கு வேறு உரிமை ஏது என்று வணங்கினார். வந்தவர் உறவினரால் தீங்கு வராதபடி உடன் வருக என்றார். நாயனார் வாளேந்தி உடன் வர, வந்தவர் அம்மையாரு டன் முன் செல்கின்றார். இதனை அறிந்த உறவினர்கள் போருக்கு வர இயற்பகையார் அவர்களைப் போர் செய்து கொன்றார். எதிர்ப்பவர் ஒருவரும் இலரானார். வந்தவர் இனி நீ போகலாம் எனக் கூற நாயனார் சென்றார். இவரது இச்செய்கையானது,

> **செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**
> **செயற்கரிய செய்கலா தார்**[175]

என்ற குறளுக்கு உரையாக விளங்குகிறது.

### திருக்குறிப்புத்தொண்ட நாயனார்

திருக்குறிப்புத்தொண்ட நாயனார் அடியார்கள் சிறப்பறிந்து அவர்களுக்கே தொண்டு செய்தவர். ஆடைகளை அழுக்கு அகற்றித் தந்தவர். குளிர்காலத்தில் ஒருநாள் முதிய சிவனடியார் ஒருவர் வந்தார். அவர் அழுக்கடைந்த கந்தை யணிந்துக் காணப் பட்டார். நாயனார் அக்கந்தையை வெளுத்துத் தருவதாகக் கூறித்

தருமாறு வேண்டினார். முதியவர் மாலைக்குள் தரவேண்டும் என்றார். நாயனார் அவ்வாறு தருவதாக வாங்கிச் சென்றார். பெருமழையால் துணி உலரவில்லை. இப்படி நேரலாம் என்றெண்ணி யான் முன்பே வீட்டின் காற்றில் உலரச் செயதிருக்க வேண்டும். அப்படிச் செய்யாதது என் குற்றம். இதற்கு தண்டனை இதுவே என்று துணி துவைக்கும் பாறையில் தலையை மோதிக் கொண்டார்.

**ஏதிலார் குற்றம்போர் தம்குற்றம் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னும் உயிர்க்கு**[176]

என்ற குறளின்படி, தம்மீதே குற்றங் கண்டார். இக்குறளின் எடுத்துக்காட்டாக இவர் வாழ்க்கை அமைந்துள்ளது.

**திருமூலநாயனார்**

திருமூலநாயனார் சிவபெருமானிடத்து மெய்ப்பொருள் கேட்டு வந்தவர். தம் நண்பரான அகத்தியரைக்காணப் பொதிகை மலை நோக்கிப் புறப்பட்டார். காவிரிக் கரையில் சாத்தனூரில் ஆக்களை மேய்ப்பான் மூலன் என்பான் பாம்புக்கடியால் இறந்து கிடந்தான். அவனைச் சுற்றி ஆக்கள் பலவாறு வருந்தியிருக்கக் கண்டார் திருமூலநாயனார். அவற்றின்பால் அன்பும் இரக்கமும் கொண்டார். தாம் பயின்ற யோகக் கலையால் தம் உடலை மறைத்து வைத்து விட்டுத் தம் உயிரை மூலன் உடம்பில் பாய்ச்சி னார். ஆக்கள் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. மாலையில் ஆக்கள் பின் சென்றார். அவை தத்தம் வீடு சேர்ந்தன.

**அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**
**தந்நோய்போல் போற்றாக் கடை**[177]

என்ற குறளுக்கு விளக்கமாக அமைந்துள்ளது இவர் செயல்.

**திருவள்ளுவரின் கடவுட் கோட்பாடு**

திருக்குறளில் கடவுளைக் குறித்த பெயர்களும் தொடர் களும் திருவள்ளுவரின் கடவுட் கோட்பாட்டை விளக்குவனவாக உள்ளன. திருவள்ளுவர் தம் நூற்பாயிரத்தில் முதலிடத்தில் கடவுள் வாழ்த்தை அமைத்துள்ளார். நூலில் அவர் கடவுளைக் குறிப்பிடும் இடங்கள் மிகச் சிலவே. கடவுள் வாழ்த்து என்ற தொடர் முதற்

பத்தின் தலைப்பாகக் காணப்படினும் கடவுள் என்ற சொல் குறட்பாக்களில் எங்கும் ஆளப்படவில்லை. கடவுளுக்கு இவர் இட்டு வழங்கும் பெயர்கள் பகவன், இறைவன் என்னும் இரண்டே.

திருவள்ளுவர் தம் கடவுள் வாழ்த்துள் ஒரு கடவுளைக் கூறியுள்ளார். கடவுள் என்றும் உள்ளவர். தொழத்தக்கவர். யாவற்றிற்கும், யாவருக்கும் தலைவர். எங்கும் எல்லாவற்றிலும் கலந்திருப்பவர். தூய அறிவுடையவர். அன்பர்களின் உள்ளத்தில் அல்லது படைப்பு முழுவதிலும் சென்று தங்கி அதை மலர்போல் அலர்விப்பவர். வேண்டுதல் வேண்டாமையில்லாதார். ஐம்பொறிகளின் நுகர்வு அற்றவர். வழிபடுவோரின் ஐம்பொறிகள் அடங்கும்படி அறத்தைப் படையாகவுடையவர். அழகிய தண்ணிய இயல்புடையவர். எண் குணங்களையுடையவர். தம் அடிச்சார்ந்தார்க்கும், தாம் காட்டிய நெறியில் நின்றார்க்கும் இம்மையிலும், மறுமையிலும் நல்வாழ்வை அளிப்பவர். தம் அடிச்சார்ந்தாரின் மனக்கவலையை நீக்கவல்லார். தம் புகழை விரும்புவோர் பால் இருவினைகள் சேராதொழிய அருள்பவர். தன்தாள் சேர்ந்தார் உலகில் தீமையையும் அல்லல்களையும் கடந்து வீட்டு நிலையை அடையத்துணை நிற்பவர் எனக் கடவுளின் தன்மையைத் திருவள்ளுவர் கூறியுள்ளார். இவற்றிலிருந்து திருவள்ளுவர் கடவுட் கோட்பாடு விளங்குகிறது.

## பெரியபுராணக் கடவுட் கோட்பாடு

பெரியபுராணம் நூல் முழுமையும் கடவுளையும், அவர் அடியார்களை ஆட்கொள்ளும் தன்மையையும், எளிவந்த பெருங் கருணையையுமே பேசுகின்றது. இவற்றிலிருந்து சேக்கிழாரின் கடவுட் கோட்பாடு தெள்ளென விளங்குகிறது. சேக்கிழார் ஒரு கடவுளையே பேசுகின்றார். அக்கடவுளை அவர் சிவன் என்ற சொல்லால் குறிக்கின்றார். எல்லாம் அவனே என்ற கொள்கையுடையவராக விளங்குகிறார்.

**உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன், தன்னை யார்க்கும் அறிவரியான்: அரியயனுக்கு அரியவன். அடியார்க்கு எளியவன். அருட்கருணைத் திருவாளன். கற்பனை கடந்த சோதி. கருணையே**

உருவமானவன். எப்பொருளும் தரும் ஈசன். அத்தனாய் அன்னை யாய் ஆருயிராய் அமிர்தாகி முத்தனாம் முதல்வன். வானாகி நிலனாகி அனலுமாகி மாருதமாய் இடு சுடராய் நீருமாகி உயிராகி உணர்வுமாகி உலகங்கள் அனைத்துமாய் உலகுக்கப்பால் அனாதி வடிவாகி நின்றவன். அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்ற பிரான். குணங்கடந்த தனிக்கூத்தன். தொல்லுலகம் முழுதும் அளித்து அழிக்கும் முதல்வன். வினையெலாம் விளைக்கவல்லவன். ஆதியும் முடிவுமில்லா அற்புதத் தனிக்கூத்தாடும் நாதர். ஊழி முதல்வர். ஐந்தெழுத்தாய் ஆனவன் என இறைவன் இயல்புகளைச் சேக்கிழார் பலபடக் கூறுகின்றார். இதிலிருந்து சேக்கிழாரின் கடவுட் கோட்பாடு விளங்குகிறது. இவற்றுள் பலவும் வள்ளுவரின் கடவுள் கோட்பாட்டுடன் தொடர்புடையனவாகவே அமை கின்றன.

**நீத்தார் பெருமை கூறும் அடியவர் இலக்கணம் - பெரிய புராண அடியவர் இலக்கணங்களோடு பொருந்தி வருதல்**

திருக்குறளில் உள்ள நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்தை அடியொற்றிப் பெரிய புராணத்தில் திருக்கூட்டச் சிறப்பு என்னும் பகுதி அமைந்துள்ளது. திருத்தொண்டர்களின் பெருமையினை அவர்தம் திருக்கூட்டத்துடன் இயைத்துப் பொதுவகையாற் கூறும் இப்பகுதியில் அடியார்களின் இயல்புகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. இதன் பின்னர்க் கூறப்படும் தனியடியார் வரலாறுகளில் அவரவர்பால் அமைந்த சிறப்பியல்பு களாகத் தனித்தனியே வகுத்து விளக்கப் பெற்றுள்ளன.

**நீத்தார் பெருமை கூறும் அடியவர் இலக்கணம்**

நீத்தார் என்பவர் ஐம்புலன்களை அடக்கியாள்பவர். இதனால் இவரை ஓரைந்தும் காப்பான், ஐந்து அவித்தான் என்று சுட்டுன்றார் திருவள்ளுவர். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின் வகை தெரிவான் என துறவோருடைய தத்துவ உணர்வு எடுத்துக் காட்டப்படுகின்றது. இத்துறவோர் எண்வகைக் குணங் களால் நிறைந்தவர். ஆற்றல் வாய்ந்த சொற்களைப் பெற்றவர். உலகிலுள்ள உயிர்களிடத்து அருள்பூண்டு, இவ்வுலகம் உய்யும்

பொருட்டுத் துறவறம் மேற்கொண்டவர். குணம் என்னும் குன்றேறி நின்றார். அறமுதல் பொருள்களை உலகிற்கு உணர்த்து பவர் என நீத்தார் பெருமையை வள்ளுவர் கூறுகின்றார். இவ்வடி யவர் இலக்கணங்கள் பலவும் பெரிய புராணத்துக் கூறப்படும் அடியவர் இலக்கணங்களோடு பெரிதும் பொருந்தியுள்ளன.

**பெரியபுராணம் கூறும் அடியவர் இலக்கணம்**

சிவனார் கழல்பற்றி எப்பற்றினையும் அற எறிபவர்கள். அவர்களுடைய நிலையான செல்வம் அவர்கள் உள்ளத்தில் அருட் செல்வமே மண் ஓடும் சிவமேயாம். செம்பொன்னும் சிவமேயாம். இரண்டும் ஒன்றே. அவர்களுக்கு, கூடும் அன்பினிற் கும்பிடவே அன்றி வீடும் வேண்டாவிறலின் விளங்கினார். கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர், கோதிலாக் குணப்பெருங் குன்றனார். களவு பொய் காமகோபம் முதலிய குற்றம் காய்ந்தார். ஐம்புலன் களையும் ஆறு நெருக்கத் குற்றங்களையும் வென்றவர்கள். பூசுநீறு போல் புனிதர்கள். இனியனவே பேசுபவர்கள் எனப் பெரிய புராணம் அடியவர்களின் இலக்கணத்தைக் கூறுகிறது. இவ்விலக் கணங்கள் திருக்குறள் நீத்தார் பெருமையுடன் ஒத்துள்ளன.

**அறன் வலியுறுத்தல் கூறுகள்**

திருவள்ளுவர் கூறும் அறன் வலியுறுத்தல் கூறுகளைத் தம வாழ்க்கையின் அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் பெரியபுராண நாயன்மார்கள்.

> **ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
> **செல்லும் வாயெல்லாம் செயல்**[178]

என்ற குறளுக்கேற்ப நாயன்மார்கள் இயன்ற பொழுதெல்லாம் அறம் செய்து வாழ்ந்தார்கள் என்பதைச் சிறப்புற எடுத்தியம்பி யுள்ளார் சேக்கிழார். அறத்தினால் வீடுபேறு முதலியவை பெற லாம் என்பதை எல்லா அடியவர்கள் வரலாறுகளுமே உணர்த்து கின்றன. தம்மால் இயன்ற அறங்களை செய்து இறைவன் திருவடியை அடைந்தனர். எனவே பெரிய புராணத்தில் கூறப் படும் அடியவர்கள் அனைவருமே அறன் வலியுறுத்தல் சுட்டும் உயர் நெறியில் வாழ்ந்தவர்களேயாவர் என்பது புலாகின்றது.

### இல்லறக் கூறுகள்

இல்லறத்தில் ஈடுபட்டவர்கள் அனைவருமே இல்லறக் கூறுகளாகிய விருந்தோம்பல், ஈகை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு முதலான நெறிகளில் நின்றவர்களே. இந்நெறிகளில் நின்று இறைவன் அருளைப் பெற்றனர்.

### இல்வாழ்க்கை நெறி நின்றோர்

சேக்கிழார் தம் பெரியபுராணத்தில் குறிப்பிட்டுள்ள அறுபத்து மூன்று நாயன்மார்களில் இருபத்தொரு நாயன்மார்கள் இல்லற வாழ்வில் ஈடுபட்டவர்கள் என்பதைப் பெரியபுராணம் வெளிப்படையாகவே தெரிவிக்கின்றது. அவர்கள்,

*1.சுந்தரமூர்த்தி நாயனார் ,2.திருநீலகண்ட நாயனார்,3. இயற்பகை நாயனார், 4.இளையான்குடிமாற நாயனார்,5. மெய்ப்பொருள் நாயனார், 6.அமர்நீதி நாயனார், 7.குங்குலியக் கலயநாயனார், 8.மானக்கஞ்சாற நாயனார், 9.அரிவாட்டாயர் நாயனார், 10.காரைக்காலம்மையார், 11.அப்பூதியடிகள் நாயனார், 12.திருநீலநக்க நாயனார், 13.நமிநந்தியடிகள் நாயனார், 14.ஏயர்கோன்கலிக்காம நாயனார், 15.சிறுத்தொண்ட நாயனார், 16.கணநாத நாயனார், 17.கலிக்கம்ப நாயனார், 18.கலியநாயனார், 19.நின்றசீர் நெடுமாற நாயனார், 20.கூழற்சிங்க நாயனார், 21.திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்* முதலானவர்கள் இல்லற நெறியில் நின்ற பெரியபுராணப் பாத்திரங்கள்.

### வாழ்க்கைத் துணைநலம் நெறிநின்றோர்

திருவள்ளுவர் கூறும் வாழ்க்கைத் துணை நலத்திற்கேற்ப வாழ்ந்தவர்களே பெரியபுராண நாயன்மார்களின் மனைவியர்கள்.

> **மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்**
> **வளத்தக்காள் வாழ்க்கைத் துணை**[179]

என்ற குறளுக்கேற்ப இவர்கள் அனைவரும் கணவனிடம் அன்பு பூண்டு கணவனின் மூலம் வழி நடந்தவர்கள். கணவனின் இன்பத்திலும், துன்பத்திலும் பங்கு கொண்டவர்கள். பெரியபுராணத்தில் பெண்ணடியார்கள் அல்லாது பதினெட்டு நாயன்மார்களின் மனைவியர்கள் குறிக்கப் பெற்றுள்ளனர். அவர்கள்,

1.சுந்தரமூர்த்தி நாயனார் மனைவியர் பரவையார், சங்கிலியார், 2.திருநீலகண்ட நாயனார் மனைவி, 3.இயற்பகை நாயனார் மனைவி, 4.இளையான்குடிமாறநாயனார் மனைவி, 5.மெய்ப்பொருள் நாயனார் மனைவி, 6.அமர் நீதிநாயனார் மனைவி, 7.குங்குலியக்கலய நாயனார் மனைவி, 8.அரிவாள்தாய நாயனார் மனைவி, 9.பரமதத்தனின் மனைவி காரைக்கால் அம்மையார், 10.அப்பூதியடிகள் நாயனாரின் மனைவி, 11.திருநீலதக்க நாயனாரின் மனைவி, 12.நமிநந்தியடிகள் நாயனாரின் மனைவி, 13.ஏயர்கோன் கலிக்காம நாயனாரின் மனைவி, 14.சிறுத்தொண்ட நாயனாரின் மனைவி திருவெண்காட்டு நங்கை, 15.கலிக்கம்ப நாயனார் மனைவி, 16.கலியநாயனார் மனைவி, 17.நின்றசீர் நெடுமாற நாயனாரின் மனைவி, 18. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரின் மனைவி முதலானவர்கள் பெரியபுராணத்தில் கூறப்படும் வாழ்க்கைத் துணைநலத்தில் நின்று சிறந்தவர்கள் ஆவார்கள்.

**மக்கட்பேறு நெறி நின்றார்**

> **மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்**
> **நன்கலம் நன்மக்கட் பேறு**[180]

என்ற குறளுக்கேற்பப் பெரிய புராணத்தில் மக்கட்பேறு வாய்க்கப் பெற்ற சிறப்பிற்குரியவர்களும், அவர்களின் மக்களும்,

1.சடையனார், இசை ஞானியார் சுந்தரர், 2.அமர்நீதி நாயனார் - மகள், 3.நாகன், தந்தை - கண்ணப்பர், 4.மானக்கஞ்சாற நாயனார் - மகள், 5.எச்சதத்தன் - விசாரசருமர் (சண்டேசரர்), 6.புகழனார், மாதினியார் - திலகவதியார் நாவுக்கரசர், 7.பரமதத்தன் மகள் புனிதவதியார் (பரமதத்தனின் இரண்டாவது மனைவிக்குப் பிறந்த மகள்), 8.அப்பூதியடிகள் நாயனார் - மூத்த திருநாவுக்கரசு, 9.சிவபாத இருதயர், பகவதியம்மையார், ஞானசம்பந்தர், 10.சிவநேசர் - பூம்பாவை, 11.சிறுத்தொண்டர், திருவெண்காட்டு நங்கை - சீராளன், 12.சபதேவன்,கமலவதி -கோட்செங்கணான் முதலானவர்

ஏனைய இல்லற - துறவற அதிகாரக் கருத்துக்களும் பெரியபுராணமும்

வான்சிறப்பு என்ற அதிகாரத்தில் மழையானது உயிர்களுக்கு யாவையும் அளித்து உணவாகவும் பயன்படுகிறது. மழை பொய்க்குமாயின் தேவர்கட்குச் செய்யப்படும் பூசை முதலானவை கெடும் என்பதை வலியுறுத்தியுள்ளார்.

**சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கு மீண்டு**[181]

இதனை, ஞானசம்பந்தர் திருவீழிமிழலையில் தங்கியிருந்தபோது மழை இன்மையால் பஞ்சம் ஏற்பட இறைவனிடம் படிக்காசு பெற்றுப் பஞ்சம் நீங்கிய வரலாற்றைக் கூறுமிடத்தில் கூறியுள்ளார்.

**மண்ணின்மிசை வான்பொய்த்து நதிகள் தப்பி மன்னுயிர்கள்**
**கண்சாம்பி உணவு மாறி விண்ணோர்க்குஞ் சிறப்பில்வரும்**
**பூசை யாற்றா மிக்கபெரும் பசிஉலகில் விரவக் கண்டு**[182]

விருந்தோம்பல் என்ற அதிகாரத்தில் தன் இல்லின்கண் வந்த விருந்தைப் பேணி வருகின்ற விருந்தை எதிர்நோக்கி அவர்களோடு உண்ண இருப்பவன் வானத்தவர்க்கு விருந்தாவான் என்ற வள்ளுவரின் கருத்தை இளையான்குடிமாற நாயனார், சிறுத் தொண்டர் முதலானவர்களின் வரலாற்றில் உணர்த்துகின்றார் சேக்கிழார்.

ஒப்புரவு அதிகாரத்தில் தம்மால் இயன்றதைப் பிறர்க்கு ஈதல் வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார் திருவள்ளுவர். இக் கருத்து மானக்கஞ்சாற நாயனார், மூர்க்க நாயனார் முதலானவர் களின் வரலாற்றில் உணர்த்தப்படுகிறது.

புகழ் என்ற அதிகாரத்தில் ஈதலிசைபட வாழ்தல் என்ற குறளுக்கேற்ப நாயன்மார்களது ஈகைத்திறன் விளங்குகிறது.

வாய்மை என்ற அதிகாரத்தில் கூறப்படும் பொய்யாமை பொய்யாமை யாற்றின் என்ற கருததிற்கேற்பப் பெரிய புராண நாயன்மார்கள் அனைவரும் திகழ்கின்றனர்.

நிலையாமை என்ற அதிகாரத்தில் செல்வம் நிலையில் லாதது. அதனைப் பெற்றால் அதனாற் செய்யப்படும் அறங்கள்

அப்பொழுதே செய்யவேண்டும் என்கிறார் திருவள்ளுவர். இக்கருத்து எல்லா நாயன்மார்கள் வரலாறுகளிலும் கூறப்படு கிறது. நாவுக்கரசர் வரலாற்றில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.

துறவு என்ற இவ்வதிகாரத்தில் வீடெய்துவார்க்கு ஐந்து பொறிகளும் கெடுதல் வேண்டும். பற்றுகளை அறுக்க வேண்டும் என்கிறார் திருவள்ளுவர். இதனை ஞானசம்பந்தர் ஐந்து புலன் களையும் வென்றார் என்று கூறுமிடத்திலும், விறன்மிண்டர் சண்டேசுர நாயனார் வரலாறுகளில் பற்றை அறுத்து வாழ்ந்தமை யைக் கூறுகிறார் சேக்கிழார்.

மெய்யுணர்தல் என்ற அதிகாரத்தில் எக்காலத்திலும் அழியாது நிற்கும் பொருள் இது என உணர்த்தல் கருத்து கூறப் படுள்ளது. இக்கருத்து, பெரியபுராணத்தில் எல்லா நாயன்மார்கள் வரலாற்றிலும் உணர்த்தப்பட்டுள்ளது. இறைவனே உண்மைப் பொருளென அடியார்கள் அனைவரும் தெரிவித்தனர். இறைவன் அடியைச் சார்ந்தனர். இங்ஙனம் பெரியபுராணக் கருத்துகளும், திருக்குறள் கருத்துக்களும் பெரிதும் ஒத்துள்ளன.

**ஊழ்பற்றிய வள்ளுவர் கருத்து**

ஊழின் வலியைத் திருவள்ளுவர் ஊழ் என்ற அதிகாரம் அமைந்து வலியுறுத்துகிறார். ஒருவனுடைய வாழ்வும் தாழ்வும் விளைவது ஊழால் என்கிறார் திருவள்ளுவர். ஊழைப் பயனோக்கி ஆகூழ், போகூழ் என்கிறார். பல நூல் கற்றாலும் ஊழ் வயத்தால் அமைந்த அறிவே நிலைப்பது. அறிவுடையோர் வறியராகவும், ஏனையர் செல்வராகவும் இருப்பதற்குக் காரணம் ஊழே. நல்லவை செய்தாலும் ஊழ்வினையால் செல்வம் அழியும். தீயனவற்றால் செல்வம் செழிப்பதும் உண்டு. இதனை,

**நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்**
**நல்லவாம் செல்வம் செயற்கு.**[183]

என்கிறார். வருந்தி அழைத்தாலும் வாராதன வாரா. போமின் என்றாலும் போகா. செல்வராயினும் ஊழ் வகுத்த படியே நுகர்ச்சி உளவாம். துறந்தாலும் மனம் வருந்துவது ஊழால் என்கிறார். ஊழின் பெருவலியாவுள என்கிறார் வள்ளுவர்.

ஊழின் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.[184]

என ஊழின் தன்மையைத் திருவள்ளுவர் ஊழ் அதிகாரத்தில் கூறியுள்ளார்.

## பெரியபுராணம் ஊழ் கோட்பாடு

சேக்கிழார் உயிர்கள் நுகரும் வண்ணம் பகுத்து நுகர்வித்தல் இறைவன் செயல் என்கிறார். எனவே ஊழாவது இறைவனால் உயிர்களுக்குக் கொடுக்கப்படுவது என்பதை,

செய்வினை யுஞ்செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய் வகையால் நான்காகும் விதித்தபொருள் [185]

என்று கூறுகின்றார் சேக்கிழார். துன்புற வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து, பண்டுபுரி நற்றவத்தால், ஆதி வரும்மலமும் அறுத்த வாய்மை, இருவினைப் பாசமும் மலங்கள் ஆத்தலின், வினை இரண்டும் சாருமல மூன்றும் அற, முன்னை வல்வினையும் நீங்க, அவ்வினைக்கு இவ்வினை, தொல்வினை, தன்பரிசும் வினையிரண்டும் சாருமலம் மூன்றும் அற என்ற இடங்களில் ஊழ்வினை பற்றிக் கூறியுள்ளார். ஊழ்வினையை இறைவன் நீக்கி ஆட்கொண்டுள்ளார் என்பதனை நற்பெரும் பான்மைகூட்ட, பண்டைவிதி கடைகூட்ட எனவரும் தொடர்களால் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார்.

## முடிவுகள்

இப்பகுதியில் மேற்கொள்ளப் பெற்ற ஆய்வின் பயனாகக் கீழ்க்காணும் முடிவுகள் காணப்பெறுகின்றன.

1. பெரியபுராணத்தில் கூறப்பட்ட அடியார் வரலாறுகளுள் சில, சிற்சில குறட்பாக்களுக்கு முற்றும் பொருத்தமான சித்திரங்களாகத் திகழ்கின்றன என்பது நிலைநாட்டப்பட்டுள்ளது.
2. சில அடியவர்கள் வரலாற்றில் ஒரு பகுதி மட்டும் திருக்குறள் தாக்கத்தால் உருவானவையாக அமைந்துள்ளன என்பது ஆராய்ந்து சுட்டப்பட்டுள்ளது.

3. குறள் தாக்கத்தால் பெரியபுராணத்தில் உருவான பாடல் களும், பாடல் வரிகளும் சொல்லாலும் பொருளாலும் ஒப்புமை பெற்று விளங்குதல் ஆய்ந்து நிறுவப்பட்டுள்ளது.
4. ஒரு குறளுக்கு விளக்கமாக அமைந்த அடியவர் வரலாறுகள் முறையாக எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன.
5. திருவள்ளுவரின் கடவுட் கோட்பாடும் பெரியபுராணக் கடவுட் கோட்பாடும் தொடர்புடையனவாகவே அமை கின்றன என்பது ஆய்ந்து நிறுவப் பெற்றது.
6. திருவள்ளுவர் கூறும் அடியவர் இலக்கணங்களும் பெரிய புராண அடியவர் இலக்கணங்களும் பொருந்தி வரும் திறம் ஆய்ந்து சுட்டப்பட்டுள்ளது.
7. திருக்குறள் கூறும் இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை நலம், மக்கட் பேறு முதலிய நெறிகளில் வாழ்ந்த பெரிய புராணப் பாத்திரங்கள் எவையெவை எனப் பிரித்துக் காட்டப் பட்டுள்ளன.
8. அறத்துப்பாலில் ஏனைய அதிகாரங்களால் பெரிய புராணத் தில் விளைந்த தாக்கங்களும், ஊழ் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துக்களும் பெரிய புராணத்தில் ஊடுருவி நிற்கும் திறன்களும் ஆய்ந்து நிறுவப் பெற்றுள்ளன.

இவ்வாறு இவ்வியலில் பெரிய புராணத்தில் திருக்குறள் அறத்துப்பாலினால் விளைந்த தாக்கம் ஆய்ந்து நிறுவப் பெற்றுள்ளது.

## குறிப்பு விளக்கம்

1. திருக்குறள் 81
2. மேற்படி நூல் 220
3. மேற்படி நூல் 225
4. மேற்படி நூல் 53
5. மேற்படி நூல் 86

6. மேற்படி நூல் 223
7. மேற்படி நூல் 61
8. மேற்படி நூல் 72
9. மேற்படி நூல் 81
10. மேற்படி நூல் 82
11. மேற்படி நூல் 79
12. மேற்படி நூல் 4
13. மேற்படி நூல் 85
14. மேற்படி நூல் 60
15. மேற்படி நூல் 90
16. மேற்படி நூல் 220
17. மேற்படி நூல் 72
18. மேற்படி நூல் 56
19. மேற்படி நூல் 2
20. பெரிய புராணம், பா.3944
21. மேற்படி நூல், பா.3668
22. திருக்குறள் 3
23. பெரிய புராணம், பா.1209
24. திருக்குறள் 6
25. பெரிய புராணம், பா.1170
26. திருக்குறள் 9
27. பெரிய புராணம், பா.2
28. திருக்குறள் 10
29. பெரிய புராணம், பா.1986
30. திருக்குறள் 13
31. மேற்படி நூல் 14
32. மேற்படி நூல் 16

33. மேற்படி நூல் 18
34. மேற்படி நூல் 19
35. பெரிய புராணம், பா.1194
36. திருக்குறள் 17
37. பெரிய புராணம், பா.2287
38. திருக்குறள் 43
39. பெரிய புராணம், பா.76
40. திருக்குறள் 52
41. மேற்படி நூல் 53
42. மேற்படி நூல் 60
43. பெரிய புராணம், பா.3681
44. மேற்படி நூல். பா.1221
45. திருக்குறள் 63
46. பெரிய புராணம், பா.7
47. திருக்குறள் 86
48. பெரிய புராணம், பா.2474
49. திருக்குறள் 87
50. பெரிய புராணம், பா.1740
51. திருக்குறள் 94
52. பெரிய புராணம், பா.4047
53. திருக்குறள் 95
54. பெரிய புராணம், பா.4152
55. திருக்குறள் 165
56. பெரிய புராணம், பா2701
57. திருக்குறள் 201
58. பெரிய புராணம், பா.1384
59. திருக்குறள் 223

60. பெரிய புராணம், பா.445
61. திருக்குறள் 226
62. பெரிய புராணம், பா.4121
63. திருக்குறள் 228
64. பெரிய புராணம், பா.3662
65. பெரிய புராணம், பா.3721
66. திருக்குறள் 262
67. பெரிய புராணம், பா.1430
68. திருக்குறள் 274
69. பெரிய புராணம், பா.1307
70. பெரிய புராணம், பா.2600
71. திருக்குறள் 277
72. பெரிய புராணம், பா.473
73. பெரிய புராணம், பா.642
74. திருக்குறள் 299
75. பெரிய புராணம், பா.10
76. திருக்குறள் 333
77. பெரிய புராணம், பா.1305
78. திருக்குறள் 344
79. திருக்குறள் 362
80. பெரிய புராணம், பா.143
81. திருக்குறள் 348
82. பெரிய புராணம், பா.719
83. திருக்குறள் 349
84. பெரிய புராணம், பா.4014
85. திருக்குறள் 352
86. பெரிய புராணம், பா.900

87. பெரிய புராணம், பா.3644

88. பெரிய புராணம், பா.3645

89. திருக்குறள் 355

90. பெரிய புராணம், பா.2707

91. திருக்குறள் 359

92. பெரிய புராணம், பா.1966

93. பெரிய புராணம், பா.3090

94. திருக்குறள் 360

95. பெரிய புராணம், பா.634

96. திருக்குறள் 3

97. பெரிய புராணம், பா.3657, வரி.1-2

98. திருக்குறள் 5

99. பெரிய புராணம், பா.734, வரி.3-4

100. திருக்குறள் 6

101. பெரிய புராணம், பா.2246, வரி.3-4

102. திருக்குறள் 7

103. பெரிய புராணம், பா.2779, வரி.3-4

104. திருக்குறள் 10

105. பெரிய புராணம், பா.2633, வரி.3-4

106. பெரிய புராணம், பா.2763, வரி.3-4

107. திருக்குறள் 11

108. பெரிய புராணம், பா.557, வரி.5, 1

109. திருக்குறள் 28

110. பெரிய புராணம், பா.2607, வரி.3-4

111. திருக்குறள் 29

112. பெரிய புராணம், பா.142, வரி.3-4

113. திருக்குறள் 34

114. பெரிய புராணம், பா.1305, வரி.1-2
115. திருக்குறள் 42
116. பெரிய புராணம், பா.1286, வரி.2
117. திருக்குறள் 45
118. பெரிய புராணம், பா.3931, வரி.4-5
119. திருக்குறள் 47
120. பெரிய புராணம், பா.3676, வரி.4
121. திருக்குறள் 50
122. பெரிய புராணம், பா.361, வரி.3
123. திருக்குறள் 55
124. பெரிய புராணம், பா.3174, வரி.4
125. திருக்குறள் 60
126. பெரிய புராணம், பா.1221, வரி.3-4
127. திருக்குறள் 65
128. பெரிய புராணம், பா.1952, வரி.3-4
129. திருக்குறள் 66
130. பெரிய புராணம், பா.671, வரி.3-4
131. திருக்குறள் 68
132. பெரிய புராணம், பா.149, வரி.4
133. பெரிய புராணம், பா.4232, வரி.4
134. திருக்குறள் 70
135. பெரிய புராணம், பா.104, வரி.1-2
136. திருக்குறள் 71
137. பெரிய புராணம், பா.1410, வரி.2-3
138. பெரிய புராணம், பா.2569, வரி.2-3
139. பெரிய புராணம், பா.2900, வரி.1-3
140. திருக்குறள் 85

141. பெரிய புராணம், பா.3625, வரி.3-4
142. திருக்குறள் 100
143. பெரிய புராணம், பா.1494, வரி.3-4
144. திருக்குறள் 133
145. பெரிய புராணம், பா.1084, வரி.1-2
146. திருக்குறள் 134
147. பெரிய புராணம், பா.4177, வரி.1-3
148. திருக்குறள் 137
149. பெரிய புராணம், பா.2599, வரி.3-4
150. திருக்குறள் 165
151. பெரிய புராணம், பா.2701, வரி.2-4
152. திருக்குறள் 211
153. பெரிய புராணம், பா.3808, வரி.3-4
154. பெரிய புராணம், பா.3819, வரி.2-3
155. திருக்குறள் 228
156. பெரிய புராணம், பா.3188, வரி.1-3
157. திருக்குறள் 223
158. பெரிய புராணம், பா.1300, வரி.4
159. திருக்குறள் 297
160. பெரிய புராணம், பா.361, வரி.1
161. திருக்குறள் 339
162. பெரிய புராணம், பா.601, வரி.2
163. திருக்குறள் 343
164. பெரிய புராணம், பா.734, வரி.3-4
165. திருக்குறள் 350
166. பெரிய புராணம், பா.1221, வரி.4-5
167. திருக்குறள் 351

168. பெரிய புராணம், பா.900, வரி.2-4
169. திருக்குறள் 356
170. பெரிய புராணம், பா.3995, வரி.3-4
171. திருக்குறள் 359
172. பெரிய புராணம், பா.361, வரி.4
173. திருக்குறள் 377
174. பெரிய புராணம், பா.324, வரி.2-3
175. திருக்குறள் 26
176. மேற்படி நூல் 190
177. மேற்படி நூல் 315
178. மேற்படி நூல் 33
179. மேற்படி நூல் 51
180. மேற்படி நூல் 60
181. மேற்படி நூல் 18
182. பெரிய புராணம், பா.2465, வரி. 1-3
183. திருக்குறள் 375
184. மேற்படி நூல் 380
185. பெரிய புராணம், பா.3645, வரி. 1-2
186. மேற்படி நூல், பா.285, வரி.3
187. மேற்படி நூல், பா.288, வரி.4



# 4

# பெரியபுராணத்தில் திருக்குறள் பொருட்பாலின் தாக்கம்

பெரியபுராணத்தில் திருக்குறள் பொருட்பால் தாக்கத்தால் ஏற்பட்ட முழு வரலாறுகள், வரலாற்றுப் பகுதிகள், பாடல்கள், பாடல்வரிகள், ஒரு குறள் வழி வாழ்ந்த நாயன்மார்கள், சேக்கிழார் கூறும் இறைமாட்சியும் - திருவள்ளுவர் கூறும் இறைமாட்சியும், திருக்குறள் கூறும் செங்கோன்மை - பெரியபுராண நாயன்மார் களின் செங்கோன்மையோடு பொருந்தி வருதல், திருக்குறள் அமைச்சரியல்பும் - பெரியபுராண அமைச்சாரியல்பும், திருக்குறள் நட்பியல் கோட்பாடு - பெரியபுராண நட்பியல் கோட்பாட் டோடு பொருந்தி வருதல் மற்றும் அரசியல், அங்கவியல், ஒழிபியல் அதிகாரக் கருத்துக்களும் பெரியபுராணமும் என்னும் உட்தலைப்புகளில் இப்பகுதி அமைக்கப்பட்டுள்ளது.

### குறட் தாக்கத்தால் ஏற்பட்ட முழு வரலாறுகள்

பெரியபுராணத் தனி அடியார் வரலாறுகளுள் சில திருக்குறள் பொருட்பாலின் தாக்கத்தால் உருவான வரலாறாக அமைந் துள்ளன.

### ஏனாதிநாயனார்

ஏனாதிநாயனார் சிவபெருமானிடத்தும், அடியார்களி டத்தும் பக்தியுடையவர். அவர் அரசர்கட்கு வாள் பயிற்சி அளித்து அதனால் வரும் பொருளை ஈட்டினார்.

> **அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து**
> **தீதின்றி வந்த பொருள்.**[1]

என்ற குறளின்படி, தாம் அறவழியில் ஈட்டிய பொருளை இறைப் பணிக்கும், அடியவர்களுக்கும் செலவு செய்தார். இவர் தாயத்தான் அதிசூரன் என்பானுக்கும் இதே தொழில், தொழில் துறையில் ஏனாதி நாயனாருக்கு வருமானம் நாளும் பெருக, அவனுக்கோ குறைந்தது. அதனால் பொறாமை கொண்ட அதிசூரன்

நாயனாரைப் போருக்குஅழைத்தான். போரில் ஏனாதிநாயனார் வெற்றி பெற்றார்.

தோற்ற அதிசூரன் வஞ்சனையால் அவரை அழிக்க எண்ணி, அவரிடம் சென்று படைகள் "இல்லாமல் நாம் இருவரும் தனியே போர் செய்வோம்" என்றான். ஏனாதி நாயனார் இதற்கும் இணங் கினார். நீறணிந்தவரை நாயனார் கொல்லார் என்றுணர்ந்து, இதற்குமுன் அதனைஅணியாதவன் நீறணிந்தான். ஒரு கையில் வாள் ஏந்தி, மறுகையில் பலகையால் நெற்றியை மறைத்துக் கொண்டான். நாயனார் தன் வாளால் அவனைக் கொல்லச் சென்றபோது நீறணிந்த நெற்றியைக் காட்ட அத்திருநீற்றைக் கண்ட நாயனார் வாளைக் கீழேபோட எண்ணினார். படை யில்லாதாரைக் கொன்றார் என்ற பழி அடியார்க்கு ஏற்படக் கூடாதென்று கருதியவராய் எதிர்க்கும் பாவனையால் வாளுடன் போர் செய்வார் போல் நின்றார். அதிசூரன் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொண்டான். ஏனாதி நாயனாரின் இச்செயலானது,

**சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி**
**துலையல்லால் கண்ணும் கொளல்.**[2]

என்ற குறள் கருத்திற்கு ஒத்ததாக உள்ளது.

**குறள் தாக்கத்தால் ஏற்பட்ட வரலாற்றுப் பகுதிகள்**

பெரியபுராண நாயன்மார்கள் வரலாறுகளில் சில பகுதிகள் திருக்குறள் பொருட்பாலின் தாக்கத்தால் அமைந்தவையாக உள்ளன.

**மெய்ப்பொருள் நாயனார்**

மெய்ப்பொருள் நாயனார் சிவ வேடம் கொண்டு வந்த முத்தநாதனை வணங்கினார். அவ்வளவில் அவன் வாளை எடுத்து அவரை வெட்டினான். மெய்ப்பொருள் நாயனார் "மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள்" என்று முழக்க மிட்டுத் தரையில் சாய்கையில் காவலாளி ஓடிவந்து முத்தநாதனை வெட்டிட வாளை உயர்த்தினான். உடனே மெய்ப்பொருள் நாயனார் "தத்தா நமர்" என்று தடுத்து எம்பிரான் அடியவராகிய இவர்க்கு ஏதோர்

இடையூறும் நேராமல் பாதுகாப்பாகச் சென்று விடுவாய் என்றார். இவ்வரலாற்றுப் பகுதி,

> **இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
> **என்ன பயத்ததோ சால்பு.[3]**

என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

**அப்பூதியடிகள் நாயனார்**

அப்பூதியடிகள் நாயனார் திருநாவுக்கரசரைக் காணாத போதும் அவர்மீது பெரும் அன்புகொண்டார். வீட்டிலுள்ள அளவைகளை, நிறைகோல், மக்கள், ஆ, தண்ணீர்ப்பந்தல் முதலாக அனைத்திற்கும் திருநாவுக்கரசர் பெயரை இட்டு மகிழ்ந்தார். இவருடைய அன்பானது,

> **புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
> **நட்பாம் கிழமை தரும்.[4]**

என்ற குறளுக்கு விளக்கமாக அமைந்துள்ளது.

**பாடல்கள்**

திருக்குறள் பொருட்பாவில் குறள்கள் சில பெரிய புராணத்துப் பாடல்களில் சொல்லாலும், பொருளாலும் பொதிந்துள்ளன. அத்தகைய பாடல்கள் இங்கு ஒப்புமைபடுத்தப் பட்டுள்ளன.

> **படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்**
> **உடையான் அரசருள் ஏறு.[5]**

> **தாழுஞ்செய விலிறொரு மன்னவன் தாங்க வேண்டும்**
> **கூழும்குடி யும்முத லாயின கொள்கைத் தேனும்**
> **சூழும்படை மன்னவன் தோளினைக் காவ லின்றி**
> **வாழுந்தகைத் தன்றிந்த வையகம் என்று சொன்னார்.[6]**

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்**
**இறையென்று வைக்கப் படும்.[7]**

> **பன்முறை உயிர்கள் எல்லாம் பாலித்து ஞாலம் காப்பான்**
> **தன்னெடும் குடைக்கீழ்த் தத்தம் நெறிகளில் சரித்து வாழும்**

மன்னரை இன்றி வைகும் மண்ணுல கென்னும் காலை
இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும்.[8]

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.[9]

அந்நாள் சிலநாள்கள் செல்ல அருள்திரு நாவுக் கரசர்
மின்னார் சடைஅண்ணல் எங்கும் மேவிடம் கும்பிட வேண்டிப்
பொன்மார்பில் முந்நூல் புனைந்த புகலிப் பிரான்இசை வோடும்
பின்னாக எய்த இறைஞ்சிப் பிரியாத நண்பொடும் போந்தார்.[10]

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து[11]

ஐந்து வருடம் அவர்க்கணைய அங்கம் ஆறும் உடன்நிறைந்த போல்
சந்த மறைகள் உட்படமுன் தலைவர் மொழிந்த ஆக மங்கள்
முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின் வாசம்
சிந்தை மலர உடன்மலரும் செவ்வி உணர்வு சிறந்ததால்.[12]

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.[13]

மாநிலங்கா வலனாவன் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறந்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ.[14]

என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயஇசைந்தே
அன்னியன்ஓர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால்
தொல்மனுநூல் தொடைமனுவால் துடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக் கென்றான்.[15]

மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்நிற் பனவ.[16]

. . . . . . . . . . . . . . . . . . . . . . மதிஅமைச்சர்
நின்றநெறி உலகின்கண் இதுபோல்முன நிகழ்ந்தால்

பொன்றுவித்தல் மரபன்று மறைமொழிந்த அறம்புரிதல்
தொன்று தொடு நெறியன்றோ தொல்நிலங்கா வல.[17]

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு.[18]

மாதர் நாறு பறிப்பவர் மாட்சியும்
சீர் நீர்முடி சேர்ப்பவர் செய்கையும்
ஓதை யார்செய் உழுதர் ஒழுக்கமும்
காதல் செய்வதோர் காட்சி மலிந்ததோ.[19]

வைதெரிந் தகற்றி ஆற்றி மழைப்பெயல் மானத் தூற்றிச்
செய்யபொற் குன்றும் வேறு நவமணிச் சிலம்பும் என்னக்
கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றால்
மொய்வரை உலகம் போலும் முளரிநீர் மருத வைப்பு.[19]

வீதிகள் விழவின் ஆர்ப்பும் விரும்பினர் விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா தனயரும் மனையில் தப்பா
நீதிய புள்ளும் மாவும் நிலத்திருப் புள்ளு மாவும்
ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தாம் அஞ்சும்.[21]

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு.[22]

வீதிகள் விழவின் ஆரப்பும் விரும்பினர் விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா தனயரும் மனையில் தப்பா
நீதிய புள்ளும் மாவும் நிலத்திருப் புள்ளு மாவும்
ஓதிய எழுத்தால் அஞ்சும் உறுபிணி வரத்தாம் அஞ்சும்.[23]

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறிப்பு.[24]

திங்கள்சூ டியமுடிச் சிகரத் துச்சியில்
பொங்குவெண் தலைநுரை பொருது போதலால்
எங்கள்நா யகன்முடி மிசைநின் றேயிழி
கங்கையாம் பொன்னியாம் கன்னி நீத்தமே.[25]

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளம்தரும் நாடு.[26]

அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி
வரைபுரை மாடம்நீடி மலர்ந்துள பதிகள் எங்கும்.[27]

புணர்ச்சி பழுகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.[28]

வடிவுதான் காணா ராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர்
அடிமையுத் தம்பி ரானார் அருளுங்கேட் டவர்நா மத்தால்
படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கள் முதலா யுள்ள
முடிவிலா அறங்கள் செய்து முறைமையால் வாழும் நாளில்.[29]

வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி.[30]

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.[31]

இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட,
பெயலும் விளையுளும் தொக்கு.[32]

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூற்மறப்பர்
காவலன் காவான் எனின்.[33]

வையம் புரக்குந் தனிச்செங்கோல் வளவர் பொன்னித் திருநாட்டுச்
செய்ய கமலத் தடம்பணையும் செழுநீர்த் தடமும் புடையுடைத் தாய்ப்
பொய்தீர் வாய்மை அருமறைநூல் புரிந்தசீலப் புகழதனால்
எய்தும் பெருமை எண்டிசையும் ஏறூர் ஏமப் பேறூரால்.[34]

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித ளன்று.[35]

பொற்சிலை வளைய எதிர்ந்தவர் புற்றர வளைய சரம்பட
விற்படை துணியவும் நின்றிலர் வெற்றிகொள் சுரிகை வழங்கினர்

முற்றிய பெருவளன் இன்றியும் முற்படு கொடைநிலை நின்றிட
உற்றன உதவிய பண்பினர் ஒத்தனர் உளர்சில கண்டகர்.[36]

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.[37]

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்கள் தன்னிற் கடந்துள்ளார் இல்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்(து)
உற்றுலகில் தன்னையே சால மதித்துள்ளான்.[38]

*பாடல்வரிகள்*

*திருக்குறள் பொருட்பாலின் பாடல்வரிகள் சில பெரிய புராணத்தில் இழையோடி உள்ளது. அவைகளில் சில இங்கு ஒப்புமை படுத்தப்பட்டுள்ளது.*

அறனிழுக்கா தல்லவை நீக்கி, மறனிழுக்கா
மானம் உடைய தரசு.[39]

அரசியல் நெறியில் வந்த அறநெறி வழாமல் காத்து
வரைநெடுத் தோளால் வென்ற மாற்றவர் முனைகள் மாற்றி[40]

தாமின் புறுவதுலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்[41]

தொண்டர்மகிழ்ந் துண்ண உண்ணத் தொலையாதே
ஏறு பெருமை புவிபோற்ற இன்புற் றிருக்கும் அந்நாளில்[42]

இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்[43]

அன்னலவன் கண்ணெதிரே அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான்[44]

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடன்எழலும்[45]

எண்ணிய எண்ணியாங் கெய்துப, எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்[46]

திண்மை . . . . . . . . . .
வைப்பி னால்திருத் தொண்டில் வழாதவர்[47]

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்[48]

. . . . . . . . . . . தென்னன்வெ புறுநீத் தம்மை
எறியமா சுடலுங் கன்றி அருகுவிட் டேற நிற்பார்
அறிவுடை யாரை யொத்தார் அறிவிலா நெறியில் நின்றார்[49]

பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு[50]

பாடும்அம் மனைகள் எங்கும் பயிலும்அம் மனைகள் எங்கும்
நீடுகே தனங்கள் எங்கும் நிதிநிகே தனங்கள் எங்கும்[51]

மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடைய தரண்[52]

. . . . . . . . . . . கானகமுந்
துன்று மணிநீர்க் கான்யாறுந் துறுகற் சுரமும்[53]

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு[54]

மருவியநண் புறகேண்மை அற்றை நாள்போல் வளர்ந்தோங்க
உடன் பலநாள் வைகும் நாளில்[55]

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை[56]

. . . . . . . . . . . . . இடைவிட நண்பி னாலே
பொருவரும் மகிழ்ச்சி பொங்கத்[57]

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து[58]

கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி ஏந்தி[59]

உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்[60]

பொருளாயம் எய்துதறகுப் புகழ்க்குடந்தை அம்பலத்தே
உருளாயச் சூதாடி[61]

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்[62]

. . . . . . . . . . . . மானக்
குன்றென நின்ற மெய்மைக் குலச்சிறை யார்[63]

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து[64]

அருளுபெருஞ் சூலையினார் ஆட்கொள்ள அடைத்துய்ந்த
தெருளும்உணர் வில்லாத சிறுமையேன் யான் என்றார்[65]

ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினால் உம்மடிகள்
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யான் சென்றார்[66]

**ஒரு குறள் வழி வாழ்ந்த நாயன்மார்கள்**

பெரிய புராண நாயன்மார்கள் வரலாறுகள் சில திருக்குறள் பொருட்பாலின் ஒவ்வோர் குறளுக்கும் இலக்கியமாகத் திகழ் கின்றன.

**நரசிங்க முனையரைய நாயனார்**

நரசிங்க முனையரையர் நாயனார் சிவனடித் தொண்டேற்ற அரசர். நீறணிந்து வரும் சிவனடியார் ஒவ்வொருவருக்கும் திருவாதிரையில் தோறும் பொன் வழங்கி வந்தார். ஒரு திருவா திரையில் வந்த அடியவர்களில், திருநீறு அணிந்த அடியார் ஒருவர், காமவெறி வெளிப்படும் தோற்றத்துடன் வந்தார். இவரு டைய ஒழுக்கமில்லா நிலைகண்ட ஏனைய அடியார்கள், இகழ்ச்சி கொண்டு ஒதுங்கினர். இது கண்ட அரசர் பெருமான், அந்த அடியாரை எதிர்கொண்டு வணங்கி அவருக்கு இரட்டிப்புப் பொன் கொடுத்து வழியனுப்பினார். இச்செயலானது,

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்[67]

என்ற குறளின் விளக்கமாக உள்ளது. திருநீறு அணிந்த அடியவர் பால், காமம் பற்றிய குற்றத்தைகாண்டலாகாது என்பதாம். ஒருவரிடம் குற்றங்கள் இருப்பினும் அவரிடம் காணப்படும் குணங்களைக் கொண்டு அக்குற்றத்தைக் குற்றமாகக் கொளல் கூடாது என்பது புலனாகின்றது.

**பூசலார் நாயனார்**

பூசலார் நாயனார் தம் ஊரிலே சிவபெருமானுக்குக் கோயில் கட்ட எண்ணினார். செல்வரல்லர் நாயனார். அதனால் மனத்தி னால் கோயில் கட்டுவேன் என்று முடிவு கொண்டார். தனிமை யிலமர்ந்து கோயில் கட்டுமானத்திற்குரிய கல், மண், சுண்ணாம்பு, பணியாட்கள் முதலியவற்றையும் மனத்தினால் தேடியமைத்துக் கொண்டு முறைப்படித் திருக்கோயிலை இரவும் பகலும் உறங் காமல் கட்டி முடித்தார். திருக்குடமுழுக்கிற்கான நாளையும் குறித்தார்.

காஞ்சியில் பல்லவ மன்னன் சிவபெருமானுக்குச் சிறந்த கோயிலமைத்தான். அதற்கு வேண்டிய செல்வங்களையும் நிறைந் தான். அவன் கனவில் சிவபெருமான் அரசனே நின்றவூர்ப் பூசலார் என்னும் அன்பன் பன்னாட்களாக நினைத்துக் கட்டிய கோயி லுக்கு நாளை, குடமுழுக்கிற்குச் செல்வேன். ஆகவே, நீ உன் கோயிலுக்குரிய குடமுழுக்கை வேறொரு நாள் வைத்துக் கொள்வாய் என்றருளி மறைந்தார். இவரது வாழ்க்கையானது,

**எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின்**[68]

என்ற திருக்குறளுக்கு இலக்கியமாகத் திகழ்கிறது. பூசலார் இறைவனுக்குக் கோயில் கட்ட நினைத்தார். அதற்குரிய செல்வம் இல்லை. இருப்பினும் தம் மனத்தினால் அவர் கொண்டவினை நிறைவேறியது. இறைவன் அருளும் பெற்றார்.

**திருவள்ளுவர் கூறும் இறைமாட்சி**

அரசனின் இயல்புகளைத் திருவள்ளுவர் இறைமாட்சி என்ற அதிகாரத்தில் விரித்துரைக்கின்றார். பின்வரும் அதிகாரங்களுக்கு இது தோற்றுவாயாக அமைந்துள்ளது.

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும் உடையவன் அரசருள் ஏறு போன்றவன். அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், தூங்காமை, கல்வி, துணிவுடைமை, முதலிய குணங்கள் அரசனுக்கு அணிகலன்கள் போன்றன. தாம் அறத்தின் வழுவாது ஒழுகி ஏனை யோரையும் அவ்வழி ஒழுகச் செய்யும் அறப்பண்பு மன்னர்களுக்கு உரியதாகும். தாழ்வின்றி அமையும் வீரமும், காட்சிக்கு எளிய வனாயும், கடுஞ்சொல் அல்லாதவனாயும் விளங்குதல் வேண்டும் என்கின்றார் வள்ளுவர்.

**இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்ல தரசு**[69]

எனப் பொருள் வரும் வழிகளை மேன்மேலும் ஆக்கலும், அங்ஙனம் வந்தவற்றைத் தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமல் காத்தலும், காத்தவற்றை அறம், பொருள், இன்பங்கள் வழிச் செலவிடுதலும் அரசனுக்கு கடன் என்கிறார்.

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்**
**கிறையென்று வைக்கப் படும்**[70]

என முறை செய்து காப்பாற்றும் மக்களை மக்கள் இறைவனாகப் போற்றுவர் என்கிறார். இங்ஙனம் அரசனின் இலக்கணத்தைத் திருவள்ளுவர் வரையறுத்துள்ளார்.

**சேக்கிழார் கூறும் இறைமாட்சி**

நாட்டின் ஒழுகலாற்றிற்கு இன்றியமையாத அரசனை உலகத் திற்கு உயிராகக் கூறுகிறது புறநானூறு. இறைவன் கண்ணொளியும் ஆன்மாவும் போல உயிருடன் கலந்து நின்று நல்லனவும் தீயனவும் இவையெனக் காட்டித் தன்வழிப் படுத்துவது போன்று, நாட்டின் ஆட்சித் தலைவனாகிய மன்னனும் தன்னாட்டில் வாழும் குடி மக்களுக்கு நன்மை தீமைகள் இவையெனக் காட்டி நன்னெறிப் படுத்துவதில் குடிமக்களுக்குக் கண்போன்று உதவி செய்பவன் என்கிறார் சேக்கிழார்.

**மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்**
**கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலன்**[71]

அரசன் அறம் முதலான நெறிகள் வழாமல் நாட்டைக் காக்க வேண்டும் என்பதனை,

**அறம்பொரு ளின்பமான அறநெறி வழாமற் புல்லி**[72]

**அரசியல் நெறியின் வந்த அறநெறி வழாமல் காத்து**[73]

எனக் கூறுகின்றார். மன்னன் மக்களுக்கு உயிர்போன்றவன் என்கிறார்.

**மண்ணுக் குயிரா மெனும்மன் னவனார்**[74]

உயிர்களிடத்து அன்புநிலை வழுவாது அரசுபுரக்க வேண்டும் என்பதனை,

**. . . . . . . . . . . . எல்லா உயிரும்மகிழ்**
**தரும நிலைமை அறிந்துபுவி தாங்கும் கழறிற்றறிவார்**[75]

**. . . . . . . . . . . . வையம் பொதுக்கடித் தினிது காக்கும்**
**கொற்றவன்**[76]

என்கிறார்.

நாடு, குடி, கூழ் முதலிய ஏனைய எல்லா உறுப்புகளையும் கொண்டதாயினும், மன்னன் காவலின்றி வாழ்வு பெறுதல் இயலாது என மன்னனின் சிறப்பியல்பைக் கூறுகின்றார் சேக்கிழார்.

**கூழும்குடி யும்முத லாயின கொள்கைத் தேனும்**
**சூழும்படை மன்னவன் தோளிணைக் காவ லின்றி**
**வாழுந்தகைத் தன்றிந்த வையகம் என்று சொன்னார்**[77]

என அரசனின் இயல்புகளை விளக்கியுள்ளார் சேக்கிழார்.

**திருக்குறளில் கூறப்படும் செங்கோன்மை - பெரிய புராணத்தில் கூறப்படும் செங்கோன்மையோடு பொருந்திவரல்**

தன்கீழ் வாழ்வார் (குடிமக்கள்) குற்றஞ்செய்தால் அக்குற்றத்தை நாடி உயிர்களிடத்து வேறுபாடின்றி, ஒத்த நீதியே வழங்குதல் அரசனது நீதியாகும் என்பது.

**ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்து யார்மாட்டும்**
**தேர்ந்துசெய் வஃதே முறை**[78]

என வரும் திருக்குறளால் அறிவுறுத்தப் பெற்றுள்ளன. இதனை,

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர் காங்குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துநீர்த் தறங்காப்பான் அல்லனோ[79]

என்று பாடுகிறார் சேக்கிழார். முட்டாது செங்கோல் செலுத்திய அரசனை அச்செங்கோலே காக்குமென்பதற்கு மனுநீதிச் சோழன் வரலாறே சான்றாக விளங்குகிறது.

இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செய்யின்[80]

என்ற திருக்குறளுக்கு,

அண்ணலவன் கண்ணெதிரே அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான்[81]

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடனெழுலும்.[82]

இப்பாடல்கள் அணி செய்கின்றன. குடிமக்களைத் தழுவிச் செங் கோல் செலுத்த வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

குடிதழீஇக் கோல்ஒச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு[83]

இக்குறளுக்கு எடுத்துக்காட்டாகக் கழறிற்றறிவாரின் செங் கோன்மையைக் கூறுகிறார் சேக்கிழார்.

. . . . . . . . . . . . . . . எல்லா உயிரும் மகிழ்

தருமநிலைமை அறிந்துபுவி தாங்கும் கழறிற்றறிவார்[84]

இங்ஙனம் திருவள்ளுவர் கூறிய செங்கோன்மை இலக்கணங்கள் பெரிய புராணத்தில் பொருந்தி வருகின்றன.

**திருக்குறளில் அமைச்சரியல்பு**

நாடாட்சி அரசனுக்குரியதாயினும் அவ்வாட்சி அறனொடும் திறனொடும் அமையத்துணை நிற்பவர் அமைச்சரேயாவர். ஆதலின் அமைச்சர்க்கு வேண்டிய இன்றியமையாப் பண்பு களையும், செயல் திறன்களையும் வள்ளுவர் அமைச்சியலில் கூறியுள்ளார்.

ஏற்ற பொருள்களை ஏற்றவாறு பொருள் அரசற்கு எடுத்துரைக்கும் தன்மை வாய்ந்தவராய் இருத்தல் வேண்டும். இயற்கையாகிய நுண்ணறிவோடு, நூலறிவும் அமையப் பெற்ற வராய், பேசுந்திறமை பெற்றவராய்த் திகழ்பவரே அமைச்சராதற் குரியவர் என்கிறார் வள்ளுவர்.

**தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்**
**சொல்லலும் வல்ல தமைச்சு[85]**

அரசன் கூறும் பொருளையெல்லாம் ஆமோதிக்காது, அரச னுக்கும் நாட்டிற்கும் உறுதி பயப்பனவற்றைத் தேர்ந்து சொல்லு தல் அமைச்சரின் கடப்பாடு என்கிறார். அரசனது செவ்வியறிந்து தன் கருத்துக்களைச் செம்மையாகக் கூறுதலும், அவ்வாறு தான் அணிந்து கூறிய தெளிபொருளை அரசன் ஏற்றுக் கொள்ளானா யினும், தனது நுண்ணறிவாலும் சொல்வன்மையாலும் உண்மையை எடுத்துரைப்பது அமைச்சனது தன்மையாம் என்கிறார் வள்ளுவர்.

**திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்**
**பொருளும் அதனினூஉங் கில்[86]**

அரசன் நன்மையை நாடிச் செல்லும் பொழுது அவனை மேன் மேலும் அவ்வழியில் செல்லுமாறு ஊக்கப்படுத்தியும், தீயவற்றில் செல்லும்போது அவ்வாறு செல்லாது தடுத்தும் அறங்காப்பவனே அமைச்சன் என அமைச்சரின் இயல்புகளைக் கூறியுள்ளார் திருவள்ளுவர்.

### பெரியபுராணத்தில் அமைச்சரியல்பு

சேக்கிழார் அமைச்சராக விளங்கியமையை மனுநீதிச் சோழன் அவையில் பசுவினால் வந்த வழக்கை முடிவு செய்யும் வகையால் அறிய முடிகிறது. மனுநீதிச்சோழன் அரண்மனை வாயிலில் கட்டிய மணியைப் பசு ஒன்று அடிக்க அதற்குக் காரணம் யாது என வினவுகின்றான் அரசன். அமைச்சன் முன் நிகழ்ந்த செயல் களை விளக்குகின்றான்.

என்இதற் குற்ற தென்பால் அமைச்சரை இகழ்ந்து நோக்க
முன்னுற நிகழ்ந்த எல்லாம் அறிந்துளான் முதிர்ந்த கேள்வித்
தொன்னெறி அமைச்சன் மன்னன் தாளிணை தொழுது சொல்வான்.

முன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை ஒன்பது பாடலால் விளக்கு கின்றார் சேக்கிழார். அந்நிகழ்ச்சிகளை அமைச்சன் மன்னனுக்குக் கூறும்போது ஒரு பாடலால் முழுமையையும் கூறுவதாகப் பாடுகின்றார்.

வளவ நின் புதல்வன் ஆங்கோர் மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில்தேர்த் தானை சூழ அரசுலாந் தெருவில் போங்கால்
இளையஆன் கன்று தேர்க்கால் இடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து விளைத்ததித் தன்மை என்றார்.[87]

இதிலிருந்து அமைச்சனின் சொல்வன்மையைக் கூறுகின்றார் சேக்கிழார். தன் மகன் செய்த செயலுக்குப் பரிகாரம் என்ன வென்று மன்னன் கேட்க,

. . . . . . . . . . . . . . மதி அமைச்சர்
நின்றநெறி உலகின்கண் இதுபோல்முன் நிகழ்ந்ததால்
பொன்றுவித்தல் மரபன்று மறைமொழிந்த அறம்புரிதல்
தொன்றுதொடு நெறியன்றோ[88]

இதற்கு முன் நிகழ்ந்த செயலையும் அதற்குரிய முறையையும் தம் மதி நுட்பத்தால் அரசனுக்கு விளக்குகின்றார் அமைச்சர். இது அமைச்சரின் திறனை வெளிப்படுத்துகின்றது.

அடுத்துக் குலச்சிறையார், சமணம் சார்ந்த பாண்டியனுக்கு மந்திரியாய் இருந்தும்கூட, சமயத்துறையில் அரசியின் முயற்சிக் குத் துணையாய் இருக்கின்றார். மன்னனைத் தீ நெறியினின்று நன்னெறிக்கு மாற்றிய அஞ்சாமைத் தன்மையை அமைச்சரிடம் காண முடிகின்றது.

நன்னெறி திரிந்து மாறி தனைநெறி நடந்த தன்றே
. . . . . . . தென்ன வன்தான் உய்தற்கு வளவர் கோமான்
திருவுயிர்த் தருளுஞ் செல்வப் பாண்டிமா தேவி யாரும்
குரைகழல் அமைச்ச னாராங் குலச்சிறை யாரும் என்னும்
இருவர்தம் பாங்கும் மன்றிச் சைவம்சாங் கெய்தா தாக.[89]

எனச் சேக்கிழார் குலச்சிறையாரின் திறத்தைக் கூறியுள்ளார். இங்ஙனம் சேக்கிழார் அமைச்சரின் இயல்புகளை எடுத்தியம்பியுள்ளார்.

**திருக்குறள் நட்பியல் கோட்பாடு - பெரிய புராண நட்பியல் கோட்பாட்டுடன் பொருந்தி வருதல்**

திருவள்ளுவர் நட்பியல் என்ற இயலை அமைத்து ஐந்து அதிகாரங்களில் நட்பை விளக்கியுள்ளார். உணர்ச்சியொத்த நட்பே நட்பு, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத நட்பே நட்பு,உற்றுழி உதவும் நட்பே நட்பு, தவறு கண்டுழி இடித்துக் கூறும் நட்பே நட்பு என்பன ஆசிரியர் நட்பிற்குக் காணும் இலக்கணங்களாகும். இத்தகையோரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, நட்புக் கொள்வதே உயர்விற்கும் உவகைக்கும் இடமாகும் என்கிறார் வள்ளுவர்.

இவர் கூறும் நட்பின் இலக்கணத்தைத் தம் நூலில் பாத்திரங்களின் நட்பிற்கு இலக்கணமாகக் கொண்டுள்ளார் சேக்கிழார். நட்பு என்பதும் தோழமை என்பதும் ஒரு பொருள் குறிக்கும் சொற்கள். சுந்தரர் வரலாறு முழுதும் நட்பின் இயல்புகளைச் சேக்கிழார் விரித்துப் பேசியுள்ளார். சுந்தரர் சிவபெருமானைத் தோழராகப் பெற்றார்.

**தோழமை ஆக உனக்கு நம்மைத் தந்தனம்**[90]

என்கிறார் சிவபெருமான். சுந்தரர் பரவையாரைக் கண்டு காதலால் துயருற்றுத் தன் தோழராகிய சிவபெருமானிடம்,

**நீரே அல்லால், ஆரென் துயரம் அறிவார்**[91]

எனக் கூறுகின்றார். தோழருக்கு அன்பராகிய சிவபெருமான் அவருடைய துயரை நீக்கப் பரவையாரிடம் தூது சென்று மண முடித்து வைக்கின்றார். அடுத்து சங்கிலியாரைக் கண்டு காதல் கொண்டபோதும்

**திங்கள் வதனம் சங்கிலியைத் தந்தென் வருத்தந்தீரும்**[92]

என வேண்டுகின்றார். இறைவனும் கொண்ட கவலை ஒழி என மணம் முடித்து வைக்கின்றார். தன் தோழராகிய சுந்தரருக்கு

இடுக்கண் வரும்போது தாமே அவ்வின்னலைத் தீர்த்து மகிழச் செய்யும் நட்பின் உயர்வைக் காணமுடிகின்றது.

**உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு**[93]

என்ற திருக்குறள் இலக்கணமாக விளங்குகின்றது இவர்கள் நட்பு.

ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் கொண்ட அன்பின் திறத்தை

**உள்ளநிறை காதலினால் ஒருவரொடு வரிற் கலந்த**
**உண்மை யோடும்**[94]

என்று சேக்கிழார் கூறுகின்றார். இவர்கள் நட்பு வளர்ந்த திறத்தை,

**மருவிய நண்புறு கேண்மை அற்றை நாள்போல் வளர்ந்தோங்க**[95]

என் விளக்கியுள்ளார். இதனைத் திருவள்ளுவர்,

**நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்**
**பின்நீர பேதையார் நட்பு**[96]

என்று கூறியுள்ளார்.

அப்பூதியடிகள் திருநாவுக்கரசரைக் காணாதபோதும் அவர் மீது அன்புகொண்டு வீட்டிலுள்ள பொருள்களுக்கும், தம் மக்களுக்கும், தண்ணீர்ப் பந்தலுக்கும் அவர் பெயரை இட்டார். இதனால் அப்பூதியடிகள் திருநாவுக்கரசர்மீது கொண்ட அன்பின் திறத்தை அறிய முடிகிறது.

**ஆண்டசீர் அரசின் பாதம் அடைந்தவர் அறியாமுன்னே**
**காண்டகு காதல் கூரக் கலந்த அன்பினரால் உள்ளார்**[97]

இவர் அன்பானது,

**புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
**நட்பாம் கிழமை தரும்**[98]

என்ற குறளுக்கேற்ப விளங்குகிறது.

சுந்தரர் ஏயர்கோன் நட்பின் திண்மையை,

**. . . . . . . இடைவிடா நண்பி னாலே**
**பொடுவரும் மகிழ்ச்சி பொங்கத்**[99]

என்கிறார். இதனை,

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை[100]

என்று வள்ளுவர் குறளுக்கு ஒப்பிட்டு நோக்கலாம்.

சுந்தரர் கழறிற்றறிவார் இருவரும் நட்பின் உயர்வுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றனர். இவர்கள் நட்பின் திறத்தைச் சேக்கிழார்,

ஒருவர் ஒருவ ரிற்கலந்து குறைபா டின்றி உயர்காதல்
இருவர் நண்பின[101]

என்கிறார். கலந்தஅன்பினால் இருவரும் கயிலை சேர்ந்தனர். இறைவனிடம் கலக்கும் போதும் இருவருமாகவே சென்று சேர்ந்தனர். இவர்களுடைய நட்பு, திருவள்ளுவர் வகுத்த நட்பின் இலக்கணத்திற்குச் சான்றாக உள்ளது.

இங்ஙனம் திருவள்ளுவர் வகுத்த நட்பின் இலக்கணத்திற்கு சேக்கிழார் இலக்கியம் கண்டுள்ளார்.

**ஏனைய அரசியல் - அங்கவியல்- ஒழிபியல் அதிகாரக் கருத்துக்களும் - பெரிய புராணமும்**

திருவள்ளுவர் கல்வி என்ற அதிகாரத்தில் ஒருவன் ஒரு பிறப்பின்கண் கற்ற கல்வியானது அவனது ஏழு பிறப்பிற்கும் சென்று உதவும் என்கிறார்.

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து[102]

இத்திருக்குறளை விளக்குவாற் போல் சேக்கிழார் சண்டேசுர நாயனார் வரலாற்றில் கூறுகின்றார்.

முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின் வாசம்
சிந்தை மலர உடன்மலரும் செவ்வி உணர்வு சிறந்ததான்[103]

ஒருவனுக்குத் துன்பம் வந்துற்ற போது நகுதலே அத்துயரம் மேன்மேலும் பெருகாமல் இருப்பதற்கு வழி என்கிறார் வள்ளுவர்.

இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்[104]

இதனையே சேக்கிழார், திருநாவுக்கரசர் வரலாற்றில் கூறுகின்றார். சமணர்களால் இடுக்கண் உற்றபோது இறைவனை நினைந்து மகிழ்வுடனே பாடுகின்றார் என்பதைக் கூறுகின்றார்.

திருவள்ளுவர் நாட்டு வளத்தைப் பின்வருமாறு கூறுகின்றார்.

**தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்**
**செல்வரும் சேர்வது நாடு**[105]

திருவள்ளுவர் கூறும் நாட்டு வளத்தின் இலக்கணத்தை, தம் மனத்தில் நிறுத்திப் பெரிய புராணத்து நாட்டுச் சிறப்பில் சேக்கிழார் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

**காடெல்லாம் கழைக்கரும்பு காவெல்லாம் குழைக்கரும்பு**
**மாடெல்லாம் கருங்குவளை வயலெல்லாம் நெடுங்குவளை**
**கோடெல்லாம் மடஅன்னம் குளமெல்லாம் கடல்அன்ன**
**நாடெல்லாம் நீர்நாடு தனைஒவ்வா நலமெல்லாம்**[106]

பெருமையுடையவர்கள் என்றும் தருக்கின்றி இருப்பர். சிறுமை யோர் அஃதில்லாத ஞான்றும் தம்மை வியந்து பேசுவர் என வள்ளுவர் கூறுகிறார்.

**பணியுமாம் என்றும் பெருமை சிறுமை**
**அணியுமாம் தன்னை வியந்து**[107]

இதனை, திருநாவுக்கரசர் ஞானசம்பந்தர் அமர்ந்து வந்த சிவிகை யைத் தாங்கி வருகிறார் என்பதைக் கூறுமுகமாக அமைத்துள்ளார் சேக்கிழார்.

**ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினால் உம்மடிகள்**
**இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யான் என்றார்**[108]

## முடிவுரை

மேற்கூறப்பட்டவற்றினின்று கீழ்க்காணும் முடிவுகள் காணப் பெற்றன.

1. பெரியபுராணத்தில் திருக்குறள் பொருட்பால் தாக்கத்தால் ஏற்பட்ட முழு வரலாறுகள், வரலாற்றுப் பகுதிகள், பாடல் கள், பாடல்வரிகள் எவை எவை என்பது முதற்கண் எடுத்துக்காட்டப் பெற்றது.

2. ஒரு குறள் வழி வாழ்ந்த நாயன்மார்கள் யார் யார் என்பது சுட்டப்பட்டுள்ளது.

3. திருவள்ளுவர் கூறும் அரசனின் இயல்பும், சேக்கிழார் கூறும் அரசனின் இயல்பும் எவை எவையென கூறப்பட்டுள்ளது.

4. திருவள்ளுவர் கூறும் செங்கோன்மை, பெரியபுராண செங் கோன்மையுடன் எவ்வகையில் பொருந்தி வருகிறது என்பது ஆய்ந்து நிறுவப்பெற்றுள்ளது.

5. திருக்குறளின் அமைச்சரியல்பும் - பெரிய புராண அமைச்ச ரியல்பும் எங்ஙனம் கூறப்பட்டுள்ளது என ஆய்ந்து சுட்டப் பெற்றது.

6. திருவள்ளுவர் கூறும் நட்பியல் கோட்பாடும் பெரிய புராண நட்பியல் கோட்பாடும் பொருந்தி வரும் திறம் ஆய்ந்து கூறப்பட்டுள்ளது.

7. திருக்குறள் பொருட்பாலின் ஏனைய அதிகாரங்களால் பெரிய புராணத்தில் விளைந்த தாக்கங்கள் நிறுவப் பெற்றுள்ளன.

இங்ஙனம் இப்பகுதியில் பெரிய புராணத்தில் திருக்குறள் பொருட்பாலினால் விளைந்த தாக்கம் ஆய்ந்து நிறுவப் பெற்றுள்ளது.

## குறிப்பு விளக்கம்

1. திருக்குறள் 754
2. மேற்படி நூல் 986
3. மேற்படி நூல் 987
4. மேற்படி நூல் 785
5. மேற்படி நூல் 381
6. பெரியபுராணம், பா.1000
7. திருக்குறள் 388
8. பெரியபுராணம், பா.1001
9. திருக்குறள் 394

10. பெரியபுராணம், பா.2177
11. திருக்குறள் 398
12. பெரியபுராணம், பா.1223
13. திருக்குறள் 541
14. பெரியபுராணம், பா.121
15. மேற்படி நூல், பா.122
16. திருக்குறள் 636
17. பெரியபுராணம், பா.123
18. திருக்குறள் 731
19. பெரியபுராணம், பா.61
20. மேற்படி நூல், பா.75
21. மேற்படி நூல், பா.84
22. திருக்குறள் 734
23. பெரியபுராணம், பா.84
24. திருக்குறள் 737
25. பெரியபுராணம், பா.55
26. திருக்குறள் 739
27. பெரியபுராணம், பா.76
28. திருக்குறள் 785
29. பெரியபுராணம், பா.1790
30. திருக்குறள் 542
31. மேற்படி நூல் 543
32. மேற்படி நூல் 545
33. மேற்படி நூல் 560
34. பெரியபுராணம், பா.1871
35. திருக்குறள் 955
36. பெரியபுராணம், பா.629

37. திருக்குறள் 979
38. பெரியபுராணம், பா.613
39. திருக்குறள் 384
40. பெரியபுராணம், பா.468, வரி.1-2
41. திருக்குறள் 399
42. பெரியபுராணம், பா.1531, வரி.3-4
43. திருக்குறள் 547
44. பெரியபுராணம், பா.130, வரி.3-4
45. மேற்படி நூல், பா.132, வரி1-2
46. திருக்குறள் 666
47. பெரியபுராணம், பா.1701, வரி.3-4
48. திருக்குறள் 691
49. பெரியபுராணம், பா.2669, வரி.2-4
50. திருக்குறள் 732
51. பெரியபுராணம், பா.83, வரி.2-3
52. திருக்குறள் 742
53. பெரியபுராணம், பா.4248, வரி.2-3
54. திருக்குறள் 792
55. மேற்படி நூல், பா.1457, வரி.5-6
56. திருக்குறள் 789
57. மேற்படி நூல், பா.3565, வரி.1-2
58. திருக்குறள் 825
59. மேற்படி நூல், பா.473, வரி.2
60. திருக்குறள் 933
61. மேற்படி நூல், பா.3630, வரி.2-3
62. திருக்குறள் 969
63. மேற்படி நூல், பா.2515, வரி.3-4

64. திருக்குறள் 978
65. மேற்படி நூல், பா.1803, வரி.3-4
66. மேற்படி நூல், பா.2838, வரி.3-4
67. திருக்குறள் 504
68. மேற்படி நூல் 666
69. மேற்படி நூல் 385
70. மேற்படி நூல் 388
71. பெரியபுராணம், பா.99, வரி.1-2
72. மேற்படி நூல், பா.102, வரி.1
73. மேற்படி நூல், பா.468, வரி.1
74. மேற்படி நூல், பா.3979, வரி.1
75. மேற்படி நூல், பா.3768, வரி.3-4
76. மேற்படி நூல், பா.95, வரி.2-3
77. மேற்படி நூல், பா.1000, வரி.2-4
78. திருக்குறள் 541
79. பெரியபுராணம், பா.121
80. திருக்குறள் 547
81. பெரியபுராணம், பா.130, வரி.3-4
82. மேற்படி நூல், பா.132, வரி.1-2
83. திருக்குறள் 544
84. பெரியபுராணம், பா.3768, வரி.3-4
85. திருக்குறள் 634
86. மேற்படி நூல் 694
86. அ) மேற்படி நூல், ப.115, வரி. 2-4
87. பெரியபுராணம், பா.116
88. மேற்படி நூல், பா.123, வரி.1-4
88. அ. மேற்படி நூல், பா.2504, வரி.4

89. மேற்படி நூல், பா.2506

90. மேற்படி நூல், பா.273, வரி.2

91. மேற்படி நூல், பா.323, வரி.2

92. மேற்படி நூல், பா.3391, வரி.4

93. திருக்குறள் 788

94. பெரியபுராணம், பா.1454, வரி.3-4

95. மேற்படி நூல், பா.1457, வரி.5-6

96. திருக்குறள் 782

97. பெரியபுராணம், பா.1788, வரி.3-4

98. திருக்குறள் 785

99. பெரியபுராணம், பா.3565, வரி.1-2

100. திருக்குறள் 789

101. பெரியபுராணம், பா.4254, வரி.1-2

102. திருக்குறள் 398

103. பெரியபுராணம், பா.1223, வரி.3-4

104. திருக்குறள் 621

105. மேற்படி நூல் 731

106. பெரியபுராணம், பா.67

107. திருக்குறள் 978

108. பெரிய புராணம், பா.2838, வரி.3-4



# 5

# பெரிய புராணத்தில் திருக்குறள் காமத்துப்பாலின் தாக்கம்

*பெரிய புராணத்தில் திருக்குறள் காமத்துப்பாலின் தாக்கம் என்னும் இப்பகுதியில், பெரியபுராணத்தில் திருக்குறள் தாக்கத்தால் ஏற்பட்ட முழுப்பாடல்கள், பாடல்வரிகள், திருக்குறள் கூறும் களவியல் கூறுகள், பெரிய புராணம் கூறும் களவியல் கூறுகள், திருக்குறளில் கற்பியல் வாழ்க்கை, பெரிய புராணத்தில் கற்பியல் வாழ்க்கை என்னும் உள் தலைப்புக்களில் செய்திகள் விரிவாக கூறப்படுகின்றன.*

*பாடல்கள்*

*திருக்குறள் காமத்துப்பாலின் குறள்கள் சில பெரிய புராணப் பாடல்கள் சிலவற்றிற்கு நிலைக்களமாக விளங்குகின்றன. அத்தகைய பாடல்கள் இங்கு ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளன.*

**அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கணங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.[1]**

**கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ**
**பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து**
**விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ**
**அற்புதமோ சிவனருளோ அறியேன் என் றதிசயித்தார்.[2]**

**எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்**
**பழிகாணேன் கண்டவிடத்து[3]**

**வண்டு லாங்குழலார் முன்பு வன்றொண்டர் வந்துகூடக்**
**கண்டபோ துள்ளங் காதல் வெள்ளத்தின் கரைகா ணாது**
**கொண்டநாண் அச்சங் கூர வணங்கஅக் குருசி லாரும்**
**தண்டளிர்ச் செங்கை பற்றிக் கொண்டுமா ளிகையுட் சார்ந்தார்[4]**

**காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்**
**காணேன் தவறல் லவை[5]**

இருவருந் தம்பி ரானார் தாம்இடை யாடிச்செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய இன்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
ஒருவருள் ஒருவர் மேவும் நிலைமையில் உயிர்ஒன்றானார்.[6]

*பாடல்வரிகள்*

திருக்குறள் காமத்துப்பாலின் குறள்கள் சில சொல்லாலும், பொருளாலும் பெரியபுராணத்தில் பொதிந்துள்ளன. அவற்றுள் சில இங்கு ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளன.

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.[7]

விண்கொள்ளாப் பேரொளியான் எதிர்நோக்கும் மெல்லியலுக்(கு)
எண்கொள்ளாக் காதலின்முன் பெய்தாத தொழுவேட்கை
மண்கொள்ளா நாண் மடம்அச் சம்பயிர்ப்பை வலிந்தெழலும்[8]

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள.[9]

புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற்(று) அமர்ந்திருந்தார் காதலினால்[10]

*திருவள்ளுவர் கூறும் களவியல் கூறுகள்*

ஒத்த தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் களவில் கண்டு அதன்வழி, தம் இன்பியல் வாழ்வைத் தொடங்குவதாகக் கூறுவதே களவியல் எனப்படும். இதனைத் திருவள்ளுவர் முதல் ஏழு அதிகாரங்களில் விளக்கியுள்ளார். தலைவன் தலைவியை எதிர்ப்பட்டுக் கண்டபொழுது, தலைமகன் இவள் தெய்வ மகளோ, மயிலோ என்று ஐயுற்று, பின் இவள் பெண்ணே யெனத்தெளிவான். இவ்வாறு நிகழும் ஐயத்தைத் திருவள்ளுவா,

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் னெஞ்சு.[11]

என்ற குறளால் கூறியுள்ளார். இவ்வாறு தலைமகளை ஒரு பெண்ணே என்று துணிந்த தலைமகன், தன் காதலைச் சொற்

களால் கூறாது கண்களின் குறிப்பாலறிவிப்பான். அவ்வாறே தலைமகளும் தனது காதலை வெளிப்படக் கூறாது குறிப்பால் கூறுவாள்.

தலைவன் தன்னை நோக்குங்கால், தான் நிலத்தை நோக்கியும், அவன்தன்னை நோக்காதபோது, தான் அவனை நோக்கி மெல்லிய முறுவல் பூத்தும், தலைவி தன் காதலைக் குறிப்பாக உணர்த்துவாள். காதலர் இருவர் கண் நோக்கும் ஒக்குமாயின், வாய்ச் சொற்களால் யாதும் பயனில்லை என்பது,

> கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனு மில.[12]

என்ற குறளால் அறிய முடிகிறது. இவ்வாறு காதலால் இருவரும் கலந்தபின், காதலியின் குணத்தையும், நலத்தையும் தலைவன் புகழ்ந்து மகிழ்வான், கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும் தலைவியிடம் அமைந்துள்ளன வென்றும், தனக்குக் காதல் நோயைத் தந்த காரிகையே நோய்க்கு மருந்தாகவும் அமைந்தாளென்றும் கூறி மகிழ்வான். மோப்பக் குழையும் மெல்லிய அனிச்சமலரை நோக்கி அம்மலரினும் தலைவி மெல்லியள் என்றும், அப்பொழிலிடைதேனுண்டு திளைத்து நிற்கும் வண்டானது, தன் தலைவியின் கண்ணைக் கருங்குவளை மலரென்றும், கையினைக் காந்தள் மலர் என்றும், கொவ்வைச் செவ்வாயினை ஆம்பல் மலரென்றும் அவள் குழல் மேலும் மலரின் மேலும் சுழல்கின்றது என்றும் கூறுவான். இங்ஙனம் தன் தலைவியின் நலம் புனைந்துரைக்கின்றான் தலைமகன்.

இற்செறிப்பும் காப்பு மிகுதியும் உடைய தலைமகளைக் கனவில் மீண்டும் பெறல் அரிதாகிவிடத், தலைவன் மடலேறுதலே ஏற்றவழி எனக் கூறுவான். இதனை வள்ளுவர்,

> காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
> மடல்அல்ல தில்லை வலி.[13]

என்று கூறியுள்ளார். இந்நிலையில் பிரிவுத்துயர் தலைவியை வருத்த, அதனால் அவள்கண்துயில் மறப்பாள், உண்டியிற் சுருங்குவாள். இதுகண்ட அயலார் அலர் தூற்றுவர். இவ் அலரானது அவர்கள் அன்பு பெருகுவதற்குக் காரணமாகும் என்பதனை,

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமின் நோய்[14]

எனக் கூறியுள்ளார் வள்ளுவர்.

## பெரியபுராணம் கூறும் களவியல் கூறுகள்

சேக்கிழார் சுந்தரர் வரலாற்றில் களவியல் கூறுகளைக் கூறியுள்ளார். திருவாரூர்ப் பெருமானை வழிப்படச் சென்ற சுந்தரரும் பரவையாரும் ஒருவரை யொருவர் முன்னறியாத நிலையில் எதிர்ப்பட்டுக் காதல்கொண்ட நிலையை,

நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்
விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை யவரைக் கண்டார்.[15]

அயல் அறியா மனம் விரும்பப்
பண்டைவிதி கடைகூட்டப் பரவையா ருங்கண்டார்[16]

எனக் கூறுகின்றார் சேக்கிழார். இங்ஙனம் கண்ணுற்ற சுந்தரர், பரவையாரைப் பார்த்து,

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக் கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன் என் றதிசயத்தார்[17]

என்று ஐயுற்ற நிலையைக் கூறுகிறார். இவரைப் போன்றே பரவையாரும்,

முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியால்வனோ
தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்பெற் றுடைய
என்னே என் மனந்திரித்த இவன்யாரோ என நினைந்தார்.[18]

ஐயுற்றார் எனக் கூறுகின்றார். இருவரும் பிரிவாற்றாமையால் வருந்தும் நிலையை,

தந்தி ருக்கன் எரிதழ லிற்பட்டு
வெந்த காமன் வெளியே உருச்செய்து
வந்தென் முன்னின்று வாளி தொடுப்பதே[19]

**மலரமளித் துயிலாற்றாள் வருந்தென்றல் மருங்காற்றாள் மங்குல்**
**வானில் நிலவுமிழும் தழலாற்றாள் நிறையாற்றும் பொறையாற்றா**
**நீர்மை யோடும் கலவமயில் என எழுந்து கருங்குழலின் பரபாற்றாக்**
**கைய ளாகி இலவிதழ்ச் செந்துவர்வாய் நெகிழ்ந்தாற்றாமையின்**
**வறிதே இன்ன சொன்னாள்**[20]

*எனக் கூறுகின்றார்.*

*சுந்தரர் சங்கிலியாரைக் கண்டு காதலுற்றமையை,*

**இன்ன பரிசென் றறிவரிதால் ஈங்கோர் மருங்கு திரைக்குள்ளால்**
**பொன்னும் மணியும் மலர்ந்தஒளி அமுதில் அளாவிப்**
**புதியமதி தன்னுள் நீர்மை யாற்குழைத்துச் சமைத்த மின்னுக்**
**கொடிபோல்வாள் என்னை உள்ளந் திரவித்தாள் யார்கொல்.**[21]

*எனக் கூறுகின்றார் சேக்கிழார். ஆனால் சங்கிலியார், இறைவன் கனவில் தோன்றிக் கூறிய பின்னரே சுந்தரரை அறிவார். எனவே சுந்தரர் சங்கிலியார் மீது கொண்ட காதல் அகக் கைக்கிளை யாகவே கருதத்தக்கது.*

*இங்ஙனம் சேக்கிழார் களவியல் கூறுகளைப் புனைந்துள்ளார்.*

### திருக்குறளில் கற்பியல் வாழ்க்கை

*திருவள்ளுவர் பிரிவாற்றாமை முதல் ஊடலுவகை ஈறாகப் பதினெட்டு அதிகாரங்களில் கற்பியலை விரித்துரைக்கின்றார். தலைவனும் தலைவியும் இல்லறத்தில் ஈடுபடுங்காலத்தில், தலைவன் ஓதற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு முதலிய காரணமாகப் பிரிவான். தலைவி பிரிவால் வருந்தி உடல் நலிந்து மெலிவாள். காதல் நோயைப் பிறரறியாதவாறு மறைப்பினும் அது ஊற்றில் நீர் சுரப்பது போலச் சுரக்கின்றது என்று வருந்துவாள். இந்நோயை மறைத்தலும் இயலாமல், பிறர்க்கு உரைத்தலும் இயலாமல் மனம் தடுமாறுவாள். இக்கடலை நீந்திக் கடப்பதற்கு ஏதமற்ற புணை ஒன்றுமில்லையே என்று ஏங்கி வாடுவாள். இதனை,*

**காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்**
**ஏமப் புணைமன்னும் இல்.**[22]

*என்கிறார்.*

தன் தலைவனைக் காணவிரும்பி வருந்தும் கண்களைப் பார்த்து அன்று அவரை மிக விரைந்து நோக்கிய இக்கண்கள், இன்று தாமே இருந்து அழுகின்றன. காதலர் வாராத பொழுதும் தூங்காது, வந்தபொழுதும் தூங்காது தன் கண்கள் துன்பத்தையே அடைந்தன என்று அரற்றுவாள். தலைவனைப் பிரிந்ததால் பசப்பு வந்துற்றது என வருந்துவாள். மாலைப் பொழுது வந்துற்றபொழுது தலைவி நலிவுற்று மயங்கியிருப்பாள்.

**காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி**
**மாலை மலரும்இந் நோய்.**[23]

என்று பிரிவாற்றாமை பற்றி வந்த காதல் நோயைக் கூறுகின்றார் வள்ளுவர்.

பிரிந்து வந்த தலைவன் தலைவியை அடைந்து நீ எவ்வளவு தான் மறைப்பினும் என் கணகள் காதலை உரைக்கின்றனவே என்று குறிப்புணர்ந்து கூறுவான். அவள்நலம் புனைந்துரைப்பான், பின் காதலர் இருவரும் கலந்து மகிழ்ந்து தாம் பெற்ற இன்பத்தைப் பலவாறு வியந்துரைப்பார்கள். தலைவனைப் பெறாத போது அப்பெறாமைக்கு வருந்தியும், பெற்றபின் மீண்டும் பிரிவனோ என்று வருந்தியும் இருத்தல் தலைவிக்கு உரிய பண்பாதலின் அவ்வழி அவள் தன் நெஞ்சொடு வருந்துவாள்.

இங்ஙனம் வாழ்ந்து வருகின்ற தலைவனுக்கும் தலைவிக்கும ஊடல் உண்டாதல் இயற்கையே. 'ஊடுதல் காமத்திற்கு இன்பம்' என்று திருவள்ளுவரே கூறுகின்றார். ஊடலுக்குரிய காரணம் இன்மையால் திருவள்ளுவர் காட்டும் தலைவன் தலைவியர் தாமே ஒரு காரணத்தைத் தோற்றுவித்துக் கொண்டு ஊடல் கொள்கின் றனர். ஊடலே காதலருக்கு உவகை தருவதாகும் என்பதை

**துனியும் புலவியும் இல்லாயின் காமம்**
**கனியும் கருக்காயும் அற்று**[24]

என்று கூறியுள்ளார் திருவள்ளுவர்.

## பெரியபுராணத்தில் கற்பியல் வாழ்க்கை

கற்பியல் வாழ்க்கையில் நின்ற நாயன்மார்கள் பெரிய புரா ணத்தில் இருபத்தொருவர். இவர்களில் சுந்தரர் களவியல் வழியில்

வந்த கற்புநெறி வாழ்க்கையில் ஈடுபட்டவர். பரவையாரைக் கண்டு காதல் கொண்டு மணந்தார். சுந்தரர் பிரிந்தமையால் பரவையார் பிரிவாற்றாமையால் வருந்தியதை,

**நங்கை பரவை யார்தம்மை நம்பி பிரிந்து போனதற் பின்**
**தங்கு மணிமா ளிகையின்கண் தனிமை கூரத் தளர்வார்க்குக்**
**கங்குல் பகலாய்ப் பகல்கங்கு லாகிக்கழியா நாளெல்லாம்**
**பொங்கு காதல் மீதூரப் புலர்வார்.[25]**

எனக் கூறுகின்றார் சேக்கிழார். சங்கிலியாரை மணந்தார் சுந்தரர் என்பதை அறிந்த பரவையார் கொண்ட துயரை,

**மென்பூஞ் சயனத் திடைத்துயிலும் மேவார்விழித்தும் இனிதமரார்**
**பொன்பூந் தவிசின் மிசை யினிரார் நில்லார் செல்லார் புறம்பொழியார்**
**மன்பூ வாளி மழைகழியார் மறவார் நினையார் வாய்விள்ளார்**
**என்பூ டுருக்கும் புலவியோ பிரிவோ இரண்டின் இடைப்பட்டார்**

என்கிறார். சுந்தரரின் பரிசனங்கள் தம் இல்லத்திற்கு வந்தபோது அவர்களை அனுமதிக்காது அனுப்பினார். சுந்தரர் அவர் ஊடலைப் போக்கக் கற்ற மாந்தர் சிலரை அனுப்பியும் அவர் ஊடல் நீங்கவில்லை. சிவபெருமானையே தம் ஊடலைத் தீர்க்கத் தூதாக அனுப்பினார் சுந்தரர்.

அடுத்து, திருநீலகண்ட நாயனார் பரத்தையார்பால் சென்று மீண்டமையால் அவர் மனைவி ஊடல் கொண்டார் என்பதனைச் சேக்கிழார்,

**ஆனதங் கேள்வர் அங்கோர் பரத்தைபால் அணைந்து நண்ண**
**மானமுன் பொறாது வந்த ஊடலால் மனையில் வாழ்க்கை**
**ஏனைய எல்லாஞ் செய்தே உடனுறை(வு) இசையார் ஆனார்.[27]**

எனக் கூறகின்றார்.

திருக்குறளில் பரத்தமைபற்றி வந்த ஊடல் கூறப்படவில்லை அன்பு மிகுதியால் அது விளைவது.

பரவையார் ஊடல், வேறொரு பெண்ணைத் தம் கணவர் மணந்தமை பற்றியும், திருநீலகண்ட நாயனார் துணைவியார் ஊடல், கணவரின் பரத்தமை பற்றியும் அமைகின்றன. இவ்வாறு

உடல்பற்றிய சித்திரங்களில் கதைப் போக்கிற்கு ஏற்பச் சேக்கிழார் சங்க இலக்கிய நெறி நின்று ஊடலை அமைக்கின்றார். இவ்வேறுபாடு அறியத்தக்கது.

## ஆய்வு முடிவுகள்

இவண் மேற்கொள்ளப் பெற்ற ஆய்வின் பயனாகக் கீழ்க்காணும் முடிவுகள் காணப்பெற்றன.

1. காமத்துப்பால் தாக்கத்தால் பெரியபுராணத்தில் உருவான பாடல்களும், பாடல்வரிகளும் சொல்லாலும் பொருளாலும் ஒப்புமை பெற்று விளங்குதல் ஆய்ந்து நிறுவப்பட்டுள்ளது.
2. திருவள்ளுவர் கூறும் களவியல் கூறுகளும், பெரியபுராணம் கூறும் களவியல் கூறுகளும் எவை எவையென சுட்டப் பட்டுள்ளது.
3. திருக்குறளில் கற்பியல் வாழ்க்கையும், பெரியபுராணத்தில் கற்பியல் வாழ்க்கையும் முறையாக நிறுவப்பெற்றது.

இங்ஙனம் பெரியபுராணத்தில் திருக்குறள் காமத்துப் பாலினால் விளைந்த தாக்கம் காணப்பெற்றது.

## குறிப்பு விளக்கம்

1. திருக்குறள். 1081
2. பெரியபுராணம், பா.286
3. திருக்குறள் 1285
4. பெரியபுராணம், பா.3539
5. திருக்குறள், 1286
6. பெரியபுராணம், பா.3540
7. திருக்குறள், 1082
8. பெரியபுராணம், பா.289, வரி. -4
9. திருக்குறள். 1101
10. பெரியபுராணம், பா.3426, வரி. 3-4
11. திருக்குறள். 1081

12. மேற்படி நூல். 1100
13. மேற்படி நூல். 1131
14. மேற்படி நூல். 1147
15. பெரியபுராணம், பா.285, வரி. 3-4
16. மேற்படி நூல், ப.288, ரி.3-4
17. மேற்படி நூல். 286
18. மேற்படி நூல். 290
19. மேற்படி நூல். 310, வரி.1-3
20. மேற்படி நூல். 320
21. மேற்படி நூல். 3387
22. திருக்குறள் 1164
23. மேற்படி நூல். 1227
24. மேற்படி நூல். 1306
25. பெரியபுராணம், 3472
26. மேற்படி நூல், பா.3474
27. மேற்படி நூல், பா.364, வரி. 1-3



# 6

# பெரிய புராணத்தில் திருக்குறள் கருத்து வளர்ச்சி

பெரியபுராணத்தில் திருக்குறள் கருத்து வளர்ச்சி என்னும் இப்பகுதியில் ஒரு கருத்து காலப்போக்கில் வளர்ந்து அமைதல் சில எடுத்துக்காட்டுக்களால் விளக்கப் பெற்றுள்ளது. திருவள்ளுவரின் சில சிந்தனைகள் பெரியபுராணத்தில் புதிய அழகோடு வளர்ந்த மைந்த திறம் அறவியல் கோட்பாடு, இல்லறக் கோட்பாடு, வீடு பேற்றுக் கோட்பாடு, ஆட்சியாளர் பண்பு வளர்ச்சி, காதல் நெறி வளர்ந்தமைதல் முதலிய கூறுகளில் ஆய்வுக்குட்படுத்தப் பெற்றுள்ளது. அடுத்து, திருவள்ளுவரின் சிந்தனைகள் சில பெரிய புராணத்தில் மாறுபடும் இடங்கள் ஆய்ந்து நிறுவப் பெற்றுள்ளன.

## ஒரு கருத்து காலப்போக்கில் வளர்ந்து அமைதல் சில உதாரணங்கள்

ஒரு காலத்தில் ஒருவராற் சொல்லப்படும் கருத்து காலப் போக்கில் வளர்ந்து அமைதல் இயற்கையே. இங்ஙனமே திரு வள்ளுவர் கூறிய கருத்துக்களில் சில பெரியபுராணத்தில் வளர்ந்து அமைந்துள்ளன.

தலைவனும் தலைவியும் நல்வினைப் பயனால் ஒருவரை யொருவர் எதிர்ப்படுகின்றனர். தலைமகன் தலைவியைக் கண்டு இவள் தெய்வமகளோ, மயிலோ என ஐயுற்றுப்பின் தலைவியின் கால்கள் நிலந்தோய்தலாலும், கண்கள் இமைத்தலாலும், மலர்கள் வாடுதலாலும் மானிடப் பெண்தான் எனத் தெளிவான் என்கிறார் திருவள்ளுவர்.

**அணங்குகொ லாய்மயில் கொல்லோ கணங்குழை**
**மாதர்கொல் மாலுமென் னெஞ்சு**[1]

இங்குத் தலைமகன் மட்டுந்தான் தலைவியைக் கண்டு ஐயுற்றுத் தெளிவதாகக் கூறுகின்றார். தொல்காப்பியரும் தலைவன் தலைவி யைக் கண்டு ஐயுற்றுத் தெளிந்ததையே கூறியுள்ளார்.

**வண்டே இழையே வள்ளி பூவே**
**கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று**
**அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ்**
**நின்றவை களையுங் கருவி என்ப.**[2]

எண்ணப்பட்ட வண்டு முதலாகிய எட்டும் பிறவுமாகிய அவ்விடத்து நிகழாநின்ற ஐயங்களையும் கருவி என்றவாறு என உரையாசிரியர் இதனை விளக்குவர்.

பெரியபுராணத்தில் சுந்தரர் பரவையாரைக் கண்டு காதல் கொண்டதைக் கூறும்போது சேக்கிழார் சுந்தரரும் பரவையாரும் எதிர்ப்பட்டுழிச் சுந்தரர் பரவையாரைக்கண்டு,

**கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ**
**பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல் சுமந்து**
**விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ**
**அற்புதமோ சிவனருளோ அறியேன் என் றதிசயித்தார்.**[3]

என்கின்றார். அதுபோலவே பரவையாரும் சுந்தரரைக் கண்டு.

**முன்னேவேந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியால்வனோ**
**தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ**
**மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்பெற் றுடைய**
**என்னே என் மனந்திரித்த இவன்யாரோ என நினைந்தார்.**[4]

என்கின்றார். இக்கருத்து வளர்ந்தமைந்தமையைக் காணமுடிகிறது. தொல்காப்பியரும் திருவள்ளுவரும் தலைவன் மட்டுமே தலைவி யைக் கண்டு ஐயுற்றுத் தெளிந்தான் என்கின்றனர். சேக்கிழார் தலைவன் ஐயுற்றதோடன்றித் தலைவியும் தலைவனைக் கண்டு ஐயுற்று தெளிந்தாள் எனக் கூறுகின்றார். நளவெண்பா ஆசிரியரும் சேக்கிழார் கருத்தை வழியொற்றி, தமயந்தி உண்மை நளனை அடையாளம் கண்ட திறத்தைக் கூறுகின்றார்.

**கண்ணிமைத்த லானடிகள் காசினியிற் றோய்தலால்**
**வண்ண மலர்மாலை வாடுதலால் - எண்ணி**
**நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்னா**
**ளறந்தா னளன்றன்னை யாங்கு.**[5]

தமயந்தி சுயம்வரத்திற்கு வந்த அரசிளங்குமரர்களுள் நளன் இன்னான் என்று எப்படித் தெரிந்து கொள்வதென்று யோசித்து, கண் இமைத்தலாலும், பாதங்கள் பூமியில் படிதலாலும், மலரா லாகிய மாலை வாடுதலாலும் நளனை அறிந்தாள் என்கிறார்.

திருவள்ளுவர் வாழ்க்கைத் துணை நலத்தில் பிற தெய்வந் தொழாது தன் கணவனையே தெய்வமாகக் கொண்டு தொழும் பெண் பெய்யென்று சொன்னால் மழைபெய்யும் என்கிறார்.

**தெய்வந் தொழஅள் கொழுநன் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யு மழை.[6]**

இங்குக் கணவன் தெய்வ நிலையில் உண்மையையே திருவள்ளுவர் கூறுகிறார். சேக்கிழார், தன் மனைவியையே தெய்வமாகக் கொண்டு தொழும் கணவனைப் படைத்துக் காட்டுகின்றார். பரமதத்தன் தன் மனைவி புனிதவதியாரிடம் தெய்வத் தன்மை இருப்பதைக் கண்டு அவளை விட்டு நீங்கி மறுமணம் புரிந்து வாழ்ந்தான். உறவினர்கள் புனிதவதியாரைக் கணவனிடம் கொண்டு சென்றனர். அவன் தன் மனைவி மக்களுடன் புனிதவதி யாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். இவர் தெய்வம் என்றறிந்தே நீங்கினேன் என்று உறவினரிடம் கூறினான்.

**மனைவியார் அடியில் தாழ்ந்தே**
**யான்உம தருளால் வாழ்வேன் இவ்விளங் குழவி தானும்**
**பான்மையால் உமது நாமம் என்று முன் பணிந்து வீழந்தான்[7]**

எனத் தன் மனைவியைத் தெய்வமாகக் கொண்டு வணங்கியமை யைக் கூறுகின்றார். பெண்மை தன் திறத்தால் கணவனே தொழு தேத்தும் நிலைக்கு உயர முடியும் என்ற கருத்து வளர்ச்சி இங்கே காணப்படுகிறது.

திருவள்ளுவர் பிறப்பினால் எல்லாவுயிர்களும் ஒருநிகரன என்கிறார்.

**பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்.[8]**

பெரியபுராணத்தில் இக்கருத்து சமபந்தி போசனம், நட்பு, மணம் புரிதல் ஆகியவற்றில் வளர்ந்து நிற்கின்றது.

அந்தணர் குலச் சம்பந்தருடன் கீழ்ச்சாதி நீலகண்ட யாழ்ப் பாணர் குடும்பத்துடன் இடம் பெற்றிருந்தார். சிவவேதியர் மரபில் வந்த சுந்தரர் நரசிங்க முனையரையர் என்ற குறுநில மன்னரின் அரண்மனையில் மகன்மை பெற்று வளர்க்கப்பட்டார். கணிகையர் குலத்தில் பிறந்த பரவையை மணந்து அவர் வீட்டில் வாழ்க்கை நடத்தினார். சேரமான் பெருமாளும், சுந்தரரும் உடன் உண்ணப் பரவையார் உணவு படைத்தார். இங்ஙனம் திருவள்ளுவர் கூறிய கருத்து வளர்ந்து வாழ்வாக மலர்ந்தமையைச் சேக்கிழார் பதிவு செய்துள்ளார்.

**திருவள்ளுவரின் சில சிந்தனைகள் பெரியபுராணத்தில் புதிய அழகோடு வளர்ந்தமைந்த திறம்**

திருவள்ளுவர் விழைந்த சிந்தனைகள் சில பெரிய புராணத்தில் புதிய பொலிவுடன் வளர்ந்தமைந்துள்ளன.

**அறவியல் கோட்பாடு**

திருவள்ளுவர் அறத்தினைத் தத்தமக்கு இயன்ற போதெல் லாம் செய்ய வேண்டும் என்கிறார்.

**ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லுவாய் எல்லாம் செயல்**[9]

திருவள்ளுவரின் இக்கருத்து, பெரியபுராணத்தில் நாயன்மார் களின் வாழ்க்கையில் உயிர்ப்பாக விளங்குகின்றது. எல்லா நாயன் மார்களுமே தங்களால் இயன்ற போதெல்லாம் அறம் செய்து வாழ்வதையே நெறியாகக் கொண்டிருந்தமையைக் காணமுடி கிறது. திருவள்ளுவர் தம்மிடம் உள்ள பொருள்களை அறம் செய்வ தற்குப் பயன்படுத்த வேண்டும் என்கின்றார். நாயன்மார்கள் தம்மு டைய பொருள்களால் மட்டும் அறம் செய்யவில்லை. இயற்பகை நாயனார் தன் மனைவியைச் சிவனடியார் ஒருவர் கேட்கக் கொடுத் தார். மானக்கஞ்சாற நாயனார் தம்மகளின் திருமணத்தின் போது அடியவர் ஒருவர் வேண்ட ஒப்பனை செய்யப்பட்ட நீண்ட அவளு டைய கூந்தலையே கொடுத்தார். இவற்றையெல்லாம் நோக்கும் போது திருவள்ளுவர் கூறிய அறக்கூறுகளின் வளர்ந்தமைந்த சித்திரங்களாகவே இவை அமைந்துள்ளமை புலனாகிறது.

## இல்லறக் கோட்பாடு

திருவள்ளுவர் இல்வாழ்க்கைக்குக் கூறிய இலக்கணங்களை யெல்லாம் தங்கள் வாழ்க்கையில் கடைப் பிடித்து நெறிநின்ற வர்கள் பெரியபுராணத்தில் இல்லற நெறியில் நின்ற நாயன் மார்கள்,

**அன்பு மறனு டைத்தாயி னில்வாழ்க்கைப்**
**பண்பு பயனு மது.**[10]

என்ற குறள் கருத்துக்கேற்ப வாழ்ந்து, திருவள்ளுவர் விழைந்த பயனை அடைந்தவர்கள் நாயன்மார்களே. இவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் திருநீலகண்ட நாயனார், இளையான்குடிமாற நாய னார், சிறுத்தொண்ட நாயனார் முதலானவர்கள். திருவள்ளுவரின்

**தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்.**[11]

என்ற கருத்துக்கு உயிர்ப்பாக விளங்கியவர் மங்கையர்க்கரசியார். வாழ்க்கைத் துணையானவள் தன்னையும் காத்து, கொண்ட வனையும் பேணிய புகழோடு வாழ வேண்டும் என்ற திருவள்ளு வரின் வாக்கின் மேற்பட்டுத் தன் கணவனை மட்டுமல்லாமல் தன் நாட்டு மக்களையும் நல்ல நெறியில் வாழவைத்தவர் இவர்.

## வீடுபேற்றுக் கோட்பாடு

திருவள்ளுவர் பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார் என்கிறார். இது வீட்டு நிலையில் பிறவியறும் என்பதைக் குறிக்கின்றார்.

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்.**[12]

என்று கூறி இல்வாழ்க்கையைச் சிறப்பித்தார். எனினும் பற்றின் மையே வீட்டைத் தரும் எனக் கூறுகின்றார். உலகில் சிறந்த முறையில் இல்லறம் நடத்துவோன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுமாயினும்,

**யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்.**[13]

எனப் பற்றற்றவன் அதற்கும் மேலான நிலையை அடைதலைக் கூறியுள்ளார். எனவே துறவே உயிர்க்கு வீட்டைத் தருவது என்ற கருத்துடையவராய்த் திகழ்கின்றார் திருவள்ளுவர்.

> பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு.[14]

சேக்கிழார் அறம் பொருள் இன்பம் என்ற மூன்றும் முடிவான பொருள்கள் அல்ல. வீடுபேறு ஒன்றே முடிவான பொருள் என்கிறார். நூல் முழுமையும் இதைக் கூற எழுந்ததே. ஒவ்வொரு நாயன்மார் வரலாற்றிலும் இதனைக் காணமுடிகிறது. ஆனால் சேக்கிழார் திருவள்ளுவரைப் போல் துறவே வீடு பேற்றிற்கு வழி எனக் கூறவில்லை அவரவர்கள் நிலைக்குத் தக்கவாறு அறங்களைப் பேணி இறைவன் திருவடிகளை அடைவதே வீடுபேறு என்பதை நாயன்மார்களின் வரலாற்றால் அறிவுறுத்தியுள்ளார்.

> கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
> ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
> கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
> வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.[15]

என்று திருக்கூட்டத்தைச் சிறப்பித்து ஆசிரியர் கூறுவது வீட்டிலும் மேலானதாக அன்பையும் வழிபாட்டையும் சிறப்பித்தலாக அமைகிறது.

### ஆட்சியாளர் பண்பு வளர்ச்சி

தன் கீழ் வாழும் குடிகள் குற்றம் செய்தால் நடுநிலைகளோடு முறை வழங்கும் மன்னவன் குடிமக்களால் இறைவனாகப் போற்றப் படுவான் என்கிறார் திருவள்ளுவர்.

> முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்.[16]

சேக்கிழார் திருவள்ளுவர் காண விழைந்த அரசனைத் தம் நூலில் படைத்துக் காட்டுகின்றார்.

> மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
> தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்

ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீரத் தறங்காப்பான் அல்லனோ.[17]

என முறைசெய்த மனுநீதியைக் கூறுகின்றார் சேக்கிழார்.

**காதல்நெறி வளர்ந்தமைதல்**

திருவள்ளுவர் தலைவன் தலைவியைக்கண்டு ஐயுற்றுத் தெளிவான் என்பதைக் கூறுகின்றார். சேக்கிழார் தலைவியும் தலைவனைக் கண்டு ஐயுற்றுத் தெளிந்ததைக் கூறுகின்றார். திருவள்ளுவர் களவு வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் புணர்ந்து மகிழ்ந்ததைக் கூறுகின்றார். ஆனால் பெரியபுராணத்து காதல் வாழ்வில் திருமணத்துக்கு முற்பட்ட உடல் உறவைக் காண முடியவில்லை. இதனைச் சேக்கிழார் ஞானசம்பந்தர் திருமருகல் சென்றபோது தன் காதலனுடன் உடன்போக்கு வந்த வணிகப் பெண் தன் காதலன் அரவு தீண்டி இறந்தமைகண்டு,

வாளரவு தீண்டவுந்தான் தீண்ட இல்லாள்

எனப் புலம்புவதின் மூலம் அறிவுறுத்துகின்றார். திருவள்ளுவர் காதல் வாழ்க்கையினின்று கற்பு வாழ்க்கைக்கு வளர்ந்த நிலையைக் கூறுகின்றார். ஆனால், பெரியபுராணம் காதல் வாழ்க்கையையும் கூறி, தாய் தந்தை மணம் முடித்த அளவின் வழிவாராக் கற்பு வாழ்க்கை நெறியையும் கூறுகிறது.

**திருவள்ளுவரின் சிந்தனைகள் சில பெரியபுராணத்தில் மாறுபடும் இடங்கள்**

திருவள்ளுவரின் சிந்தனைகள் சில பெரியபுராணத்தில் மாறுபட்டுத் திகழ்கின்றது.

திருவள்ளுவர் இன்பத்துப்பாலில் ஒருவனும் ஒருத்தியும் வாழும் நெறியை உயர்த்தியுள்ளார். பெரியபுராணத்தில் சுந்தரர் பரவையார் சங்கிலியார், இருவரையும் மணந்து கொள்கின்றார்.

திருக்குறளில் பரத்தைமை இல்லை. பெரியபுராணத்தில் திருநீலகண்டர் பரத்தைமை நாடிச் சென்றமையைக் காண முடிகின்றது.

திருவள்ளுவர் கொல்லாமையை வலியுறுத்துகிறார். பெரியபுராணத்தில் சிறுத்தொண்டர் தன் பிள்ளையையே கறி சமைத்த நிலை கூறப்பட்டுள்ளது.

திருவள்ளுவர் சூதாடுதலைத் தீமையெனச் சாடுகின்றார். பெரியபுராணத்தில் மூர்க்கநாயனார் சூதாடி அதிலிருந்து வந்த பொருளை அடியார்களுக்கு அமுது செய்தார் என்பது கூறப்பட்டுள்ளது.

இவ்வாறான முரண்பாடுகள் வரலாற்றுப் போக்கில் அமைந்தவை. இயன்றவரை வள்ளுவரின் கோட்பாடுகளை ஏற்றுத் தம் நூலைச் சேக்கிழார் நடத்தியுள்ளமை நன்கு புலனாகின்றது.

**ஆய்வு முடிவுகள்**

மேற்கொள்ளப் பெற்ற ஆய்வின் பயனாகக் கீழ்க்காணும் ஆய்வு முடிவுகள் காணப்பெற்றன.

1. திருவள்ளுவர் கூறிய கருத்துக்கள் சில காலப்போக்கில் வளர்ந்து பெரியபுராணத்தில் அமைந்த திறம் ஆய்ந்து சுட்டப் பட்டுள்ளது.
2. திருவள்ளுவரின் சில சிந்தனைகள் பெரியபுராணத்தில் வளர்ந்தமைந்த திறம் அறவியல் கோட்பாடு, இல்லறக் கோட்பாடு, வீடுபேற்றுக் கோட்பாடு, ஆட்சியாளர் பண்பு வளர்ச்சி, காதல் நெறி வளர்ந்தமைதல் என்ற உட்தலைப்பு களில் ஆய்ந்து நிறுவப்பட்டுள்ளன.
3. திருவள்ளுவரின் சில சிந்தனைகள் பெரியபுராணத்தில் மாறுபட்டுள்ளமை ஆய்ந்து சுட்டப்பட்டுள்ளது.

இங்ஙனம், பெரியபுராணத்தில் திருக்குறள் கருத்துவளர்ச்சி ஆய்ந்து நிறுவப்பெற்றுள்ளது.

**குறிப்பு விளக்கம்**

1. திருக்குறள். 1081
2. தொல்காப்பியம், பொருள், நூற்.95
3. பெரியபுராணம், பா.286

4. மேற்படி நூல், பா.290

5. நளவெண்பா, காண். 1, பா.152

6. திருக்குறள். 55

7. பெரியபுராணம், பா.1766, வரி. 2-4

8. திருக்குறள். 972

9. மேற்படி நூல். 33

10. மேற்படி நூல். 45

11. மேற்படி நூல். 56

12. மேற்படி நூல். 50

13. மேற்படி நூல். 346

14. மேற்படி நூல். 350

15. பெரியபுராணம், பா.143

16. திருக்குறள். 388

17. பெரியபுராணம், பா. 121

18. பெரியபுராணம், பா.2377, வ.1



# முடிவுரை

இதுகாறும் கூறப்பட்டுள்ள தொகுப்புரைவழி பெறப்படும் முடிவுகளாவன-

சேக்கிழார் தம் நூலுக்கு இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பதே, பெரியபுராணம் என்பது சிறப்பு நோக்கி வழங்கி வரும் பெயரென்பதும், சேக்கிழார் வாழ்ந்த காலம் இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆட்சியின் பிற்பகுதியும், மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியின் முற்பகுதியுமே என்பதும், பெரியபுராணத்தை காப்பிய ஒருமைப்பாட்டுடன் சேக்கிழார் அமைத்துள்ளார் என்பதும், நகரப்படலத்தில் மனுநீதிச்சோழன் வரலாறு கூறப்பட்டதன் உண்மை நோக்கமும், சேக்கிழார் காண விரும்பிய சமத்துவச் சமுதாய அமைப்பும், மக்கள் போற்றி ஒழுக விரும்பிய பண்பாடுகளும், சேக்கிழாரின் புறச்சமயங்கள் பற்றிய கருத்துக்களும் ஆய்ந்து தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

திருவள்ளுவர் தம் நூலுக்கு வைத்த பெயர் முப்பால் என்பதே, திருக்குறள் என்ற பெயர் வழக்குப் பிற்காலத்தில்தான் வழங்கியுள்ளது. திருவள்ளுவர் காலம் கி.மு. முதல் நூற்றாண்டுக்கும் இரண்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது என்பதும், சமூக இலக்கியங்களாகிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டிலிருந்து திருக்குறள் வேறுபட்டு நிற்கும் திறமும், கடைச்சங்க இலக்கியங்கள், கடைச்சங்க காலத்திற்குப் பிற்பட்ட காப்பியங்கள், சமயநூல்கள், அறநூல்கள் முதலிய இலக்கிய வடிவங்களில் திருக்குறளின் அடிச்சுவடுகள் பொதிந்துள்ளமையும் ஆராயப் பெற்றுள்ளன.

திருக்குறள் அறத்துப்பால் தாக்கத்தால் பெரியபுராணத்தில் ஏற்பட்ட முழு வரலாறுகள், வரலாற்றுப் பகுதிகள், பாடல்கள், பாடல்வரிகள், திருவள்ளுவரின் கடவுட் கோட்பாடும் பெரிய புராணக் கடவுட் கோட்பாடும் தொடர்புடையனவே என்பதும், திருவள்ளுவர் கூறும் அடியவர் இலக்கணம் பெரியபுராண அடியவர் இலக்கணங்களோடு பொருந்தி வரும் திறமும்,

திருக்குறள் கூறும் இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட் பேறு முதலிய நெறிகளில் வாழ்ந்த பெரியபுராணப் பாத்திரங்கள் எவை எவையென்பதும் ஆய்ந்து நிறுவப்பட்டுள்ளன.

திருக்குறள் பொருட்பால் தாக்கத்தால் பெரிய புராணத்தில் ஏற்பட்ட முழு வரலாறுகள், வரலாற்றுப் பகுதிகள், பாடல்கள், பாடல்வரிகள், சேக்கிழார் கூறும் இறைமாட்சியும், திருவள்ளுவர் கூறும் இறைமாட்சியும், திருக்குறள் கூறும் செங்கோன்மையோடு பெரியபுராணச் செங்கோன்மை பொருந்தி வருதல், திருக்குறள் நட்பியல் கோட்பாடு பெரியபுராண நட்பியல் கோட்பாட்டோடு பொருந்தி வருதல் முதலியன ஆய்ந்து கூறப்பட்டுள்ளது.

திருக்குறள் காமத்துப்பால் தாக்கத்தால் ஏற்பட்ட பாடல்கள், பாடல்வரிகள், திருக்குறள் கூறும் களவியல் கூறுகள், பெரியபுராணம் கூறும்களவியல் கூறுகள், திருக்குறளில் கற்பியல் வாழ்க்கை, பெரியபுராணக் கற்பியல் வாழ்க்கை என்பன ஆய்ந்து காட்டப்பட்டுள்ளன.

திருவள்ளுவரின் கருத்துக்கள் சில பெரியபுராணத்தில் வளர்ந்தமைந்த திறமும், திருவள்ளுவரின் சில சிந்தனைகள் பெரியபுராணத்தில் மாறுபட்டுள்ளமையும் ஆய்ந்து நிறுவப் பட்டுள்ளன.



# துணைநூற் பட்டியல்


அரவிந்தன். மு.வை., திருக்குறளும் சங்க இலக்கியமும், முத்துப் பதிப்பகம், 53, பாண்டி ரோடு, வளவனூர், முதல் பதிப்பு, 1970.

அருணாசலம். மு., தமிழ் இலக்கிய வரலாறு பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் பாகம், பாரி நிலையம், 59 பிராட்வே, சென்னை, முதல் பதிப்பு, 1973.

இராசமாணிக்கனார். மா., திருவள்ளுவர் காலம் யாது, செல்வி பதிப்பகம், காரைக்குடி, முதல் பதிப்பு, 1954.

இராசமாணிக்கனார். மா., பெரிய புராண ஆராய்ச்சி, பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1978.

இலட்சுமணசாமி. கொ., சிலப்பதிகாரம் - மணிமேகலை காப்பிய மரபு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியீடு, முதல் பதிப்பு, 1977.

இளம்பூரணர்., தொல்காப்பியம், பொருளதிகாரம், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, ஏழாம் பதிப்பு, 1977.

உமாபதி சிவாசாரியார்., சேக்கிழார் சுவாமிகள் புராணம், திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க சுவாமி தேவஸ்தான வெளியீடு, முதல் பதிப்பு, 1967.

கச்சியப்பச் சிவாச்சாரியார், கந்தபுராணம், காசிமடத்து வெளியீடு, திருப்பனந்தாள், முதல் பதிப்பு, 1953.

கந்தசாமி. சோ.ந., காப்பியக் குறிக்கோள், அபிராமி பதிப்பகம், அண்ணாமலைநகர், சிதம்பரம், முதல் பதிப்பு, 1981.

காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமயம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், திருக்குறள் ஆய்வக வெளியீடு, முதல் பதிப்பு, 1979.

காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமுதாயம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், திருக்குறள் ஆய்வக வெளியீடு, முதல் பதிப்பு, 1975.

குமாரசாமி ஐயர். வீ., திருவள்ளுவரும் சிவப்பிரகாசரும், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1956.

குன்றக்குடி அடிகளார்., திருவள்ளுவர் காட்டும் அரசியல், கலைவாணி புத்தகாலயம், தியாகராய நகர், சென்னை-17, முதல் பதிப்பு, 1972.

குன்றக்குடி அடிகளார்., திருவள்ளுவர் சொர்ணம்மாள் நினைவுச் சொற்பொழிவுகள், அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1981.

சண்முகம் பிள்ளை. மு., திருக்குறள் அமைப்பும் முறையும், சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1972.

சாமிநாத ஐயர். உ.வே., திருவள்ளுவரும் திருக்குறளும், கார்டியன் அச்சுக்கூடப் பதிப்பு, சென்னை, முதல் பதிப்பு, 1936.

சிவபாத சுந்தரம். சோ., சேக்கிழார் அடிச்சுவட்டில், வானதி பதிப்பகம், தியாகராய நகர். சென்னை-17, முதல் பதிப்பு, 1978.

சுந்தரமூர்த்தி. கு., திருக்குறள் உரைத்திறன், உலகத் தமிழ் மாநாட்டின் நினைவு வெளியீடு, முதல் பதிப்பு, 1981.

சுப்பிரமணியப்பிள்ளை. கா., இலக்கிய வரலாறு, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், பவழக்காரத் தெரு, சென்னை, ஆறாம் பதிப்பு, 1970.

சுப்பிரமணிய பிள்ளை. கா., சேக்கிழார் அடிகள் வரலாறும் பெரிய புராண ஆராய்ச்சியும், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, இரண்டாம் பதிப்பு, 1975.

சுப்பிரமணிய முதலியார். சி.கே., சேக்கிழார், சாது அச்சுக் கூடம், இராயப்பேட்டை, சென்னை, முதல் பதிப்பு, 1933.

சுப்பிரமணிய முதலியார். சி.கே., திருத்தொண்டர் புராணப் பேருரை (ஏழு தொகுதிகள்) கோவைத் தமிழ்ச் சங்கம், கோயம்புத்தூர், முதல் பதிப்பு, 1935-1954.

சேதுப்பிள்ளை. ஏ.பி., திருவள்ளுவர் நூல் நயம், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, இரண்டாம் பதிப்பு, 1927.

சோமசுந்தர சேக்கிழார் தேசிகர், சைவசிகாமணிகள் இருவர், பி.என்.பிரஸ், சென்னை, முதல் பதிப்பு, 1930.

சோமசுந்தரம், திருக்குறள் ஆராய்ச்சி, 59, பிராட்வே, சென்னை, முதல் பதிப்பு, 1959.

ஞானசம்பந்தன் அ.ச., தேசிய இலக்கியம், மணிவாசகர் நூலகம், 12, பி, மேலசன்னதி, சிதம்பரம், இரண்டாம் பதிப்பு, 1978.

தண்டபாணி தேசிகர். ச., காப்பியங்களில் திருக்குறள், அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1972.

தண்டபாணி தேசிகர். திருக்குறள் அழகும் அமைப்பும், பாரி நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1983.

தண்டபாணி தேசிகர். திருக்குறள் உரைக்களஞ்சியம், மதுரை காமராசர் பல்கலைக்கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1981.

திருநாவுக்கரசு. மறை, பெரியபுராண ஆய்வுரைகள் (நான்கு தொகுதிகள்), மறைமலையடிகள் பதிப்பகம், பி.96, சவகர் நகர், அகரம், பெரம்பூர், சென்னை-82, முதல் பதிப்பு, 1973-78.

தில்லைநாதன். சி., வள்ளுவன் முதல் பாரதிதாசன் வரை, தமிழ்ப் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5, மூன்றாம் பதிப்பு, 1976.

மகாதேவ முதலியார். வா., பெரியபுராண ஆராய்ச்சி, கலா நிலையம் பிரஸ், சென்னை, முதல் பதிப்பு, 1924.

மாணிக்கம், வ.சுப., வள்ளுவம், பாரிநிலையம், 184, பிராட்வே, சென்னை-1. இரண்டாம் பதிப்பு, 1955.

முருகரத்தினம். தி., குறள் கண்ட பொருள் வாழ்வு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், திருக்குறள் ஆய்வக வெளியீடு, முதல் பதிப்பு, 1974.

வரதராசனார். மு., திருவள்ளுவர் (அல்லது) வாழ்க்கை விளக்கம், பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை, நான்காம் பதிப்பு, 1956.

வன்மீகநாதன். கோ., திருக்குறள் ஒரு பொதுமறை, திருப் பனந்தாள் காசிமடத்து வெளியீடு, முதல் பதிப்பு, 1980.

விசுவநாதன். கி.ஆ.பெ., திருக்குறள் கட்டுரைகள், பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1961.

வெள்ளைவாரனார். க., பன்னிருதிருமுறை வரலாறு இரண்டாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1969.

ஜகந்நாதன். கி.வா., திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, சுவாமி விவேகானந்தர் நூற்றாண்டு விழா வெளியீடு, ஸ்ரீராம கிருஷ்ண மிஷன் வித்யாலயம், கோவை, முதல் பதிப்பு, 1963.

கலித்தொகை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 1981.

குறிஞ்சிப்பாட்டு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 1981.

குறுந்தொகை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 1981.

தமிழ் இலக்கியக் கொள்கை (தொகுதி ஒன்று), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், முதல் பதிப்பு, 1975.

திருக்குறள் சிந்தனைகள், அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1979.

திருமுறைக் கருத்தரங்க ஆய்வுரைகள் (தொகுதி ஒன்று), திருவாவடுதுறை ஆதின வெளியீடு, முதல் பதிப்பு, 1973.

நற்றிணை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 1981.

பதிற்றுப்பத்து, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 1981.

பரிபாடல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 1981.

புறநானூறு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-98, இரண்டாம் பதிப்பு, 1981.

பெரியபுராண சொற்பொழிவுகள், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1970.

பெரிய புராணம், சைவ சித்தாந்த மகா சமாஜம், 40, முத்தையா முதலி தெரு, வேளாள தேனாம்பேட்டை, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1950.

## பெரிய புராண நாயன்மார்கள் குலமரபுப் பட்டியல்

***அரச மரபினர் - 12 பேர்***

| | |
|---|---|
| 1. மெய்ப்பொருள் நாயனார் | 2. பெருமிழலைக் குறும்பர் |
| 3. சேரமான் பெருமாள் | 4. கூற்றுவ நாயனார் |
| 5. புகழ்ச்சோழ நாயனார் | 6. நரசிங்க முனை அரையர் |
| 7. ஐயடிகள் காடவர்கோன் | 8. நின்றசீர் நெடுமாறர் |
| 9. கழற்சிங்க நாயனார் | 10. இடங்கழி நாயனார் |
| 11. மங்கையர்க்கரசியார் | 12. கோச்செங்கட்சோழர் |

***அந்தணர் மரபினர் - 12 பேர்***

| | |
|---|---|
| 1. குங்குலியக் கலயர் | 2. முருக நாயனார் |
| 3. உருத்திர பசுபதியார் | 4. சண்டீசர் |
| 5. அப்பூதியடிகள் | 6. திருநீலநக்கர் |
| 7. நமிநந்தி அடிகள் | 8. சம்பந்தர் |
| 9. சோமாசிமாற நாயனார் | 10. சிறப்புலி நாயனார் |
| 11. கணநாதர் | 12. பூசலார் நாயனார் |

வணிகர் மரபினர் - 6 பேர்

1. இயற்பகையார் 2. அமர்நீதி நாயனார்
3. மூர்த்தி நாயனார் 4. காரைக்கால் அம்மையார்
5. கலிக்கம்ப நாயனார் 6. கலிய நாயனார்

வேளாளர் மரபினர் - 13 பேர்

1. இளையான்குடி மாறர் 2. விறல் மிண்டல்
3. மானக்கஞ்சாறர் 4. அரிவாட்டாயர்
5. அப்பர் 6. ஏயர்கோன் கலிக்காமர்
7. மூர்க்க நாயனார் 8. சத்தி நாயனார்
9. வாயிலார் நாயனார் 10. முனையடுவார் நாயனார்
11. செருத்துணை நாயனார் 12. சாக்கிய நாயனார்
13. கோட்புலி நாயனார்

மரபுக்கு ஒருவர் - 10 பேர்

1. திருநீலகண்டர் - வேட்கோவர்
2. கண்ணப்பர் - வேடர்
3. ஆனாயர் - இடையர்
4. திருக்குறிப்புத் தொண்டர் - வண்ணார்
5. ஆதிபத்தர் - பரதவர்
6. நேச நாயனார் - சாலியர்
7. திருநீலகண்ட யாழ்ப்பானர் - பாணர்
8. நந்தனார் - பறையர்
9. ஏனாதி நாயனார் - ஈழவர்குலம்
10. சிவத்தொண்டர் - மாமாத்திரர்

மரபு கூறப்படாதவர் - 6 பேர்

1. எறிபத்தர் 2. குலச்சிறையார்
3. திருமூலர் 4. தண்டியடிகள்
5. கணம் புல்ல நாயனார் 6. காரியார்

ஆதிசைவர் - 4 பேர்

1. சுந்தரர் 2. சடையனார்
3. இசைஞானியார் 4. புகழ்த்துணை நாயனார்

## பெரிய புராணத்தில் திருக்குறள் தாக்கத்தால் உருவான பாடல்கள், பாடல் வரிகள் அகரவரிசைப் பட்டியல்

### பாடல்கள்

அகிலலோகமும்
அங்கதுகேட்டு
அணைவுறவந்
அந்நாள்சிலநாள்
அந்நிலைசாக்
அரசுகொள்கடன்
அருவிலையில்
அருள்செய்
அவர்முன்பனி
ஆங்குவளர்எயிலி
ஆர்வம்மிக்கெழு
ஆளும்அங்கணரு
இங்கிதன்நாமங்
இருவரும்தம்பிரா
இவர்நிலைஇது
ஈசருக்கேஅன்
உள்ளநிறைகலை
ஊன்அமைந்த
என்மகன்செய
என்று கணவர்
ஏதமே விளைந்த
ஐந்துவருடம்
கறியமுதங்குத
கற்பகத்தின்பூங்
கேடும் ஆக்கமும்
செப்பலுற்றபொரு
நெய்யுள் நிகழ்
செய்வினையுஞ்
செல்வமேவிய
தலைப்பட்டார்
தாழுஞ்செய
திங்கள் சூடியமுடிச்
தீங்குசொற்றதி
நில்லாத உலகியல்
நீராருஞ் சடைமு
பன்முறை உயிர்
பாவக்கொடுவி
பொற்சிலை வளைய
போர்வலைச்சிலை
மகிழ்ந்ததன்
மண்ணின்மிசை
மதி அமைச்சர்
மற்றவனுங்கொற்ற
மற்றைமறை
மாசின்மனத்த
மாதர்நாறு
மாநிலங்காவலரை
முன்னவரை
மெய்த்தவரைக்
மெய்ம்மேற்கள்
மெய்யெலாம் நீறு
வடிவுதாங்கானா
வண்டுலாங்குழ
வீதிகள் விழவின்
வெண்ணீறுநெ
வைதெரித்தகற்றி
வையம்புரக்கு

## பாடல்வரிகள்

| | |
|---|---|
| அண்ணல்வன் | நம்பியாரு |
| அந்நிலையே | நற்றமிழ்மா |
| அரசியல்நெறி | நன்மைநீ |
| அருளுபெருஞ் | தன்மையல் |
| அருளுவான் | நாயகன் சேவ |
| அளவில்தொல் | நிலவிய |
| அன்புறு | நீதிமனை |
| ஆண்டசீர் | பறையறைந்த |
| இடைவிட | பற்றைளரி |
| உட்டருகளி | பாடும்அம் |
| உண்ணனைந் | பாராதரி |
| உருகிமனங் | புண்டரிகத் |
| உலகினில் | பைவளர்வா |
| ஒப்பரிய | பொங்குகா |
| ஓதுகாதல் | பொய்கடிந் |
| கரையில்கவ | பொருளாரு |
| கனியிருக்க | பொருளல் |
| காதல் அடி | பொருளாய |
| கானகமு | மழைவளர் |
| குறைனில | மருவஇனி |
| கையினிற் | மருளிய |
| சைவமெய்ந் | மனம்பொ |
| சைவர்வாழ் | மாசின்ம |
| தின்னமலைப் | மானக்கு |
| திருவாலவாய் | மிக்கம |
| தீதகன்று | வந்ததொரு |
| தென்னன்வெற் | வின்கொள்ள |
| தொண்டர்மகிழ் | வையகம் |



